# சங்க அகப்பாடல்களில் பெண் மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்

ஆய்வாளர்

**செ.ல. அனிதா**

**பதிவு எண்: 17213154022003**

**தமிழ்**

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு




மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்
திருநெல்வேலி - 627012

ஜனவரி 2020

# மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

## திருநெல்வேலி - 627 012

## சான்றிதழ்

**“சங்க அகப்பாடல்களில் பெண் மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்”** என்னும் தலைப்பில் செய்துள்ள இவ்வாய்வு மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக தெ.தி. இந்துக் கல்லூரி தமிழ் ஆய்வு மையத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

நான் பல்கலைக்கழகத்தின் சட்டத்திட்டங்களுக்கு உட்பட்டு செய்த இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதே ஆகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆய்வு பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**செ.ல. அனிதா**
ஆய்வாளர்

**முனைவர் க.கோ. அனிதாகுமாரி,**
நெறியாளர்
இணைப்பேராசிரியர்,
தமிழ்க்கலை ஆய்வகம்,
தென் திருவிதாங்கூர் இந்துக்கல்லூரி,
நாகர்கோவில் 629 002.

இடம்: திருநெல்வேலி

தேதி:

## நன்றியுரை

**“சங்க அகப்பாடல்களில் பெண் மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்”** என்னும் இவ் ஆய்வேடு சிறப்பாக அமைவதற்கு அருள்புரிந்த எல்லாம் வல்ல இறைவனுக்கு என் இதயப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த தெ.தி. இந்துக் கல்லூரி, தமிழ்க் கலை ஆய்வகத்தில் முழுநேர ஆய்வாளராக ஆய்வு செய்ய அனுமதி அளித்த தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரி ஆட்சிக் குழுவினருக்கும். கல்லூரி முதல்வர் **முனைவர் சி. சிதம்பரதாணு** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

**சங்க அகப்பாடல்களில் பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்** என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு எனக்கு வழிகாட்டியாக இருந்த கலந்தாய்வாளர்களான **முனைவர் ஞா. ஸ்டீபன்**, மற்றும் **முனைவர். ஜெய கிருஷ்ணன்** அவர்களுக்கும், ஆய்வு மேற்பார்வையாளராக செயல்பட்டு, என்னை ஊக்கப்படுத்திய தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரித் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் **க.கோ. அனிதாகுமாரி** அவர்களுக்கு என் உளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வின் வெற்றிக்கு நன்முறையில் வழிகாட்டிய தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **தெ.வெ. ஜெகதீசன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சிறப்புற அமைய அனைத்துவகையிலும் துணைபுரிந்த என்னுடைய பெற்றோருக்கும், என் கணவருக்கும், எனது சகோதர சகோதரிக்கும் என் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சம்பந்தப்பட்ட நூற்களைத் தந்துதவிய தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரி நூலகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினை சிறந்த முறையில் தட்டச்சு செய்து ஆய்வேடு வடிவில் வடிவமைத்துத் தந்த செட்டிக்குளம் வின்டெக் கணினி நிறுவனத்திற்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

**அனிதா செ.ல.**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஆதி. | - | ஆதியாகமம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறிஞ். பா | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல்.பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| நெடு. வா | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். பா. | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |

| | | |
|---|---|---|
| பெரும். பா. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மதுரை. கா. | - | மதுரைக் காஞ்சி |
| மணிமே. | - | மணிமேகலை |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முல்லை. பா. | - | முல்லைப் பாட்டு |
| மேலது | - | மேலே குறிப்பிட்டுள்ள நூல் |
| வ. | - | வரி |
| வரி. | - | வரிகள் |

# பொருளடக்கம்

# ஆய்வுச் சுருக்கம்

**பெண்களும் உணவு மரபுகளும்**

சங்க இலக்கியங்கள் பல்வேறு கருத்துக்களை தன்னகத்தே கொண்டுள்ளன. அவற்றை ஆய்வதன் மூலம் பல்வேறு தகவல்களை உலகிற்கு எடுத்தியம்ப இயலும். உலக வாழ்வில் மனிதனின் அத்தியாவசியமானத் தேவைகளில் முதலிடம் பிடிப்பது உணவாகும். உயிர் உடலைச் சுமக்க இன்றியமையாதத் தேவையாக உணவு அமைகிறது. பண்டைத் தமிழர்களாகிய நம் முன்னோரின் உணவுப்பழக்க வழக்கம் இயற்கையை ஒட்டியே காணப்பட்டது. இயற்கையான முறையில் உணவு தானியங்களை விளைவித்து ஆரோக்கியமான உணவை நாகரிகமாகச் சமைத்து உண்டனர். தொல்காப்பியர் ஐவகை நிலத்திற்குரிய கருப்பொருட்களைக் குறிப்பிடும் போது தெய்வத்திற்கு அடுத்தபடியாக உணவினைக் குறிப்பிட்டுள்ளார்.

ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு வகையான உணவு முறைகள் பழக்கத்தில் இருந்தாலும் வணிகம், விருந்தோம்பல், இடம்பெயர்தல் அடிப்படையில் ஐவகை நிலமக்களும் ஐவகை நில உணவையும் உண்டு வாழ்ந்தனர். அவ்வுணவு ஆரோக்கியமாகவும், மனித உறவுகளை வலுப்படுத்துவதாகவும் அமைந்திருந்தது.

குறிஞ்சி நில மக்கள் தினை, ஐவனம், மூங்கிலரிசி, பால், தேன், பழங்கள், ஊனுணவு, கிழங்கு வகைகள், கள் ஆகியவற்றை உணவாகக் கொண்டனர். பழுத்த மிளகுகள் பாறைகளில் உதிர்ந்து கிடந்ததும், ஆழமான சுனைகளில் பெரிய அடியையுடைய மாமரத்தின் கனிகள் மற்றும் பலாமரத்தின் முற்றிய பழம் வெடித்துச் சிதறி கிடந்ததும் குறிஞ்சி நில மக்களின் உணவுச் சிறப்பினைக் கூறுகின்றன. உணவுப் பயிர் உற்பத்தி செய்வதில் நெல் மற்றும் கோதுமைக்கு அடுத்த படியாக தினைவகைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. தினை வகைகள் அதிக சத்து மிகுந்த உணவாகும். தினை, ஐவனம்

ஆகியவற்றை பயிரிட்டு, குற்றி அரிசியாக்கிய செய்தியை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

தேன், பால் இவற்றை தனித்தனியாகவும், தேனும் பாலும் கலந்து உண்ட செய்தியும் விளக்கப்பட்டுள்ளது. பலா விதையின் மாவினையும், புளியம்பழத்தையும் மோருக்கு அளவாகக் கலந்து மூங்கிலரிசிச் சோற்றினை மணம் வீசும்படியாக சமைத்துண்ட செய்தியை அறிய முடிகிறது. கள்ளுணவினை தயாரித்து இருபாலரும் உண்டு மகிழ்ந்தனர். இருப்பினும் கள்ளுணவினை வெறுத்த பெற்றோரும் சங்ககாலத்தில் இருந்தனர். வள்ளுவர் கள் குடித்தவர்களை நஞ்சு உண்டவருக்கு ஒப்பாகக் குறிப்பிட்டுள்ளார். அறுசுவை உணவு உண்டபின்பு இருபாலரும் வெற்றிலை உண்ணும் வழக்கம் இருந்ததை இலக்கியங்கள் சுட்டுகின்றன. சாப்பிட்டவுடன் வெற்றிலை சாப்பிடுவது ஜீரண சக்தியை அதிகரிக்கும் தன்மையுடையது.

முல்லை நில மக்கள் ஆடுமாடுகள் மேய்த்து அவற்றிலிருந்து கிடைத்த பால்பொருட்களை உணவாகக் கொண்டனர். காய்ச்சப்படாத பாலிலிருந்து வெண்ணெய் தயாரிக்கும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். நெல்லிக்கனி, விளாம்பழம், புளியம்பழம் போன்றவற்றையும் உணவாகக் கொண்டனர். ஊனுணவினை நெய்விட்டு பொரித்து விருந்தோம்பும் பண்பினைக் கொண்டிருந்தனர். மருதநிலம் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணையாகத் திகழ்ந்தது. இந்நிலத்தின் மக்கள் வேளாண்மையின் மூலம் கிடைத்த நெல்லுணவு, பாலுணவு, கொள்ளும், பயறும் கலந்த கூழுணவு, உழுந்தம் சோறு, நெற்பொரி, அவல், மாங்காய்ச் சாற்றுணவு, உழுந்தம் பணியாரம் இவற்றை உணவாகக் கொண்டனர்.

நெய்தல் நில மக்கள் மீனுணவினையும், மீன், உப்பு இவற்றிற்கு பண்டமாற்றாகப் பெற்ற உணவுப் பொருட்களையும் உணவாகக் கொண்டனர். மீனுணவினை குழம்புக் கறியாகவும், சுட்டும், கருவாடாகவும் பயன்படுத்தினர். மீனைப்பொரித்து உண்ட செய்தி காணப்படவில்லை. பாலைநில மக்கள்

புல்லரிசி, பருத்திக்கொட்டை, ஊனுணவு, கள் போன்றவற்றை முக்கிய உணவாகக் கொண்டனர். பாலை நில மகளிர் வறுமையில் வாடினாலும் விருந்தினரைச் சிறப்பாக உபசரித்ததைக் குறித்து எடுத்தியம்பப்பட்டுள்ளது.

சங்ககால மக்கள் இக்காலத்தைப் போன்று வெந்நீரையும், குளிர்ந்த நீரையும் பருகின செய்தி தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. குழந்தைகளுக்கு தாய்ப்பால் கொடுக்கும் பழக்கத்தினையும் சங்க இலக்கியம் தெளிவுபடுத்தியுள்ளது. இன்றைய நாகரிக காலத்தில் பல்வேறு வகையான கட்டுப்பாடுகள் உண்ணும் உணவு முறைகளில் விதிக்கப்பட்டும், மக்கள் தரம் குறைந்த உணவினை உண்டு வருகின்றனர். ஆனால் சங்ககால மக்கள் தங்களின் நிலங்களிலே கிடைக்கப் பெற்ற புரதம், கொழுப்பு நிறைந்த உணவினை உண்டு விருந்தோம்பலுடனும், உடல் உழைப்புடனும் ஆரோக்கியமாக வாழ்ந்து வந்தனர். இந்நாட்களில் அரிசி முதன்மையாக காணப்படுவதைப் போன்று சங்ககால மக்களும் அரிசிக்கு முதலிடம் கொடுத்தனர். உப்பின் பயனை அறிந்ததுடன் உணவின் சுவைகளை ருசித்து உண்டனர் என்பதை இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**நம்பிக்கைகளும், சடங்குகளும்**

சங்ககாலத்தில் மக்களிடையே காணப்பட்ட நம்பிக்கைகளும், சடங்குகளும் இக்காலத்திலும் சிற்சில மாற்றங்களுடன் நடைமுறையிலுள்ளதை ஆராய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. மக்கள் தலைமுறை, தலைமுறையாகப் பின்பற்றிவரும் செயல்கள் மரபு எனப்படும். இம்மரபுகளை சமூக நன்மை கருதி உருவாக்கப்பட்ட எழுதாச் சட்டங்கள் எனலாம். இயற்கையில் ஏற்படும் மாற்றங்களின் பயமும், நன்மைபெற வேண்டுமென்ற எண்ணங்களுமே நம்பிக்கை தோன்ற காரணங்களாகும். நம்பிக்கை என்ற சொல்லிற்கு விசுவாசம், ஆணை, சத்தியம், உறுதிப்பாடு, நிசம் என பொருள் கூறப்பட்டுள்ளது.

நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை, தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்பர். நிமித்தங்கள் நம்பிக்கைகளுக்கு முக்கியமானதாகும்.

நிமித்தங்கள் நாள், பொழுது, கோள், விலங்கு, பறவை, மாந்தர், மரம் போன்றவற்றின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றன. கண்துடித்தல், தும்மல், புரையேறுதல், கனவு காணுதல் போன்றவற்றை நிமித்தம் உணர்த்துவதாகக் கொண்டு நன்மை, தீமைகளைக் கணிக்கும் நம்பிக்கை தமிழரிடையே இருந்தது.

இறை நம்பிக்கை மக்கள் வாழ்வில் முக்கிய பங்கு வகித்தது. அவ்வகையில் கடவுள் வாழ்த்து பற்றிய குறிப்புகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இறைநம்பிக்கை மக்களை அறத்தோடும், ஒழுக்க நெறியோடும் வாழ வழி செய்கிறது. பெண்கள் சுற்றத்துடன் கூடி இறைவனை வழிபட்டதுடன், குழந்தைகளையும் வழிபடச் செய்தனர். இறைவனிடம் பல்வேறு வேண்டுதல்களை முன்வைத்தும், நேர்த்திக்கடன் செலுத்தியும் வழிபட்டனர். அன்றைய வழக்கமானது இன்றும் தொடர்ந்து வருகிறது. உயிரை எடுத்துச் செல்லும் கூற்றுவன் குறித்த நம்பிக்கையும், இம்மை, மறுமை, ஊழ்வினை, ஊழிக்காலம் போன்ற பல்வேறு நம்பிக்கைகள் சங்ககாலத் தமிழரிடம் காணப்பட்டது. தமிழரின் தைநீராடல் என்னும் பண்பாட்டு மரபும் மக்களிடம் காணப்பட்டது.

மக்கள், தாங்கள் செய்துவரும் வழிபாடு, விழா முதலிய சடங்குகளை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர். உதாரணமாக திருமணத்தின் போது, திருமண அறிவிப்பு தொடங்கி, திருமணம் முடியும் வரை பல்வேறு சடங்குகள் மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன. சிலம்புகழி நோன்பு, வீட்டினை அலங்கரிக்கும் சடங்கு, திருமணநாள் சடங்குகளாகிய மணநீராட்டுதல், இசைக்கருவி முழக்குதல், விளக்கேற்றுதல், மலரணிதல், காப்புக்கட்டுதல், மணப்பெண் உணவு சமைக்கும் சடங்கு போன்ற பல்வேறு சடங்குகளைக் குறித்து விளக்கப்பட்டுள்ளன.

குழந்தை பிறந்த ஐந்தாம் நாளில் குழந்தைக்கு ஐம்படைத்தாலி அணிவித்தல் ஒரு சடங்காகப் போற்றப்பட்டு வந்தது. தற்காலத்தில் தாலி என்பது திருமணத்தின் போது பெண்ணுக்கு மணமகனால் அணிவிக்கப்படும் மங்கலநாண் ஆகும்.

சங்ககால விழாக்களின் போது நடைபெற்ற புதுமணல் பரப்பும் செயலானது இக்காலத்திலும் தொடர்ந்து வருகிறது. விழாக்காலத்தில் மக்கள் தூக்கத்தையும் விடுத்து விழா நிகழ்ச்சிகளில் ஈடுபட்டனர் என்பன போன்ற பல்வேறு தகவல்களை இவ்வியலில் தெளிவாக ஆராயப்பட்டுள்ளன.

**பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் குடும்ப உறவுகள்**

குடும்பம் என்பது எல்லாச் சமூகங்களிலும் உள்ள ஓர் அடிப்படையான அமைப்பாகும். குடும்பத்தினின்று உறவு முறைகள் தோன்றுகிறது. களவு, கற்பு, திருமணம் போன்ற செயல்களின் மூலம் உறவு முறைகள் வலுவடைகின்றன. மக்களைப் பேணுதல், ஈகை, விருந்தோம்பல், ஒப்புரவறிதல் போன்றவற்றால் குடும்ப உறவுகள் பேணப்படுகின்றன. அடிப்படையில் குடும்பம் என்பது கணவன், மனைவி என்ற இரு உறவுகளில் அமைவதாகும். இது காலப்போக்கில் இரத்த உறவுடைய உறுப்பினர்களான மகன், மகள், உடன்பிறந்தோர், பேரன், பேத்தி எனும் நிலைகளில் விரிவடைந்து செல்வதாக உள்ளது.

மகன் பிறப்பினைக் குறித்து முதன்மையாகப் பேசப்பட்ட சங்ககால சமூகத்தில் பெண் குழந்தை பிறப்பு பற்றிய செய்தி மிகுதியாக இடம் பெறவில்லை. சங்க இலக்கியத்தில் தனிக்குடும்ப காட்சிகளே மிகுதியாக இடம் பெற்றுள்ளது. ஐங்குறுநூற்றின் முல்லைத் திணைப்பாடல்களில் தலைவன், தலைவி இருவரும் மகனுடன் இருந்த நிலையை மட்டுமே காண முடிகிறது. கூட்டுக்குடும்பம் பற்றிய செய்திகள் விரிவாக காணப்படவில்லை. பாட்டன், பாட்டி ஆகிய உறவு முறைகளும், மாமன், மாமி, அத்தை ஆகிய உறவு முறைகளும் இடம் பெறவில்லை. அம்பல், அலர் எனும் இருசொற்களும் அகவாழ்வோடு நெருங்கிய தொடர்புடையவை. ஊர்ப்பெண்டிர் கூறும் அலரானது வயது வந்த ஆணும் பெண்ணும் நெருங்கி உறவாடுவதற்கு சங்க கால சமுதாயம் உடன்படவில்லை என்ற சமூகத்தின் எதிர்ப்பைக் காட்டுகின்றது.

காதல் வயப்பட்ட தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ட தாயானவள் அவளை வெளியில் செல்லவிடாமல் வீட்டில் அடைத்து வைத்துக்

காப்பது ‘இற்செறிப்பு’ எனப்படும். தலைவியைத் தங்கள் மரபுப்படி ஏற்பாட்டுத் திருமணத்திற்கு உட்படுத்த எண்ணிய தாய் தனது மகள் காதலிலிருந்து விடுபட வேண்டி இற்செறித்துள்ளதைக் காண முடிகிறது. தமிழர் அகவாழ்வின் உயர்ந்த பண்பாக அறத்தொடு நிற்றல் திகழ்கிறது. களவொழுக்கத்தில் ஒழுகும் தலைவியின் அகவாழ்வை கற்பொழுக்கமாக மாற்றி சமுதாயத்தில் அவளுக்கு நன்மதிப்பைப் பெற்றுத் தருவதில் தோழி மிகுந்த அக்கறையுடன் செயல்படுவதுடன், தலைவியிடம் மிகுந்த அன்பும், உறவும் கொண்டவளாகத் திகழ்ந்தாள்.

தலைவன், தலைவியின் காதலை பெற்றோர் ஏற்றுக்கொள்ளாத போது, தலைவனுடன் தலைவி சென்று விடுதலை ‘உடன்போக்கு’ என சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. இற்செறிப்பு, வேற்றுவரைவு, பெற்றோர் உடன்படாமை போன்றவை உடன்போக்கிற்கான காரணங்களாக அமைகின்றன. மகள் உடன்போக்கு மேற்கொண்டது அறநெறி என்று தாய் கருதினாலும், தலைவியைப் பிரிந்த தாயின் உள்ளமானது பல நிலைகளில் ஏங்குகிறது. மகளுக்காகவே வாழ்ந்த தாயுள்ளமானது மகளின் எதிர்கால வாழ்வை நினைத்தும், அவள் செல்லும் வழி கொடியது எனவும், அவள் விளையாடிய இடத்தைப் பார்த்து வருந்துவதைக் குறித்தும், உடன்போக்கிற்கான துணிச்சலை ஏற்படுத்திய தலைவனையும் அவனது தாயையும் கோபத்துடன் கடிந்துரைப்பதைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளது. மகளுக்காகவே வாழ்ந்த தாயுள்ளம் பிரிவைத் தாங்காமல் ஏங்கித் தவிக்க, மகளோ தலைவனைக் காணும் வரை தான் தாயில்லாமல் நானில்லை என்ற உணர்வுடையவளாகத் திகழ்கிறாள். களவு வாழ்விற்கு அன்னை தடையாக இருப்பதால் இளைய நெஞ்சங்கள் தாயை வெறுக்கும் நிலையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. சமுதாயத்தில் இன்றும் இந்நிலையினை நாம் காண முடிகிறது.

சங்ககாலத் தமிழர்கள் வாழ்வில், பெரியோர் கூடிப்பேசி நடத்தும் திருமணங்களும் நிகழ்ந்துள்ளன. களவில் புணர்ந்து பிரிந்தவரை கற்பு நெறியில் சேர்க்கும் சான்றோர் இருந்ததை ஆராய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இதிலிருந்து திருமணம் குறித்த பல்வேறு செய்திகளும் கலந்துரையாடப்பட்டு முடிவெடுக்கும் மரபினை சங்கத்தமிழர் கொண்டிருந்ததை அறியலாம். சங்ககாலத்தில் ஒரே குடிக்குள் மட்டுமின்றி வேறு குடிகளுக்குள்ளும் திருமணம் நடந்ததைக் குறித்து விளக்கப்பட்டுள்ளது.

கற்புடைய பெண்டிரால் தந்தை, தலைவன் போன்றோர் செல்வவளம் பெற்று சிறப்படைந்ததையும், தலைவியின் மனைவாழ்க்கை சிறப்பைக் குறித்தும், மன்னிக்கும் மாண்பினைக் குறிக்கும் பல தலைப்புகளில் ஆராய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

**பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமூக உறவுகள்**

ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கும் சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளை சமூகம் என்கிறோம். சங்க இலக்கியம் காட்டும் சமூகமானது, மக்களின் வாழ்க்கையினை எடுத்துரைக்கும் சிறந்த பெட்டகமாகவும் மக்கள் வாழ வேண்டிய நெறிமுறைகளை வெளிக்கொணர்வதாகவும் திகழ்கின்றன. சங்க காலத்தில் ஐவகை நிலங்களின் அடிப்படையில் வளர்ச்சியடைந்த சமுதாய அமைப்பு இருந்தது. விருந்தோம்பல் மிக முக்கிய இடம் பெற்றிருந்தது. சாவைத் தவிர்க்கின்ற அமிர்தமாக இருந்தாலும், விருந்தினரை வெளியில் இருக்க வைத்து உண்பது தவறான செயலாகக் கருதப்பட்டது. பெண்டிரின் விருந்தோம்பல் உலகளாவிய நிலையில் உறவை வலுப்படுத்துவதாக காணப்பட்டது. தலைவனது பிரிவிலும் கூட பெண் விருந்தோம்பும் தலைமை பெற்றதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. மகளிர் ஈதல் பண்பிலும் சிறந்து விளங்கினர். இல்லத்தில் மகளிர் விளக்கேற்றி இல்லற விளக்காகத் திகழ்ந்தனர். சங்க காலத் தமிழர்கள் ஒன்று சேர்ந்து விழாக்களைக் கொண்டாடியது சமூகத்தில் ஒரு பிணைப்பை, உறவை ஏற்படுத்தியது. மன்றங்கள் அமைத்து மக்கள் அங்கு கூடி விவாதங்கள் மற்றும் அறிவார்த்தமான செய்திகளைப் பகிர்ந்து கொண்டனர். மன்றத்தில் விழாக்களின் போது பல்வேறு கலை நிகழ்ச்சிகளும் நிகழ்த்தினர். சங்ககால

பொருளாதாரத்தில் பெண்களும் முக்கிய பங்காற்றினர். வேளாண்மை, நாற்று நடுதல், தினைகாத்தல், களையெடுத்தல், அறுவடை செய்தல், நெல்லினைக் குற்றி அரிசியாக்குதல், மோர் மற்றும் தயிர் விற்றல், மீனை உப்பிட்டு உலர்த்துதல் போன்ற செயல்களில் ஈடுபட்டனர். பண்டமாற்று வணிகத்திலும் சிறந்து விளங்கினர். தங்கள் நிலத்திலுள்ள பல்வேறு பொருள்களைப் பண்டமாற்று செய்து தங்களுக்குத் தேவையானப் பொருட்களைப் பெற்றனர்.

சலவைத் தொழில், நூல் நூற்றல், சிறு மற்றும் குறுதொழில்களில் ஈடுபட்டு வாழ்வில் தன்னிறைவு அடைந்தனர். பெண்கள் வணிகத்திலும் முனைப்புடன் செயல்பட்டனர். மலர் விற்றல், பனையோலைப் புட்டி செய்து விற்றல் போன்ற கைவினைத் தொழில்களில் ஈடுபட்டனர். பாசறைப் பணிப்பெண்களும் சங்ககாலத்தில் இருந்தனர். இவ்வாறு சங்ககால சமூகத்தில் ஐவகை நிலத்திலும் காணப்பட்ட பொருளாதாரத்திற்கு அடிப்படையான தொழில் முறைகளைக் குறித்தும், மக்கள் தங்கள் உடலுழைப்பைப் பயன்படுத்தி தன்னிறைவு அடைந்தது குறித்தும் சமூகத்தின் வளர்ச்சிக்கும் பண்பாட்டுச் சிறப்பிற்கும் மகளிர் முதன்மை காரணியாக அமைந்ததைக் குறித்தும் விரிவாக ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

## முன்னுரை

சங்க இலக்கியங்கள் தமிழர்களின் வாழ்வியல் கூறுகளை மிகத் தெளிவாக உணர்த்தும் காலக் கண்ணாடியாகும். பழந்தமிழர் மரபுகளை வரலாற்றில் பதிய வைக்கும் மகுடமாகவும், தமிழரின் பண்பு நலனையும் சமூக வரலாற்றையும் காட்டும் காலப் பெட்டகமாகவும் திகழ்கின்றன. இயற்கையானது பண்டைத் தமிழர் வாழ்விலிருந்து பிரிக்க முடியாத ஓர் அங்கமாக விளங்குகிறது. மக்கள் இயற்கையோடு இயைந்து, இயற்கையைச் சார்ந்த உணவுப் பொருட்களை உண்டு, இன்பமாக சமூக உறவுடன் வாழ்ந்து வந்தனர். சங்க அகப்பாடல்களில் காணப்படும் மரபுகள் பழந்தமிழர் வாழ்வியலின் நோக்கையும், போக்கையும் காட்டுவனவாகும். தமிழர்களின் வரலாற்றுக்கும், கற்பனைத் திறனுக்கும், அறிவுப் பூர்வமான செயல்களைக் கூறுவதற்கும் சங்க இலக்கியத்திற்கு தனிச் சிறப்புண்டு.

சங்ககால மக்களின் உணவு முறைகள், நம்பிக்கைகள், சடங்குகள், விழாக்கள், குடும்ப உறவுகள், இல்லறப்பாங்கு, மன்றம், பண்டமாற்று வணிகம், சிறுகுறு தொழில்கள் மற்றும் நிலத்தின் சூழலுக்கேற்ப மக்களின் வாழ்வு முறைகள் அமைந்துள்ளன என்பதைக் குறித்து விரிவாகவும், நுட்பமாகவும் பேசுவதாக இவ்வாய்வு அமைந்துள்ளது. சங்க அகப்பாடல்களில் காணப்படும் தமிழரின் மரபுகளைக் குறித்து இனங்காணும் வகையிலும் இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கியங்களை இயற்றிய புலவர்கள் அவர்கள் கருத்துக்களை கற்பனை நயத்துடனும் இயற்கைச் சூழலின் அடிப்படையிலும் புலப்படுத்தியுள்ளனர். மக்களின் தொன்மை மரபுகளை அடையாளம் காண்பதற்கு இவை துணைபுரிகின்றன. சங்க இலக்கியத்தில் பல்வேறு ஆய்வுகள் மேற்கொண்டாலும் அவை புதுப்புது விருட்சங்களாக, படிக்கப்படிக்க பல புது கருத்துக்களைக் கொடுக்கும் கருத்தாழம் மிக்கதாக விளங்குகிறது. அவ்வகையில் ''சங்க அகப்பாடல்களில் பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்'' என்பது ஆய்வுத் தலைப்பாக தேர்வு செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கிய அகப்பாடல்களில் இடம்பெறும் பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகளைத் தொகுத்து, வகைசெய்து ஆய்வுக்குட்படுத்தி சங்ககால பண்பாட்டு மரபுகளைக் கண்டறிவதே ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுக்களம்

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் உள்ள எட்டு அகநூல்களும் ஆய்வேட்டிற்குரிய களமாக அமைந்துள்ளன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கிய நூல்களில் அகப்பாடல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய எட்டு நூல்களும் ஆய்வின் எல்லையாக அமைந்துள்ளன.

## ஆய்வின் அணுகுமுறை

ஆய்வின் முழுமைக்கும், சிறப்பிற்கும் முதற்காரணமாக அமைவன ஆய்வின் அணுகுமுறைகள் ஆகும். அவ்வகையில் இவ்வாய்வு சங்க அக இலக்கியங்களை மையமாகக் கொண்டு அமைவதால் பாடல்களைப் பகுத்தும், விளக்கியும் ஆராய வேண்டியுள்ளது. எனவே மூன்று வகையான ஆய்வு அணுகு முறைகளைக் கொண்டு மேற்கொள்ளப்பட்டுள்ளது. அவை,

1. விளக்கமுறை அணுகுமுறை (Descriptive Approach)
2. பகுப்பு முறை அணுகுமுறை (Analytical Approach)
3. சமுதாயவியல் அணுகுமுறை (Sociological Approach)

## ஆய்வின் கருதுகோள்

சங்ககால மக்களின் வாழ்வியல் கூறுகளில் குறிப்பாக உணவு, நம்பிக்கை, சடங்குகள், குடும்பம் மற்றும் சமூக உறவுகளைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபட விளக்குகின்றன என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்கள் பற்றிய ஆய்வுகளில் வாழ்வியல், வரலாறு, இயற்கைச் சார்ந்த அகப்பாடல்களின் தன்மைகளை விளக்கும் வகையில் பல்வேறு கருத்தரங்குகள் நடத்தப்பட்டு கட்டுரைகள் வெளிவந்துள்ளன. “எட்டுத்தொகையில் அகப்பாத்திரங்கள்” என்னும் தலைப்பில் தா. சுஜா பாக்கிய பிருந்தா அவர்கள் முனைவர் பட்ட ஆய்வுக்காக ஆராய்ந்துள்ளார். இவ்வாய்வு அகப்பாடல்களின் பாத்திரங்களை முன்வைத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளது. சங்க அகப்பாடல்களில் நிலவியல் பின்புலம் என்னும் தலைப்பில் இரா. சுஜித்திரா கிருஷ்ணகுமாரி அவர்கள்

முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டுள்ளார். இவ்வாய்வு சங்க இலக்கியத்தில் நிலவியல் கருத்துக்கள் விரவி இருக்கின்றன என்பதை அடையாளப் படுத்துவதாக உள்ளது. அந்த வகையில் முற்றிலும் மாறுபட்டு சங்க இலக்கிய அகப்பாடல்களில் பெண் மாந்தர்கள் வெளிப்படுத்துகின்ற சமுதாய மரபுகளைக் கண்டறிந்து வெளிக்கொணர்வதுடன் அவர்களின் உணவு மரபுகள், உணவு தயாரித்தல், நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவை இக்காலச் சூழலுடன் எவ்வாறு பொருந்துகின்றது என ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. சங்கத் தமிழரிடம் காணப்பட்ட குடும்ப உறவுகள், பண்டமாற்று வணிகம் மற்றும் மகளிர் மேற்கொண்ட பல்வேறு தொழில்கள் போன்றவை மனித வாழ்விற்கும் சமூக உறவிற்கும் பின்புலமாக அமைந்துள்ள மரபினை வெளிக்கொணர்வதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வின் ஆதாரங்கள்

ஆதாரங்கள் ஆய்வேடு தயார் செய்வதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இது முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இருவகைப் படுத்தப்பட்டுள்ளது.

## முதன்மை ஆதாரங்கள்

எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் உள்ள அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற எட்டு மூல நூல்களும் முதன்மை ஆதாரங்களாக எடுத்தாளப்பட்டுள்ளன.

### துணைமை ஆதாரங்கள்

தொல்காப்பியம் மற்றும் ஆய்வுக்குத் துணை புரிகின்ற நூல்களாகிய கட்டுரைகள், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியம், அகராதிகள், திறனாய்வு நூல்கள் போன்றவை துணைமை ஆதாரங்களாக அமைந்துள்ளன.

### ஆய்வின் மொழிநடை

ஆய்வின் மொழி நடையானது தூய தமிழ் சொற்களோடும், கற்போர் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் எளிய தமிழ் நடையிலும், அடிக்குறிப்புகளில் அந்தந்த ஆசிரியர்களின் மொழிநடையும் பின்பற்றப்பட்டுள்ளது.

### ஆய்வுப் பகுப்பு

‘‘சங்க அகப்பாடல்களில் பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள்’’ என்னும் தலைப்பில் உள்ள இந்த ஆய்வானது ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

இயல் ஒன்று - ஆய்வு அறிமுகம்

இயல் இரண்டு - பெண்களும், உணவு மரபுகளும்

இயல் மூன்று - நம்பிக்கைகளும், சடங்குகளும்

இயல் நான்கு - பெண் மாந்தர்கள் வெளிப்படுத்தும் குடும்ப உறவுகள்

இயல் ஐந்து - பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமூக உறவுகள்

இயல் ஆறு - ஆய்வு நிறைவுரை

என ஆறு இயல்களாக பிரிக்கப்பட்டு அவற்றிற்கு முறையே விளக்கங்களும், கருத்துக்களும் தரப்பட்டுள்ளன.

## இயல் ஒன்று

**ஆய்வு அறிமுகம்** என்னும் முதல் இயலில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வின் கருதுகோள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் ஆதாரங்கள், ஆய்வு மொழிநடை, ஆய்வுப் பகுப்பு என்னும் தலைப்புகளில் ஆய்வு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

## இயல் இரண்டு

**பெண்களும் உணவு மரபுகளும்** என்னும் இரண்டாவது இயலில் உணவின் விளக்கம் குறித்தும் உணவின் முக்கியத்துவம் என்ன என்பதையும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை நில மக்களின் உணவு வகைகள் குறித்தும், உணவு தயாரித்தல், விருந்தோம்பல் போன்ற சிறந்த பண்புகளையும் இவ்வியல் விளக்குகிறது.

## இயல் மூன்று

**நம்பிக்கைகளும் சடங்குகளும்** என்ற மூன்றாவது இயலில் சங்ககால மக்களின் பல்வேறு நம்பிக்கைகளைக் குறித்து எடுத்தியம்பப்பட்டுள்ளது. நம்பிக்கை தோன்றுவதற்கானக் காரணங்கள் என்ன என்பதையும், நிமித்தம் என்றால் என்ன என்பதையும், நிமித்தங்களின் வகைகளைக் குறித்தும், புள், விலங்கு, மரம் இவற்றால் நிமித்தங்கள் புலப்படுத்தப்படுவதைக் குறித்தும் விளக்கப்பட்டுள்ளது. மக்களின் உடலில் தோன்றும் குறிப்புகளை வைத்தும் நிமித்தம் உணரப்பட்டது. சங்ககால மக்கள் இறை நம்பிக்கையுடன் இறைவனை வழிபட்டு வாழ்ந்து வந்ததைக் குறித்தும் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

சடங்கு என்பதற்கான விளக்கம், திருமணச் சடங்கின் தோற்றமும், தேவையும் குறித்தும், திருமணத்திற்காக மேற்கொள்ளப்படும் சடங்குகளைக் குறித்தும், இசைக்கருவி முழக்குதல், விளக்கேற்றுதல், மலரணிதல், காப்பு கட்டுதல் போன்ற வழக்கங்களைப் பற்றியும், சிறுவர்களுக்கு ஐம்படைத் தாலி அணிவிக்கும் மரபினைக் குறித்தும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. மக்கள் பல்வேறு விழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்தனர் என்பதையும் பலியிடுதல் போன்ற சடங்குகளை மேற்கொண்டதைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் நான்கு

**பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் குடும்ப உறவுகள்** என்னும் நான்காம் இயலில் குடும்பத்திற்கான விளக்கம், குடும்பம் உருவாகக் காரணங்கள், குடும்ப உறவு முறைகள், தனிக்குடும்பம் மற்றும் கூட்டுக் குடும்ப முறை இவற்றை ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது. களவு வாழ்வில் அம்பல், அலர் தூற்றுதல், தோழி அறத்தொடு நிற்கும் நிலை, தோழியின் அறிவாற்றல் சிறப்பு, தலைவி உடன்போக்கு மேற்கொள்வதற்கான காரணங்கள் என்ன என்பதைக் குறித்தும், உடன் போக்கிற்குப் பின்னர் தாயின் மனநிலை மற்றும் மகளின் மனநிலை போன்றவற்றையும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. உடன்போக்கு அறநெறி என்று தாய் எண்ணினாலும் தாயின் ஏக்கம், மகளை இற்செறிக்காமல் விட்டு விட்டேனே என்று தாயானவள் புலம்பி, சாவை விரும்புதலும், மகளின் எதிர்கால வாழ்வைக் குறித்து வருந்துதலும், சுரவழியின் வெம்மையைக் குறித்து வருந்துதலும் ஆராயப்பட்டுள்ளன.

சங்ககாலத்தில் உடன்போக்குமணம் மட்டுமன்றி பெரியோர் பேசி முடிக்கும் திருமணங்களும் நிகழ்ந்துள்ளன. திருமணமானது ஒரே குடிக்குள் மட்டுமின்றி வேறு குடிகளுக்குள் நடந்ததையும், பொருள் கொடுத்து மணந்து கொண்டதையும், கற்புடைய பெண்டிரின் சிறப்புகளைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. இவ்வாறு சங்ககால குடும்ப உறவுகளைக் குறித்து இவ்வியலில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

## இயல் ஐந்து

**பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமூக உறவுகள்** என்னும் ஐந்தாம் இயலில் சங்ககால சமுதாய அமைப்பு, மகளிரின் விருந்தோம்பல், ஈதல் சிறப்பு, மகளிர் இல்லத்தில் விளக்கேற்றி இல்லற விளக்காக செயல்பட்டமை போன்றவை விளக்கப்பட்டுள்ளன. விழாக்களின் போது பல ஊர்களிலிருந்தும் மக்கள் கூடி வந்து விழா கொண்டாடினர். இதனால் சமூக உறவுகள் வலுவடைந்தது. சங்க காலத்தில் மக்கள், மன்றம் என்ற ஒன்றை அமைத்து விவாதங்கள் நிகழ்த்தவும், அறிவார்த்தமான செய்திகளைப் பகிர்ந்து கொள்ளவும், விழாக்களின் போது நாடகங்களும், நடனங்களும் நிகழ்த்தவும் பயன்படுத்தினர். சங்ககால சமூகத்தில் பொருளாதார உற்பத்தியில் பெண்களும் பெரும் பங்கு வகித்தனர். வேளாண்மை, தினைகாத்தல், விதைத்தல், நாற்று நடுதல், களையெடுத்தல், அறுவடை செய்தல், கதிரடித்தல், தினையை உலரவைத்துக் குற்றுதல், மோர் விற்றல், மீனை உப்பிட்டு உலர்த்துதல் போன்றவற்றில் முக்கியப் பங்காற்றினர். பண்டமாற்று வணிகத்திலும் பெண்கள் சிறந்து விளங்கினர். சலவைத் தொழில், நூல் நூற்றல் மற்றும் சிறுகுறுதொழில்

முறைகளில் பெண்களின் ஈடுபாடு அதிகமாகக் காணப்பட்டது. பெண்கள் வணிகத்தில் ஈடுபட்டு மலர் விற்றல், பனையோலைப் புட்டி செய்து விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டனர். இவ்வாறாக பெண்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு சமூக உறவுகளை வலுபடுத்தியதைக் குறித்து விரிவாக இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் ஆறு

**ஆய்வு நிறைவுரை** என்னும் ஆறாவது இயலில் மேற்குறித்த இயல்கள் வழியாகக் கண்டறிந்த உண்மைகளைத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது.

நாம் வாழும் இன்றைய இயந்திரமயமான உலகில் நம் முன்னோரைப் பற்றிய பல்வேறு செய்திகளை அறிந்து கொள்ள இலக்கியங்கள் நமக்கு உதவி செய்கின்றன. அவ்வகையில் இலக்கியங்களின் மூலம் பெறப்பட்ட சங்ககால தமிழர்களின் சமுதாய மரபுகளை ஆராய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

## துணைநூற்பட்டியல்

ஆய்வுநிறைவுரையைத் தொடர்ந்து ஆய்வுக்குத் துணைபுரிந்த நூல்களின் துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளது. புகைப்படங்கள் பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன.

நெல்லிக்கனி

விளாம்பழம்

புளியம்பழம்

மருத நில உணவு வகைகள்

பாலுணவு

கஞ்சியுணவு

உழுந்தம் சோறு

உழுந்தம் பணியாரம்

தலைவி சோறும், புளியங்கறியும் தயாரித்தல்

நெற்பொரி உணவு

அவல் உணவு

நொய்யரிசி உணவு

மாங்காய்ச் சாற்றுணவு

பழஞ்சோறு

பாகற்காய் உணவு

கள்ளுணவு

நெய்தல் நில உணவு

மீனுணவு

கள்ளுணவு தயாரித்தல்

விருந்தோம்பல்

பாலை நில உணவு வகைகள்

புல்லரிசி உணவு

எயிற்றியர் உணவு சமைத்தல்

பருத்திக் கொட்டை உணவு

ஊனுணவு

கள்ளுணவு

எயிற்றியர் விருந்தோம்பல்

பனங்குருத்து உணவு

தண்ணீரைத் தெளிய வைத்தல்

தாய்ப்பால்

சமுதாய மரபு

தொகுப்புரை

## முன்னுரை

உணவு, உடை, உறைவிடம் என்னும் மூன்றும் மனிதர்களின் அடிப்படைத் தேவைகளாகும். மனித இனத்திற்கு மட்டுமன்றி அனைத்து உயிரினங்களுக்கும் உணவு அடிப்படைத் தேவையாகும். உலக வாழ்வில் மனிதனின் முக்கியத் தேவைகளில் முதலிடம் பிடிப்பது உணவாகும். பண்டையத் தமிழரின் உணவுப் பழக்க வழக்கங்கள் நிலத்தின் தன்மையை ஒட்டியே காணப்பட்டது எனலாம். பண்டையத் தமிழர்களாகிய நம் முன்னோர்கள் இயற்கையான முறையில் உணவு தானியங்களை விளைவித்து ஆரோக்கியமான உணவுகளைச் சமைத்து உண்டு வாழ்ந்து வந்தனர். உலகில் முதன் முதலில் உணவை நாகரிகமாய்ச் சமைத்து உண்டவர் தமிழர்களாவர். ஒவ்வொரு நிலத்திற்கும், ஒவ்வொரு வகையான உணவு முறைகள் பழக்கத்தில் இருந்தாலும் வணிகம், விருந்தோம்பல், இடம் பெயர்தல் அடிப்படையில் எல்லா மக்களும் எல்லா நிலத்தின் உணவு வகைகளையும் உண்டு வாழ்ந்திருக்கின்றனர். அவ்வுணவு ஆரோக்கியமாகவும், மனித உறவுகளை மேம்படுத்துவதாகவும் அமைந்திருந்தது.

உணவு நம் வாழ்விற்கு அடிப்படையாக இருந்தாலும் அது பண்பாட்டின் ஒரு கூறு ஆகும். ஒரு குறிப்பிட்ட பகுதியின் உணவு மரபு என்பது அதன் சுற்றுச் சூழல், பருவ நிலை, மண்வளம், நீர்வளம் ஆகியவற்றைப் பொறுத்து நிர்ணயிக்கப்படுகின்றது. உணவு, சமூகத்தை ஒன்றிணைக்கும் கூறாகவும், பொதுநலம் பேணி பண்பை வளர்க்கும் கூறாகவும் விளங்குகின்றது. இவ்வியல் திணைவாரியான உணவு முறைகளைப் பற்றியும் உணவு தயாரிப்பது குறித்தும் ஆய்வதாக அமைகின்றது.

## உணவு - விளக்கம்

உடல் நிலைத்து நிற்பதற்குக் காரணம் உணவாகும். உணவு, உடலை வளர்ப்பதற்கு மட்டுமன்றி உள்ளத்தையும், அதனால் உருவாகும் பண்பாட்டை வளர்ப்பதற்கும் துணை புரிகின்றது. உணவு என்னும் சொல் உண் → உண → உணவு என்ற அடிப்படையில் அமைகின்றது. 'உண்' என்பதே வேர்ச்சொல்லாக அமைவதால் உண்ணப்படுவது உணவாகும் என பொருள் விளக்கம் தருகின்றது. உணவு வகைகளைப் பற்றி இலக்கியம் "உணவெனப்படுவது நிலத்தொடு நீரே" - என (புறம் 18: 21) குறிப்பிடுகிறது.

தொல்காப்பியர் உணவினை, "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை"[1] என குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியத்தில் ஐவகை நிலங்களுக்கும் கருப்பொருள் கூறும் போது உணவு பற்றியும் கூறியுள்ளார். இதனை,

| | | |
|---|---|---|
| முல்லை | - | வரகு, சாமை |
| குறிஞ்சி | - | ஐவன நெல், தேன், தினை, மூங்கிலரிசி |
| மருதம் | - | செந்நெல், வெண்ணெல் |
| நெய்தல் | - | மீன், உப்பிற்கு விலை மாறிய பண்டம் |
| பாலை | - | ஆறலைத்த, சூறையாடிய பொருள் |

என்பதால் அறியலாம்.

## உணவின் முக்கியத்துவம்

உயிர் உடலைச் சுமக்க இன்றியமையாதத் தேவையாக உணவு அமைகின்றது. மக்களின் பசியைப் போக்க உணவளித்தல் சிறந்த அறமாகப்

---

[1] இளம்பூரணனார் உரை.தொல்.பொருள்-நூற்-20

போற்றப்பட்டது. மேலும் பசித்தவர்களுக்கு உணவளிப்பவர்கள் தேவர்களுக்கு நிகராக போற்றப்பட்டனர். நமது உடல் ஆரோக்கியமாக இருப்பதிலும், உடல் நலம் சீர்கேடு அடைவதிலும் முக்கியப்பங்கு வகிப்பது நாம் உட்கொள்ளும் உணவாகும். எனவே நாம் உண்ணும் உணவில் தனிக்கவனம் செலுத்த வேண்டும். திருமூலரும் இதனை,

> ‘‘உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
> உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே’’

என தன்னுடைய உடலைத் தான் பேணிக் காத்ததை திருமந்திரத்தில் பதிவு செய்துள்ளார். உணவுத் தேவையினை சங்க கால மக்கள் பலவகைகளில் நிறைவேற்றிக் கொண்டதை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

## குறிஞ்சி நில உணவு வகைகள்

மலையும், மலை சார்ந்த பகுதியினையும் உடைய குறிஞ்சி நில மக்கள் பல வகையான உணவினை உண்டனர். அவை அவர்கள் சார்ந்த நிலத்தில் விளைவனவாகவும், கிடைப்பனவாகவும் இருந்தன. இந்நிலத்தின் மக்கள் தினை, ஐவனம், மூங்கிலரிசி, பால், கள், ஊனுணவு, கிழங்கு வகைகள், பழங்கள், தேன் ஆகியவற்றை உணவாகக் கொண்டனர்.

## இயற்கை உணவுகள்

குறிஞ்சி நில மக்கள் இயற்கை உணவை உண்டு மகிழ்ந்தனர். பழுத்த மிளகுகள் பாறைகளில் உதிர்ந்து கிடந்ததும், ஆழமான சுனைகளில் மாமரத்தின் கனிகள் மற்றும் பலா மரத்தின் முற்றிய பழம் வெடித்து சிதறிக் கிடந்ததும் குறிஞ்சி நில மக்களின் உணவு சிறப்பினைக் கூறுகின்றன. இத்தகவலை,

"பழமிழகு உக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீம்கனி உதிர்ந்தென
புள் ஏறி பிரசமொடு ஈண்டி, பலவின்
நெகிழ்ந்து உருநறும் பழம் விளைந்த தேறல்"[2]

என குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது.

### பலாச்சுளையும், சோறும்

சங்க காலத்தில் சோற்றுணவோடு பலாச்சுளை உணவையும் உண்டனர். பல குலைகளையுடைய பலாவினது இனிய சுளைகள் பாறைகளில் வீழ்ந்து கிடந்ததையும், அவற்றை பெருஞ்சோற்றுத் திரளுடன் குறிஞ்சி நில மக்கள் உண்டதையும் குறிஞ்சிக் கலி எடுத்தியம்புகின்றது. இதனை,

"பல்கோட் பலவின் பயிர்ப்பு உறுதீம் கனி
அல்கு அறைக் கொண்டு ஊன் அமலைச் சிறுகுடி"[3]

என்பதால் அறியலாம். பழங்கள் சிதறிக் கிடந்தன என்பதால் பறிப்பவர் இன்றி உண்பாருக்கு அவை எளிதாக கிடைத்ததை உணர முடிகிறது.

### தினை உணவு

உணவுப் பயிர் உற்பத்தி செய்வதில் நெல் மற்றும் கோதுமைக்கு அடுத்தபடியாக தினை வகைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. தினை வகைகள் அதிகச் சத்து மிகுந்த உணவாகும். சங்ககால மக்கள் தினை, ஐவனம் ஆகியவற்றைப் பயிரிட்டதையும் அவற்றைக் குற்றி அரிசியாக்கிய செய்தியையும் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. தினை, ஐவனம் ஆகியவற்றுள் தினை பற்றிய செய்திகள் அதிகமாக குறிப்பிடப்பட்டுள்ளன.

---

[2] குறிஞ். பா. 187-190
[3] கலித். 50: 12-13

எனவே குறிஞ்சி நில மக்களின் சிறப்பு உணவாக தினை விளங்கியமையை அறியலாம். இதனை நற்றிணை 206; 209; குறுந்தொகை 335; 375 போன்ற பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

குறிஞ்சி நில மக்கள் உணவிற்காக தோரை நெல், ஐவன நெல், வெண்சிறுகடுகு, இஞ்சி, மிளகு, மஞ்சள், அவரை இவற்றைப் பயிரிட்டனர். என்ற செய்தியை,

> ''குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி
> ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி
> இஞ்சி, மஞ்சள், பைங்கறி பிறவும்''[4]

என குறிப்பிடுகிறது. இதன் மூலம் பயிரிட்ட உணவுப் பொருட்களை உண்டுள்ளனர் என உணர முடிகிறது.

ஐவன நெல்லாகிய மலை நெல்லிலிருந்து எடுக்கப்பட்ட ஐவன அரிசியை உணவாகப் பயன்படுத்தியச் செய்தியை,

> ''அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி''[5]

எனவும்,

> ''மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி''[6]

என்பதாலும் அறியலாம். தினையையும், ஐவனத்தையும் உணவாக்கிக் குறிஞ்சி நில மக்கள் உண்டனர் என்ற செய்திகள் நேரிடையாகக் குறிப்பிடப்படவில்லை என்றாலும் பயிரிடப்பட்டதால் உண்டனர் என்பது தெளிவாகிறது.

---

[4] மது.கா - 287-289
[5] குறுந். 100: 1
[6] மேலது - 371

### தினைமாவு

தினையரிசியைக் குற்றி தினை மாவு எடுத்து உணவாக உட்கொண்டதை,

> "..................... குறமகள்
> மென்றினை நுவணை யுண்டு"[7]

என்ற பாடலடி தெரிவிக்கின்றது. நுவணை என்பது தினை மாவைக் குறிக்கிறது. இதிலிருந்து தினைமாவு உண்ணப்பட்டதை அறியலாம்.

### மூங்கில் நெல்

குறிஞ்சி நில மக்கள் மூங்கில் நெல்லைப் பாறையாகிய உரலில் இட்டு யானைத் தந்தத்தை உலக்கையாகப் பயன்படுத்தி குற்றினர். புடைப்பதற்கு சேம்பின் இலையைச் சுளகாகப் பயன்படுத்தினர். இதனை,

> "கோடு உலக்கையாக நல்சேம்பின் இலை சுளகா
> ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து, இருவாம்"[8]

என்னும் பாடலடிகள் மூங்கில் நெல் குறிஞ்சி நில மக்களின் உணவாக இருந்ததைப் புலப்படுத்துகின்றது. இத்தகவலை கலித்தொகை 42-வது பாடலும் எடுத்துரைக்கின்றது.

### பலாக்கொட்டை உணவு

பலாக்கொட்டை பழந்தமிழகத்தில் குறிஞ்சி நில மக்களின் முக்கிய உணவுப் பொருட்களில் ஒன்றாகும். கானவன் மகள் ஒருத்தி புலிப்பல் இணைக்கப்பட்ட தாலியை அணிந்து அசோகந்தளிராலான ஆடையை உடுத்தி

---

7 ஐங். 285 1-2
8 கலித். 41

கலைமான் உண்ணும் போது உதிர்த்த பலாப்பழத்தின் விதையை மலையிடத்தே பெறுபவள் என அகநானூறு கூறுகிறது. இச்செய்தியை,

''புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி,
ஒலிக்குழைச் செயலை உடை மாண் அல்குல்
.........................................................
கல் கெழு சிறுகுடிக் கானவன் மகளே''[9]

என எடுத்துரைக்கிறது. இதனால் பலாக்கொட்டை உணவினை உண்டதை நாம் அறிய முடிகிறது.

## தேன்-பால் உணவு

தேனீ மலர்களிலிருந்து பூந்தேனை உறிஞ்சி அதனைத் தேன் கூட்டில் சேமித்து வைக்கும். மக்கள் அதனைப் பயன்படுத்துகின்றனர். குறிஞ்சி நில மக்கள் பாறை இடுக்குகளிலும், மர உச்சியிலும் இருக்கும் தேனை உணவாக உண்டனர். இந்நிலத்தின் தேன் மலைத்தேன், குறிஞ்சித்தேன் என்று அழைக்கப்படுகிறது. இதனை,

''பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்''[10]

என்பதால் அறியலாம். மரக்கிளையிலுள்ள தேன் கூடு கசிந்து கற்குழியில் விழ, அதனை குறிஞ்சி நிலச் சிறுவர்கள் பருகினர். இத்தகவலை,

''புள்ளுறுத்துக் கசிந்த தீந்தேன் கல் அளைக்
......................................................
குறக்குறு மாக்கள் உண்ட மிச்சில்''[11]

எனக் குறிப்பிடுகிறது.

---

[9] அகம் 7: 18-22
[10] அகம் 2-4
[11] நற்.168: 1-4

## பால்

பால் ஒரு சத்து நிறைந்த உணவாகும். வயது வேறுபாடின்றி இவ்வுணவு அனைவருக்கும் பொருந்துகின்ற உணவாகும். சங்க காலத்தில் குறிஞ்சி நிலப்பெண்களுக்கு, பால் உணவு கொடுத்தல் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. பாலினை வள்ளம் எனும் பொன்னாலான பாத்திரத்தில் வைத்திருந்ததையும், குறிஞ்சி நிலப் பெண் பாலுண்ண மறுத்ததையும் தோழி கூறுவதிலிருந்து அறிய முடிகிறது. இதனை,

"பொன்செய் வள்ளத்துப் பால் கிழக்கு இருப்ப"[12]

எனவும்

"பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு"[13]

என்ற வரிகளால் அறியலாம். அக்காலத்தில் பாலிலுள்ள சத்துக்கள் பற்றிய அறிவியல் உண்மையை அறியாதவராயினும், உடலுக்கு வலிமை சேர்ப்பதை அனுபவத்தால் உணர்ந்து பாலுணவினை சிறப்புணவாக உண்டதை அறிய முடிகிறது.

## தேனுடன் பால் கலந்துண்ணல்

தேன் மிகவும் மருத்துவக் குணமுள்ள உணவாகும். அதே போன்று பாலும் உடலுக்கு ஆற்றலை தரக் கூடியதாகும். குறிஞ்சி நில மக்கள் இத்தகைய தேனுணவினையும், பாலுணவினையும் கலந்து உண்டதை அறிய முடிகிறது. தலைவி கையில் வைத்து அருந்திக் கொண்டிருந்த தேனும், பாலும் கலந்த கலவையை வேங்கை மரக்கிளையில் மறைந்திருந்த குரங்குக் குட்டி பறித்துச் சென்றதை,

---

[12] நற். 297: 1

[13] அகம் 48: 2

"வேங்கை அம்படு சினைப் பொருந்தி, கைய
தேம் பெய்தீம்பால் வெளவலின், கொடிச்சி"[14]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.

"தேன் மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு"[15]

என்ற பாடலில் தலைவி, தேனொடு கலந்த ஆவின் பாலினும் தலைவனது நாட்டிலுள்ள தழையால் மூடப்பட்ட கிணற்று நீர் இனிமையுடையது என்று கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

"அளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள்"[16]

என்ற அகப்பாடல், தலைவியின் தாய் தேன் ஊற்றிக் கலந்த இனிய பாலை மகளுக்கு அச்சுறுத்தி ஊட்டியும் உண்ணாததைக் குறிப்பிடுகிறது. இந்நிகழ்வுகள் தேனுடன் பால் கலந்து அருந்திய உண்மையை வெளிப்படுத்துகிறது. தேனுடன் பால் கலந்து உண்ணுவது சிறந்ததாகவும், வயிற்றுப் புண்ணைப் போக்கும் தன்மையுடையதாகவும் திகழ்கிறது என சித்த மருத்துவம் கூறுகிறது.

### நெய் - உணவு

நெய்யோடு கலந்த பாலினை உண்டதை நற்றிணைப் பாடல் (172: 3) "நெய் பெய் தீம்பால் பெய்து" எனக் குறிப்பிடுகிறது. இதிலிருந்து நெய் கலந்த பாலினை அருந்தியதை உணர முடிகிறது.

---

[14] நற். 379: 4-5
[15] ஐங். 203
[16] அகம் 89: 20

குறிஞ்சி நில மக்கள் சிறப்பான நாட்களில் நெய் மிகுந்த உணவு வகைகளை உண்டு வந்தனர். இதனை,

"பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்"[17]

என்ற பாடலடியால் அறியலாம். நெய்யில் பொரித்து வதக்கிய இறைச்சியையும், தினையரிசியையும் சேர்த்து உண்டு வந்ததை,

"பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்கன் பொம்மல் பெறுகுவீர்"[18]

என மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. கொள்ளுடன் நெய் கலந்து தயாரிக்கப்பட்ட உணவு (நெய்ம்மிதி) என்று குறிப்பிடப்படுகிறது. இதனால் நெய் கலந்த உணவினை மக்கள் உண்ட செய்தி புலப்படுகிறது.

**ஊனுணவு**

பழந்தமிழர் தங்களுக்குப் பயன்படக்கூடிய விலங்குகளை வளர்த்தும், வேட்டையாடியும் உணவாகப் பயன்படுத்தினர். கொழுப்புடன் சேர்ந்த மாமிச உணவுகளை குறிஞ்சி நிலப் பெண்களும் உண்டனர். இதனை,

"வால் நிணப் புகவின், கானவர் தங்கை"[19]

எனும் வரிகள் உணர்த்துகின்றன.

தமக்குச் சாதகமாகச் செயல்பட தாம் உண்ணும் சிறந்த உணவு வகைகளைத் தருவதாகக் கூறுவது ஒரு மரபாகும். அம்மரபின் அடிப்படையில் கூகையைப் பார்த்து தோழி ஒருத்தி, நெய்கலந்த சோற்றுடன் ஆட்டிறைச்சியும், வெள்ளெலியின் மாமிசத்தையும் தருவதாகக் கூறுகிறாள். இச்செய்தியை,

---

[17] குறிஞ். பா. 204
[18] மலைபடு. 168-169
[19] அகம். 132: 5

"மை ஊன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்"[20]

எனச் சுட்டுகிறது. இந்நிகழ்வுகள் சங்க கால மக்கள் வெள்ளெலி இறைச்சியும், ஆட்டிறைச்சியும் உணவாக உண்டதை உணர்த்துகிறது.

தினைப்புனங்களில் தினைக்கதிரை உண்ணவரும் பன்றிகளைக் கானவன் வில்லில் பூட்டிய அம்பினால் எய்து தலைவியிடம் கொடுத்தான். அவள் அப்பன்றியை அறுத்து குடியிலுள்ளோருக்கும் பகுத்துக் கொடுத்து உண்ணும் மரபினை,

"வில்லின் தந்தவெண்கோட்டு ஏற்றை
புனை இருங் கதுப்பின் மனையோள்கெண்டி
குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட"[21]

என்னும் வரிகளில் வெளிப்படுகிறது. இவ்வாறு குடியிலுள்ளோருக்குப் பகுத்துக் கொடுத்து உண்ணும் பழக்கத்தை நற்றிணை 85: 8-10-வது பாடலடிகளும் சுட்டுகின்றன.

தோழியானவள், வரைவினை உரைத்தத் தலைவனுக்கு அவன் விரும்பும் காடைக்கறியோடு, தேனும், கனியும் உணவாகப் பெறும்படி கூறினாள். இத்தகவலை குறுந்தொகை 389-வது பாடல் குறிப்பிடுகிறது. இதிலிருந்து பெருவிருந்தில் காடைக் கறியுடன் தேனும், கனியும் கொடுக்கும் வழக்கத்தினை அறிய முடிகிறது.

[20] நற். 83: 5-6
[21] மேலது 336: 4-6

## வெற்றிலை

வெற்றிலை என்பது உண்ட உணவினை விரைவில் ஜீரணிக்க வைக்கும் இயல்புடையது. இன்றும் உணவு உண்ட பிறகு வெற்றிலைப் பாக்கு போடும் மரபினைக் காண முடிகிறது. மனித உடலில் வாதம், கபம், பித்தம் ஆகிய மூன்றும் சரியான விகிதத்தில் இல்லாமல் கூடும் போதோ, குறையும் போதோ நோய்கள் வருகின்றன. இம்மூன்றையும் சரியான அளவில் வைத்திருக்க தாம்பூலம் உதவுகின்றது. பாக்கிலுள்ள துவர்ப்பு பித்தத்தைப் போக்குவதாகவும், சுண்ணாம்பிலுள்ள காரம் வாதத்தைப் போக்குவதாகவும், வெற்றிலையிலுள்ள உவர்ப்புக் கபத்தை நீக்குவதாகவும் செயல்படுகிறது. இதனால் நம் நாட்டு விருந்துகளில் தாம்பூலம் இடம் பிடித்துள்ளது. சங்க கால மக்கள் இவ்அறிவியல் உண்மையை அனுபவத்தால் உணர்ந்திருப்பர் என்பது புலனாகின்றது. ஆகவே சங்க காலப் பெண்களும் வெற்றிலைப் பாக்கு போடும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை,

> "தையால்! தாம்பலம் தின்றியோ? என்று தன்
> பக்கு அழித்து 'கொண்டீ' எனத் தரலும்"[22]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. 'தையால்! தாம்பலம் தின்கிறாயோ' என்று தன் பாக்கிடும் பையைத் திறந்து 'எடுத்துக் கொள்' என்று கூறுவதிலிருந்து பெண்கள் தாம்பூலம் போடும் பழக்கத்தை அறிந்து கொள்ளலாம். மனைவி கணவனுக்குத் (தாம்பூலம்) வெற்றிலைப் பாக்கு கொடுத்தல் மரபு. இதனை "அம்மென்திரையலோடு அடைக்காய் ஈத்த மையீர் ஓதி" என்று சிலப்பதிகாரத்தில் வருவதாக கலித்தொகை 65-வது பாடலின் உரை விளக்கம்

---

[22] கலித். 65: 13-14

கூறுகிறது. ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றாகிய மணிமேகலை உணவிற்குப் பின் மக்கள் வெற்றிலை உண்ட செய்தியை தெளிவுபடுத்துகின்றது. இதனை,

“அறுசுவை நால்வகைப்
போனகம் ஏந்திப், பொழுதினிற் கொண்டபின்
பாசிலைத் திரையலும் பனிதமும் படைத்து”[23]

என்பதால் அறியலாம்.

இன்றைய சமூகத்திலும் பழங்குடியினர் இருபாலரும் வயது வரம்பின்றி வெற்றிலைப் பாக்கு போடும் பழக்கத்தை இயல்பாகவே கொண்டிருப்பதைக் காண முடிகிறது.

## குறமகள் உணவு தயாரித்தல்

குறமகள் அருவி தந்த உதிர்ந்த பலா விதையின் மாவையும், புளியம் பழத்தையும், மோருக்கு அளவாகக் கலந்து, மூங்கிலரிசியாகிய சோற்றினை மணம் வீசும் படியாக சமைத்தாள் என்பதை,

“அருவி தந்த பழம் சிதை வெண் காழ்,
…………………………………………..
வழை அமல் சாரல் கமழத் துழைஇ
நறுமலர் அணிந்த நாறுஇரு முச்சிச்
குறமகள் ஆக்கியவால் அவிழ் வல்சி”[24]

என்ற பாடல் விளக்குகிறது. உணவு சமைத்தவளை ‘அட்டிலோள்’ என நற்றிணை 120-வது பாடலின் 9-வது அடி குறிப்பிடுகிறது. மதுரைக் காஞ்சி - 36-வது பாடலடி அடிசில் சமைப்பவளை ‘வாலுவள்’ என குறிப்பிடுகின்றது.

---

[23] மணிமே. கச்சிமாநகர் புக்ககாதை, வ. 241-243

[24] மலை. படு. 174-183

## கள்ளுணவு தயாரித்தல்

நெல், தென்னை, பனை, தேன் போன்ற பல பொருட்களிலிருந்து 'கள்' எடுக்கப்படுகிறது. கள்ளானது இலக்கியங்களில் அரியல், தேறல், நறவு, மது போன்ற பல சொற்களில் வழங்கப்பட்டு வருகிறது.

கள்ளுணவு தயாரிப்பதற்கு கோடைக்காலத்தின் இனிய மாம்பழத்தையும், பலாப்பழத்தின் சுளைகளையும் இட்டு தேன் கலந்து கூட்டியக் கள்ளினை நீண்ட மூங்கிலில் ஊற்றி அடைத்து மண்ணில் புதைத்தனர். அதனைப் பலநாள் கழித்து எடுத்து பயன்படுத்தினர். பல நாட்கள் சென்றதால் அக்கள்ளானது மிகுந்த மயக்கத்தையும், வேகத்தையும் உடையதாக இருந்தது என்ற செய்தியை அகநானூறு 348-வது பாடல் விளக்குகின்றது. இது 'தோப்பி' என்னும் சொல்லால் குறிக்கப்படுவதால் நெல்லிலிருந்து எடுக்கப்பட்டதை அறியலாம்.

இக்கள்ளினை மகளிர் குறவருக்குக் கொடுக்க அவர்கள் வயிறார உண்டனர். அம்மயக்கத்தால் தினைப்புனத்தைக் காவல் காப்பதை மறந்தனர் என்ற செய்தி அறியப்படுகிறது. மயக்கம் தரும் கள்ளை பெண்களும் உண்டு மகிழ்ந்தனர். பெண்டிரே கள்ளினை ஊற்றி பிறரையும் உண்பித்தனர் என்பதை,

"முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி"[25]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது.

தேனிலிருந்து எடுத்த கள்ளினையும் குறிஞ்சி நில மக்கள் அருந்தினர். அழகிய மூங்கில் குழாயில் அடைத்து முற்ற வைத்த கள்ளினை பெண்களும் உண்டு மகிழ்ந்ததை,

---

[25] அகம் 348: 9

"வண்டு படு கண்ணியர் மகிழும்"[26]

என்ற அகப்பாடல் சுட்டுகின்றது. இதனால் சங்க காலத்தில் கள்ளுணவு மகிழ்விக்கும் ஓர் உணவாக இருந்ததை அறிய முடிகிறது.

## விருந்தோம்பலில் கள்ளுணவு

சங்க கால மகளிர் விருந்தினராய் வரும் புதியவர்களை ஏற்று உபசரித்தனர். குறிஞ்சி நிலப் பெண் புதிதாக வந்த விருந்தினருக்கு கள்ளுணவு கொடுத்து உபசரித்ததைக் காண முடிகிறது. அவள், விருந்தினரிடம் கள்ளுணவு உண்ட பின்பு நாங்கள் ஆடும் குரவைக் கூத்தையும் கண்டுச் செல்லுமாறு கூறியதை,

"வாங்கு அமைப் பழுநிய நறவு உண்டு
வேங்கை முன்றில் குரவையும் கண்டே"[27]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. இத்தகவலால் சங்க கால சமூகத்தில் விருந்தோம்பலின் போது கள்ளுணவு பயன்படுத்தப்பட்டதை நாம் அறிய முடிகிறது. மேலும் சங்க காலச் சமுதாயத்தில் இக்கள்ளுணவு தவறாகக் கொள்ளாமல் இருபாலரும் பருகிக் கொண்டதை நாம் காணமுடிகிறது. கள்ளினைப் பனை மடலால் செய்த பனங்குடையிலிட்டுப் பருகியதை "பால் குடைக் கள்ளின் வண் மகிழப்பாரி" என்ற நற்றிணைப் பாடல் 253 - குறிப்பிடுகிறது. கள், பதநீர் போன்றவை இன்றும் பனங்குடையில் ஊற்றி குடிக்கின்ற வழக்கம் காணப்படுகின்றது.

---

[26] மேலது 368: 14-15
[27] நற். 276: 10-11

சங்க காலத்தில் ‘கள்’ பெரும்பாலும் பழங்கள், நெல், தானியங்களால் தயாரித்தமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதனால் அது உடல் நலத்திற்கு ஊறு விளைவிக்கவில்லை, இன்றைய சமுதாயத்தில் ‘கள்’ போதைப் பொருள் கொண்டு தயாரிக்கின்றனர். அதனால் உடல் நலத்திற்குக் கேடு விளைவதோடு மக்கள் தவறுகள் செய்வதற்கும் தூண்டப்படுகின்றனர். இக்காரணங்களால் கள்ளுணவு பல இடங்களில் தடைச் செய்யப்பட்டுள்ளமையை நாம் அறியலாம்.

## முல்லை நில உணவு வகைகள்

முல்லை நில மக்கள் தினையரிசிச் சோறு, வரகரிசிச் சோறு, கூழ், பால், தயிர், வெண்ணெய், இறைச்சி போன்றவற்றை உணவாக உட்கொண்டனர். பாற்கூழே இவர்கள் உண்ணும் முக்கிய உணவு வகையாகும் என்பதை “கூழ் ஆர் இடையன்” என்ற பெரும்பாணாற்றுப்படை 175-வது பாடலடி சுட்டுகிறது.

## பால் உணவு

முல்லை நில மகளிர் ஆடுகளும், மாடுகளும் மேய்த்து வளமான வாழ்க்கை வாழ்ந்தனர். எனவே பாலுக்கும், பாற்பொருட்களுக்கும் தட்டுப் பாடின்றி வாழ்ந்தனர். இந்நில மக்கள் புதிதாக வருபவர்களுக்கு பாலுணவினைக் கொடுத்தனர் என்பதைத் தலைவி கூறுவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. இதனை,

‘வருகுவை ஆயின், தருகுவென் பாலென’[28]

என்பதால் அறியலாம்.

[28] அகம் 54: 19

` காய்ச்சிய பாலில் உறையிட்டுக் கடைந்து வெண்ணெய் எடுப்பது வழக்கம். ஆனால் காய்ச்சப்படாத பாலிலிருந்து வெண்ணெய் தயாரிக்கும் பழக்கம் சங்க காலத்தில் முல்லை நில மக்களிடம் இருந்தது என்பதை,

'நெய்கண்ட பாலின் பயன்'[29]

என்ற பாடலடி சுட்டுகிறது. இங்கு 'நெய்கண்ட பாலின்' என்பது காய்ச்சப்படாத பாலைக் குறிக்கும் என்று அ. விசுவநாதன் கலித்தொகை மூலமும், உரையும் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இத்தகவலை,

''பால்கடை நுரையின் பரூஉ மிதப்பு''[30]

என்ற பாடலடிகளும் உணர்த்துகின்றன.

## முல்லை நிலத்தலைவி உணவு தயாரித்தல்

வினைமேற்சென்ற தலைவன் வருவதறிந்த தலைவி அவனைச் சிறந்த முறையில் விருந்தோம்ப எண்ணினாள். அவள் தலைவன் உண்ணத்தகுந்தவற்றையும் விரும்பி உண்பனவற்றையும் சமைக்க முனைவதை,

''முற்றையும் உடையமோ மற்றே - பிற்றை
..........................................
விருந்து அயர் விருந்தினள் வருந்தும்''[31]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. தலைவி செல்வர் மனையகத்தாள் ஆதலின் இதுவரை பிறர் சமைக்க இப்போது அவளே சமைக்கும் புதுமை குறித்து மகிழ்ந்து கூறுவதாக உரை விளக்கம் அமைகிறது.

---

[29] கலி. 110: 17
[30] அகம் 224: 6
[31] நற். 374: 5-8

முல்லை நிலத் தலைவி செம்மறி ஆட்டின் பாலினால் செய்யப்பட்ட முற்றிய தயிரை உலை நீராக்கி, நன்கு முற்றிய வரகரிசியை அதிலிட்டு, மழைக்காலத்தில் புற்றிலிருந்து வெளிவந்த ஈசலையும் அதில் இட்டு புளிப்புடைய சோற்றினைச் சமைத்தாள். பின்னர் அதனுடன் வெண்ணெய்யைச் சேர்த்து விருந்து செய்தாள். இவ்வாறு பாலில் சமைத்த உணவினை உண்பதற்கு தலைவனைத் தோழி அழைப்பதை,

> "சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்
> இதைப்புன வரகின் அவைப்பு மாண் அரிசியொடு
> ........................................................................
> மாவண்தோன்றல் வந்தனை சென்மோ"[32]

என்ற அகப்பாடல் விளக்குகின்றது.

இடைச்சியர் நன்றாகக் காய்ச்சிய பாலில் உறை ஊற்றி பெற்ற முற்றிய தயிரினை சுவையுடைய உணவாகச் செய்ததை குறுந்தொகை 167-வது பாடல் குறிப்பிடுகிறது. ஆநிரைகளை மேய்க்கும் கோவலர்கள் இவ்வாறு சமைக்கப்பட்ட உணவினை மேய்ச்சலுக்கு எடுத்துச் சென்றனர். உணவினைத் துளையிடப்பட்ட மூங்கில் குழாயில் அடைத்து, பசுக்களின் கழுத்தில் தொங்கவிட்டு எடுத்துச் சென்றனர். இதனை வழிப்போக்கர்களுக்கும் கொடுத்தனர் என்ற செய்தியை அகம் 253; 311-வது பாடல்கள் குறிப்பிடுகின்றன.

முல்லை நிலச் சிற்றூர்களில் இடையர் மகள் மோர் விற்றதனால் கிடைத்த தினையரிசி, வரகரிசி இவற்றுடன் அவரைப் பருப்பையும் கலந்துச் செய்த 'கும்மாயம்' எனப் பெயர் பெற்ற உணவை உண்டனர் என்ற தகவலை பெரும்பாணாற்றுப்படை (167-168; 192-195)-வது பாடல்கள் குறிப்பிடுகின்றன.

---

[32] அகம் 394: 2-12

## தாளித்தல்

சங்ககால மக்கள் உணவினைப் பச்சையாக உண்டது மட்டுமல்லாமல் தாளித்தும் உண்டனர். இதனை ‘குவளை உண்கன் குய்ப்புகை’ என்ற குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது. மேலும்,

> “சுவைக்கு இனிது ஆகிய குய்யுடை அடிசில்”[33]

என்ற புறப்பாடல் உறுதிபடுத்துகிறது. குழம்பு, பொரியல் எதுவாக இருந்தாலும் தாளிப்பதன் மூலம் சுவை கூடுகிறது. பண்டையத் தமிழர்களும் தாளித்தலின் பயனை அறிந்து செயல்பட்டதை நாம் அறிய முடிகிறது.

## விருந்தோம்பல்

முல்லை நிலத்தாய்மார்கள் வரகரிசியில் பால்சோறு சமைத்து தாமும் உண்டு, புதியவர்களுக்கும் கொடுத்து அவர்களது பசியைத் தீர்த்தனர். தாய்மார்கள் வரகரிசியை பாற்சோறாக்கி, அந்த பாற்சோற்றினை வழிப்போக்கர்களின் பசியைப் போக்க கொடுத்து மகிழ்ந்தனர். என்ற செய்தியை,

> “ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய
> …………………………………………..,,
> இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதின்
> குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப் புன்கம்”[34]

என்ற பாடல் விளக்குகிறது.

சோற்றுடன் பாலைக் கலந்து பாற்சோறாக்கி, வீட்டில் தங்கும் விருந்தினர்க்குக் கொடுத்தனர் என்ற தகவலை,

---

[33] புறம் 127: 7
[34] அகம் 393: 3-17

"பல்யாட்டின் நிரை எல்லினர் புகினே
பாலும்மிதவையும் பண்ணாது பெறுகுவீர்"[35]

என மலைபடுகடாம் உறுதிப்படுத்துகிறது.

## கருணைக் கிழங்குணவு

நாவிற்குச் சுவை தருவதில் கருணைக் கிழங்கு பெரும் பங்கு வகிக்கிறது. முல்லை நில மகளிர் தன் மனைக்கு வரும் விருந்தினர்க்கு, நன்கு முற்றி விளைந்த கருணைக் கிழங்கினைப் பொரியலாக சமைத்து வெண்மையான செந்நெல் சோற்றுடன் உண்ணக் கொடுத்தனர். என்பதை,

"கருங்கண் கருணைச் செந்நெல் வெண் சோறு
கூருடைப் பலியொடு கவரிய"[36]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இவ்வுணவினை தெய்வத்திற்கு படைக்கும் போது காகம் தன் குஞ்சுகளோடு உணவை உண்டது தெரிகிறது. இதன் மூலம் கருணைக் கிழங்கு பொரியல் செய்து உண்ணும் மரபினை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

## ஊனுணவு

முல்லை நில மக்கள் வேட்டையாடிய ஊனுணவினை உண்டனர். உடும்பு, மான், வரித்தவளை, ஈசல், முயல் போன்றவற்றை வேட்டையாடியதிலிருந்து இவர்கள் ஊனுணவு உண்டனர் என்பதை உணர முடிகிறது. இத்தகவலை நற்றிணை 59-வது பாடல் குறிப்பிடுகிறது. இன்றும் இவற்றின் மாமிசத்தை மக்கள் உணவாக உட்கொள்வதைக் காண முடிகிறது.

---

[35] மலைபடு. 416-417
[36] நற். 367: 3-4

முல்லை நில மகளிர் நெய்யை விட்டுப் பொரித்த ஊனுணவை விருந்தினருக்கு வழங்கினர் என்பதை நற்றிணை (41: 6-8)-வது பாடலடிகள் சுட்டுகின்றது. இதனால் முல்லை நில மக்களின் ஊனுணவுப் பழக்கத்தை அறியலாம்.

**கள்ளுணவு**

முல்லை நில மக்கள் கள்ளுண்டதைக் குறித்து சில பாடல்கள் எடுத்தியம்புகின்றன. கள்ளுண்ட நிகழ்வானது இன்னொரு நிகழ்வோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. களவுக் காலத்தில் தலைவன் கொடுத்த பூவை தலைவி பிறரறியச் சூடாமல் மறைவாகச் சூடுவது வழக்கம். அவ்வாறு மறைவாகச் சூடப்பட்ட பூவானது கீழே விழுந்து தலைவியின் களவொழுக்கம் நற்றாய், தந்தை, செவிலி ஆகிய அனைவரும் அறியும்படி நேரிட்டது. இச்செய்தியைத் தலைவி தோழியிடம் கூறும் போது பெற்றோருக்குத் தெரியாது கள்ளுண்டவரின் செயலோடு ஒப்புமைப்படுத்திக் கூறுகிறாள். இச்செய்தியை,

> "தோழி! நாம், காணாமை உண்ட கடுங்கள்ளை, மெய்கூர
> நாணாது சென்று நடுங்க உரைத்தாங்கு
> ..........................................................
> அன்னை முன் வீழ்ந்தன்று, அப்பூ"[37]

என கலித்தொகை புலப்படுத்துகிறது. பெற்றோர் காணாது கள்ளுண்ட ஒருவன் களிப்பு மிகுதியால், உடலில் நடுக்கம் ஏற்பட்ட நிலையில் பெற்றோரிடம் நாணாது சென்று தான் கள்ளுண்டச் செய்தியை அவர்கள் நடுங்கும்படி

[37] கலித். 115: 1-9

கூறியதை அறிய முடிகிறது. ‘‘காணாமை உண்ட கடுங்கள்’’ என்பது பெற்றோர் அறியாது பிள்ளைகள் உண்ட ‘கள்’ எனப் பொருள்படும்.

பெற்றோர் அறிந்த போது நடுங்கினர் என்பது ‘‘நடுங்க உரைத்தாங்கு’’ என்னும் தொடர் வெளிப்படுத்துகிறது. கள்ளுண்டல் தவறன்று எனக் கருதிய சங்ககாலத்தில் ஆடவர்கள் மட்டுமல்லாது பெண்களும் கள்ளுண்டதை அறியலாம். இருப்பினும் அன்றைய சமூகத்தில் கள்ளுண்பதை வெறுத்த பெற்றோரும் இருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

‘‘கள் விற்பவரை ‘துவசர்’ என செந்தமிழ் அகராதி பொருள் கூறுகிறது’’[38]. சங்க காலத்தில் காணப்பட்ட கள் வணிகம், வள்ளுவர் காலத்திலும் காணப்பட்டது. வள்ளுவர், மகிழ்ச்சியைக் குறைக்கின்ற கள்ளை அருந்தும் மக்களை, ‘நாண்’ என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள், பார்ப்பதற்கும் அஞ்சி முகத்தைத் திருப்பிக் கொள்வாள் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

‘‘நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு’’[39]

எனவும், கள்ளுண்டவரை நஞ்சுண்டவருக்கு ஒப்பானவர் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

### நெல்லிக்கனி

கனி வகைகளில் மிகுந்த மருத்துவக் குணம் உடையது நெல்லிக்கனி. இது காட்டு நெல்லி, நாட்டு நெல்லி என இருவகைப்படும். துவர்ப்புச் சுவையைக் கொண்ட காட்டு நெல்லிக்கு மாறாக நாட்டு நெல்லி புளிப்புச் சுவையைக் கொண்டிருக்கும். இலக்கியங்கள் காட்டு நெல்லியைப் பற்றிய

---

[38] கந்தையா, ந.சி. செந்தமிழ் அகராதி, ப. 372.
[39] குறள் - 924

குறிப்புகளைத் தருகின்றன. சிறிய இலையினையும், புல்லிய விதையினையும் உடைய நெல்லியின் பசுமையான காய்களை மக்கள் கடித்துத் தின்றதை,

> ‘‘பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்இலைப்
> புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்’’[40]

எனக் குறிப்பிடுகிறது. பாலை வழியில் பயணம் மேற்கொள்பவர்கள் தாகம் தீர்க்கும் அமுதமாக நெல்லிக்காய்களை பயன்படுத்தினர்.

நெல்லிக்கனியின் உருவம் சிறியதாக இருப்பினும் அதன் பயன் பெரிய அளவிலுள்ளது. சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய பழத்தை உண்டவரை நீண்ட நாள் வாழ வைக்கும் ஆற்றலுடையது என்பதை ஔவையார்,

> ‘‘சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது,
> ஆதல் நின் அகத்து அடக்கி
> சாதல் நீங்க, எமக்கு ஈத்தனையே!’’[41]

எனக் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது.

மருத்துவக் குணமுடைய நெல்லிக்கனி தலைவியின் வீட்டின் முற்றத்தில் நின்றதை,

> ‘‘கல் உயர் நண்ணியதுவே நெல்லி
> மரையினம் ஆரும் முன்றிற்’’[42]

என்ற பாடலடி குறிப்பிடுகிறது. இச்செய்திகள் சங்க காலத்திலிருந்தே மக்கள் நெல்லியின் மருத்துவக் குணத்தை அறிந்து உண்டமையை வெளிப்படுத்துகிறது.

---

[40] அகம் 54: 14-15
[41] புறம் 91: 9-11
[42] குறுந் 235: 3-4

## விளாம்பழம்

முட்களுடைய விளாமரத்தினது விளாம்பழத்தை இக்காலத்தில் ‘விளாத்திப்பழம்’ என்றும் கூறுவர். களைப்பைப் போக்குவதற்கு விளாம்பழத்திலிருந்து ‘சர்ப்பத்து’ எனப்படும் குளிர்பான வகையையும் செய்கிறார்கள். இப்பழம் பந்து போன்ற வடிவினையுடையது. விளாமரத்தில் இரண்டு வகையுண்டு. சிறிய கனிகள் கொடுப்பது ஒரு வகை. இக்கனிகள் துவர்ப்பாக, புளிப்பாக இருக்கும். மற்றொன்று பெரிய கனிகள் கொடுக்கும். அக்கனிகள் இனிப்பாக இருக்கும். வேற்று நாட்டு மக்கள் உணவாக உண்ணும், விளாம்பழத்தின் கனிகள் சிதறியிருக்கின்ற பாலை நிலம் வழியாகச் செல்லாதிருப்போமாக என தலைவி கூற்றில் வரும் நற்றிணை 24-வது பாடல் குறிப்பிடுகிறது. இதனால் விளாம்பழம் பழந்தமிழக மக்களால் உணவாக உண்ணப்பட்டமையை அறியலாம்.

முல்லை நில மகளிர் விருந்தினருக்கு பழங்களும் கொடுத்து உபசரித்ததை அகநானூறு குறிப்பிடுகிறது. விருந்து செய்வதற்கு வேண்டிய விளாம்பழங்கள் பழுத்தன. களாப்பழங்கள் முதிர்ந்தன என்று கூறுவதிலிருந்து இதனை நாம் அறியலாம். இச்செய்தியை,

> “களவும் புளித்தன விளவும் பழுநின”[43]

என அகப்பாடல் சுட்டுகிறது.

முல்லை நில மன்றத்தின் கண்ணுள்ள சிற்றூரில் களாப்பழங்களும், விளாம்பழங்களும் முதிர்ந்து பழுக்கலாயின என்பதால் இப்பழங்கள் முல்லை

---

[43] அகம் 394

நில மக்களின் விரும்பிய உணவாக விளங்கியமையை உணரலாம். மேலும், தயிர்ப்பானையின் முடைநாற்றம் நீங்க விளாம்பழத்தை இட்டு வைத்ததை நற்றிணை 12-வது பாடல் குறிப்பிடுகிறது.

### புளியம் பழம்

புளிப்புச் சுவையுடைய புளியம் பழங்களில் சில இனிப்புச் சுவையுடையதாகவும் உள்ளன. இதன் புளிப்புச் சுவையை கருவுற்ற மகளிர் மிகவும் விரும்புகின்றனர். இதனை,

> "முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ
> ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
> கடுஞ்சூல் மகளிர்"[44]

என குறுந்தொகை விளம்புகிறது. விருந்தினராக வருபவர்களிடையே கருவுற்றபெண்கள் இருந்தால் அப்பெண்டிருக்கும் பச்சைப்புளியைச் சாப்பிடக் கொடுப்பர். பச்சைப்புளி அவர்களின் வாந்தி, குமட்டல், வாய்கசப்பு இவற்றை விரட்டியடிக்கும் இயல்புடையது. மேலும் மருத்துவக் குணம் நிறைந்ததாகவும் உள்ளது.

> 'எயிற்றியர் அட்ட இன்புளி வெண்சோறு'[45]

என்பதால் அறியலாம். புளியோடு மோர் கலந்து உண்ட செய்தியை 'இன்புளிக் கலந்து மாமோராக' என மலைப்படுகடாம் 179-வது பாடல் கூறுகிறது. இச்செய்திகள் பழந்தமிழர் புளியினைப் பயன்படுத்தியமையை வெளிப்படுத்துகிறது. இன்று புளிச்சோறு, புளிமிளகாய், புளிச்சாறு, புளியடை, புளிக்குழம்பு என

---

[44] குறுந். 287: 3-5.
[45] சிறு.பாண். 179.

பல்வேறு பொருட்களைத் தயாரிக்க புளியம்பழம் பயன்படுத்தப்படுகிறது. ‘‘மலச்சிக்கலும், தூக்கக் குறைவும், சோர்வும் உடையவர்கள் புளியின் இரசத்தை உண்டு நன்மை பெறலாம்’’[46] என்ற செய்தியை தமிழர் உணவு என்ற நூலிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.

### புற்றுமண்

புற்றுமண் என்பதற்கு ‘‘மருத்துவக் குணம் உள்ளதாகக் கருதப்படும் கறையான் புற்றின் மண்’’[47] என அகராதி விளக்கமளிக்கிறது. சங்க காலத்தில் மழவர்கள், வாயினின்று எழும்பும் இருமலாகிய பகையைத் தீர்க்கும் மருந்தாகிய புற்று மண்ணை வாயில் அடக்கிக் கொள்வர் என்பதை,

‘‘............செங்கண் மழவர்
வாய்ப் பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்’’[48]

என்ற அகப்பாடல் புலப்படுத்துகிறது.

### மருத நில உணவு வகைகள்

மருத நிலம் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணையாகும். உழுதொழில் சிறந்து உணவும், பிறவும் நிறையப் பெற்று ஓய்வு வாய்க்கப் பெற்றவர் மருத நிலத்தவராவர். மருத நிலம் ஏனைய நிலங்களை விடச் செழிப்புடையதும், நாகரிகம் உடையதுமாகும். இந்நிலத்தின் மக்கள் உழவுத் தொழிலைச் செய்து அதன் மூலம் கிடைக்கும் நெல்லையும், நெல்லைக் கொடுத்து வாங்கிய உணவுப் பொருட்களையும் உணவாகக் கொண்டனர்.

---

[46] நமசிவாயம், சே., தமிழர் உணவு, ப. 93.
[47] க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப, 996.
[48] அகம் 101: 5-6

சோற்றுணவு, பாலுணவு, ஊனுணவு, கள்ளுணவு போன்றவற்றை முக்கிய உணவாகக் கொண்டனர்.

## பாலுணவு

அனைத்து சத்துக்களும் கொண்ட உணவுப் பொருட்களுள் ஒன்றாக பாலுணவு விளங்குகிறது. பாலில் புரதம், கொழுப்பு, தாதுப்பொருள் முதலியன அடங்கியுள்ளன என உணவு ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். மருதநில மக்கள் எருமைகளை உழவுக்காகப் பயன்படுத்தியதோடு அதன் பாலினை உணவாகப் பயன்படுத்தினர் என்பதை,

> "மன்ற எருமை மலர்தலைக் காரான்
> இன்தீம் பாற்பலம் கொண்மார் கன்று விட்டு"[49]

என்ற பாடல் எருமையின் பாலினைக் கறப்பதற்காக கன்றுகளை தொழுவத்தில் விடுவர் என குறிப்பிடுகிறது.

மருத நில மகளிர் தங்கள் குழந்தைகளுக்குப் பாலுணவைக் கொடுத்தனர். மருத நிலத் தாயொருத்தி தன் மகனைப் பாலுண்ண அழைக்கும் நிகழ்வினை,

> "ஞாயர்பால் உண்டி சில.
> அன்னையோ! யாம் எம் மகனைப் பாராட்ட"[50]

என கலித்தொகை குறிப்பிடுகிறது. இன்றைய சமூகத்திலும் தாயானவள் குழந்தைகளுக்கு உணவூட்டும் போது எனக்காக கொஞ்சம், அப்பாவுக்காகக் கொஞ்சம் எனக் கூறி உணவூட்டும் மரபினைக் கொண்டிருக்கின்றனர்.

---

[49] நற். 80: 1-2
[50] கலித். 85: 28-29

## கஞ்சியுணவு

மருதநில உழவர்கள் கொள்ளும், பயறும், பாலும் கலந்து செய்யப்பட்ட கூழுணவை விரும்பி உண்டனர் என்பதைத் தலைவி தோழிக்குக் கூறுவதிலிருந்து அறியலாம். இதனை,

> ‘‘கொள்ளொடு பயறுபால் விரைஇ, வெள்ளிக்
> கோல் வரைந்தன்ன வால் அவிழ் மிதவை
> வாங்குகை தடுத்த பின்றை’’[51]

என்ற அகப்பாடல் குறிப்பிடுகிறது. கொள்ளும், பயறும் பாலுடன் கலந்து ஆக்கிய கஞ்சியை வளைத்து உண்ட கையானது போதும் எனத் தடுக்குமளவிற்கு உண்டனர் என உரை அமைகின்றது. இதன்மூலம் உழவர்களால் இவ்வுணவு விரும்பி உண்ணப்பட்டமையை அறியலாம். இன்று அரிசிக் கஞ்சி, சோளக்கஞ்சி, வரகுக்கஞ்சி எனக் கஞ்சி பல்வேறு வடிவங்களில் தயாரிக்கப்படுகிறது.

## உழுந்தம் சோறு

சோற்றோடு உழுந்தைச் சேர்த்து ஆக்குவது உழுந்தஞ்சோறு ஆகும். கிராமப்புறங்களில் இது ‘பருப்புச்சோறு’ என்றும் வழங்கப்படுகிறது. ‘உழுந்தோதனம்’ அதாவது ‘‘உழுந்தம் பயற்றோடு கலந்திட்ட சோறு’’[52] என தமிழ்ப்பேரகராதி குறிப்பிடுகிறது. உழுந்தஞ்சோறு களிமிக்கது. நெய்யும், உழுந்தும் சோற்றோடு கலந்து உண்டனர் என்ற செய்தியை,

> ‘‘நெய்யோடு மயக்கிய வுழுந்து நூற்றன்ன’’[53]

---

[51] அகம். 37 12-14.
[52] தமிழ்ப்பேரகராதி, ப. 469.
[53] ஐங். 211.

என ஐங்குறுநூறு தெரிவிக்கிறது. உழுந்தம் பருப்பினால் ஆக்கிய சோற்றைத் திருமணத்தின் போது உணவாகக் கொடுத்தனர் என்பதை,

> ‘‘உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை
> பெருஞ்சோற் றமலை நிற்ப’’[54]

என்ற பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன. இதன் மூலம் பழந்தமிழர் திருமணத்தன்று உழுந்தஞ்சோறு உண்டதை அறியலாம். உழுந்து சேர்த்து சமைக்கப்பட்ட பொங்கலை ‘கும்மாயம்’ என்று அழைத்தனர். ‘பெருஞ்சோறு’ என்பதற்கு ‘அறுசுவை உண்டி’ என உரை விளக்கம் கூறுகிறது. இதன் மூலம் திருமண நாளில் அறுசுவை உணவு படைக்கப்பட்டமை தெளிவாகிறது.

## உழுந்தம் பணியாரம்

உழுந்து தானிய வகைகளில் மக்களுக்குப் பயன்படும் முக்கியமான உணவுப்பொருட்களில் ஒன்று. இது பயறுவகையைச் சார்ந்தது. பயறு வகைகளில் ‘களி’ மிக உடையது உழுந்தாகும். உழுந்தின் பயன்பாடு பலவகைகளில் நமது உணவில் இடம் பெறுகின்றது. கலித்தொகை நூல் உணவுப்பொருட்கள் பலவற்றோடு உழுந்தையும் கூட்டி உழுந்தம் பணியாரம் செய்ததைக் குறிப்பிடுகிறது. இதனை,

> ‘‘உழுந்தினும் துவ்வா குறுவட்டா’’[55]

என எடுத்துரைக்கின்றது. இப்பகுதியில் உழுந்தம் பணியாரத்தினைக் காட்டிலும் மிகுதியாகத் துய்க்கப்பட்டிருக்கின்ற ‘கூன்’ என்னும் உரையால் உழுந்தம் பணியாரம் செய்த குறிப்பினை அறியலாம்.

---

[54] அகம். 86: 1-2.
[55] கலித். 94: 27.

உழுந்தம் மாவினை நெய்யோடு கலந்து பிசைந்து செய்த உணவுப்பொருள் குறித்து

"நெய்யோடு மயக்கிய உழுந்து நூற்றன்ன"

என ஐங்குறுநூற்று 211-வது பாடல் குறிப்பிடுகிறது.

## தலைவி சோறும், புளியங்கறியும் தயாரித்தல்

வஞ்சிக்கொடி என்பது பிரம்பு என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இந்த பிரம்பின் கனியைச் சங்ககால மக்கள் பயன்படுத்தியுள்ளனர். மருதநில மகளிர் புளிப்பு மிக்க பிரம்பின் திரள் கனியைப் பெற்று, அதனைப் புளியங்கறியாக்கி சோற்றுடன் அளித்தனர். இச்செய்தியை,

"ஆம்பல் அகல் இலை, அமலை வெஞ்சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனிபெய்து
விடியல் வைகறை இடூஉம் ஊர"[56]

என அகப்பாடல் சுட்டுகிறது. தலைவி ஆம்பல் இலையில், சுடுகின்ற சோற்றுத்திரளோடு பிரம்பின் புளிப்பும், இனிப்பும் கலந்த பழத்தைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியைத் தன் கணவனுக்குக் கொடுத்து உண்ட செய்தியை அறியமுடிகிறது.

## நெற்பொரி உணவு

நெல்லை வறுத்து அதிலிருந்து பொரி கிடைப்பதை நெற்பொரி என்பர். சங்க இலக்கியத்தில் பொரி பற்றிய குறிப்புகள் உள்ளன.

---

[56] அகம். 196: 5 - 7.

இதனை "செந்நெல் வான் பொரி" - என குறுந்தொகைப் பாடல் 53: 4 குறிப்பிடுகின்றது. பொரிக்காக செந்நெல்லும், புழுங்கல் நெல்லும் பயன்படுத்தப்பட்டமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

பொரியினை பொற்கலத்திலிட்டு அதனுடன் பாலை ஊற்றி கொடுத்த போது தலைவி அவை மிகுதி எனக்கூறி உண்ண மறுத்ததை,

"செம்பொற் புனை கலந்து அம்பொரிக் கலந்த
பாலும் பல என உண்ணாள்"[57]

என குறுந்தொகை எடுத்தியம்புகின்றது.

பொரி புன்கின் பூப்போன்ற அமைப்புடையது. முருகனை வழிபடும் போது பொரியைச் சிதறி வழிபட்டனர் என திருமுருகாற்றுப்படை, "வெண்பொரி சிதறி" என குறிப்பிடுகிறது. நெல்லானது மருதநிலத்தில் செழிப்பாக காணப்பட்டதால் அந்நில மக்கள் பொரியினை உணவாகக் கொண்டதை நாம் அறியலாம். இன்றும் கார்த்திகைத் திருநாள் உட்பட பல மங்கல காரியங்களுக்கும், அமங்கலக் காரியங்கள் சிலவற்றிற்கும் நெற்பொரி பயன்படுத்தப்பட்டு வருகிறது.

### அவல் உணவு

நெல்லை நீரில் ஊறவைத்து அதிலிருந்து அவல் இடித்தெடுக்கும் இன்றைய தமிழர் வழக்கத்தைப் போன்று சங்ககால மக்களும் அரிசி, மூங்கில் இவற்றிலிருந்து அவலை இடித்து எடுத்ததை இலக்கியங்கள் கூறுகின்றன. இத்தகவலை,

"பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை"[58]

---

[57] குறுந். 356: 6-7.
[58] அகம். 141: 17-18.

என புதுமணப்பெண் உலக்கையால் பச்சை அவலை இடிப்பதைக் குறிப்பிடுகிறது. பாசவல் என்பதற்கு பச்சை நெல்லை வறுக்காமல் உரலிலிட்டு இடித்துச்செய்யும் அவல் என பொருள் கூறப்பட்டுள்ளது. கழனியிலிருந்து கரும்பினைப் பிடுங்கி சாறெடுத்து அதனோடு பாலும் பெய்து பாசவலைப் பகுத்துண்டதை அகநானூறு குறிப்பிடுகிறது. இதிலிருந்து மருத நில மக்கள் அவல் உணவை உண்டது புலனாகின்றது.

### நொய்யரிசி (எளிய) உணவு

நொய் என்பதற்கு "கோதுமை, அரிசி ஆகியவற்றின் மாவாக இல்லாமல் நுண்ணியதாக உடைந்த தானியம்"[59] என க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி விளக்கமளிக்கிறது.

இதனை தலைவனது பரத்தமையை வெறுத்து அவரோடு ஊடல் கொள்ளும் பெண்கள், உணவாகக் கொண்டனர். தம்மிடத்திலுள்ள திருமகள் விலகிச்செல்ல, நொய் அரிசியை முறத்தால் புடைத்து, தாமே சமைத்துண்டு தனிமையை மேற்கொண்டனர். இதனால் குழந்தைகளுக்கு தாய்ப்பாலின்றி அவர்கள் வருந்தி இருந்தனர் என்ற செய்தியை,

> "செய்யோள் நீங்க சில்பதம் கொழிந்து
> தாழ் அட்டு உண்டு, தமியர் ஆகி
> தேமொழிப் புலவர் திரங்குமுலை சுவைப்ப"[60]

என்ற அகப்பாடல் விளக்குகிறது. 'நொய் அரிசி' என்பதற்கு 'எளிய உணவு' என உரை விளக்கம் கூறுகிறது. இதிலிருந்து தலைவன் பரத்தையரிடம் வாழும் போது,

---

[59] க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, பக். 860.
[60] அகம். 316: 13-15.

தலைவி சுவைமிக்க உணவுகளைத் தவிர்த்து உயிர் வாழ்வதற்குத் தேவையான எளிய உணவினைத் தாமே சமைத்துண்ணும் மரபு அந்நாளில் இருந்ததை உணரலாம்.

### மாங்காய்ச் சாற்றுணவு

மருதநில மக்கள் மாங்காய்களை, புதிய குடங்களில் இட்டு, அதனுடன் புளிப்பையுடைய மாதுளங்காயைச் சேர்ந்தனர். பின்பு அக்காய்களினின்று மிகுதியாக ஊறிப் பெருகிய சாற்றினை வெயிலில் காயவைத்துப் பதப்படுத்தி உண்டனர் என்பதை,

> ‘‘தொழிற் செருக்கு அனந்தர் வீட, எழில்தகை
> வளியோடு சினை இயவண்தளிர் மாஅத்துக்
> ……………………………………………………..
> கயம் மண்டு பகட்டின் பருகி’’[61]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இச்சாறு உடலில் உழைப்பால் ஏற்பட்ட களைப்பையும், கள்ளுண்ட மயக்கத்தையும் தீர்க்க வல்லது. ஆகவே மருத நில மக்கள் விரும்பியுண்டதை அறியலாம்.

அந்தணர் பெண்கள் ஊறுகாய் தயாரித்து உண்ட செய்தியை,

> ‘‘கஞ்சக நறுமுறி அளைஇ, பைந்துணர்
> நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த
> தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்’’[62]

என குறிப்பிடுகிறது. நெல் சோற்றையும், மோரில் எடுத்த வெண்ணெயில் மாதுளங்காயைப் பொரித்து அதனுடன் மிளகுத்தூள், கறிவேப்பிலை தூவப்பட்ட

---

[61] அகம் 37: 7-11
[62] பெரும் 308-310

பொரியலையும், மாவடு ஊறுகாயும் மாலை வேளையில் உண்டனர் என்ற செய்தியை அறிய முடிகிறது. கறிவேப்பிலை சங்ககாலத்தில் கஞ்சக நறுமுறி என்ற பெயரால் அழைக்கப்பட்டது. மாங்காய், ஊறுகாய் அடும்போது கறிவேப்பிலையைக் கலந்து ஆக்கியதை அறிய முடிகிறது. மோருக்குப் பதிலாக சோற்றுடன் மாங்காயை நறிய ஊறுகாயாக்கி உண்டனர் என்பதை,

"மாங்காய் நறுங்காடி கூட்டுவோம்"[63]

என கலித்தொகைப் பாடல் கூறுகிறது. இதிலிருந்து சங்ககாலப் பெண்கள் ஊறுகாய் தயாரித்து உண்ட செய்தி புலனாகிறது.

## பழஞ்சோறு

பழஞ்சோறு என்பது முதல் நாள் சமைக்கப்பட்டுத் தண்ணீர் ஊற்றி வைத்து மறுநாள் காலையில் உண்ணும் சாதம் ஆகும். இக்காலத்தில் இதனை பழைய சாதம் என்றும், பழங்கஞ்சி என்றும் கூறுவர். பண்டையக் காலத்தில் இவ்வகை உணவை உழைக்கின்ற மக்களின் குழந்தைகளுக்கும் கொடுத்தனர். அவர்கள் உண்ண மறுத்ததால் அவல் தயாரித்து கொடுத்தச் செய்தியை,

"பழஞ்சோற்று அமலை முனை இ, வரம்பில்
புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்
அவல்எறி உலக்கைப் பாடுவிறந்து"[64]

என்ற பாடல் வரி விளக்குகின்றது. பண்டைய காலத்திலும், இக்காலத்திலும் நிலத்தில் இறங்கி விவசாயம் செய்யும் மக்கள் காலையில் பழஞ்சோற்றை உண்டுச் செல்கின்ற வழக்கம் காணப்படுகிறது. இன்றும் இம்மரபு

[63] கலித் 109: 22-23
[64] பெரும் 224-226

பின்பற்றப்படுகிறது. வெயில் காலங்களில் பழஞ்சோறு உண்பதால் உடல்சூடு குறையும். பழஞ்சோறு சிறந்த உணவு என ஆய்வின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### பாகற்காய் உணவு

பாகற்காய் கொடி வகையைச் சார்ந்தது. கசப்பு மிக்கது. மருத நிலத்தில் பலாக்காய் போன்ற புறப்பகுதியையுடைய பாகற்கொடிகள் கூதாளம் செடியுடன் அசைந்து நின்றதை,

> ‘‘பலவுக்காய் புறத்த பசும்பழப் பாகல்
> கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க’’[65]

என குறிப்பிடுகிறது.

வரால் மீனின் துண்டையும், சுறாமீனின் இறைச்சித் துண்டையும், வள்ளைக் கீரையையும், சிறிய பாகற்கொடியின் காயையும் கண்ணுறையாகக் கொண்டு சோற்றை உண்டனர் என புறநானூறு 399: 5-9 கூறுகிறது. இதிலிருந்து பாகற்காயை பதப்படுத்தி சங்ககால மக்கள் உண்டதை அறியலாம்.

### மீனுணவு

மருத நில மக்கள் மாமிச உணவிற்கு மாற்றாக மீனுணவிற்கு முக்கியத்துவமளித்தனர். மீனுணவு பற்றிய செய்திகள் இலக்கியத்தில் அதிகமாகக் காணப்படுகிறது. மருத நில மக்கள் வரால் மீனுணவை அதிகமாக உண்டதை அறிய முடிகிறது. வரால் மீன் குளம், குட்டை, நீர்நிலைகளில் காணப்படுகிறது. நன்னீரில் வாழும் வகையைச் சார்ந்தது. இது பல வரிகளையும், பிளந்த வாயையும் கொண்டது. போத்து மீன் என்றும் அழைக்கப்பட்டது.

---

[65] அகம் 255: 13-14.

மக்கள் குளிர்ச்சி பொருந்திய காலைப் பொழுதில் நெய்ச்சோற்றுடன், குழம்பும் சேர்ந்த வரால் மீனின் துண்டை விரும்பியுண்டச் செய்தியை,

> ''.............................தண்புலர் விடியல்
> கடுங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
> புகர்வை அரிசிப் பொம்மற்பெருஞ்சோறு
> கவர்படு கையை கழும மாந்தி''[66]

எனக் கூறுகிறது. இதன் மூலம் வரால் மீனைக் குழம்புக் கறியாக, பலவகை மசாலைகளுடன் சேர்த்து ஆக்கியதை நாம் உணரலாம்.

குளிர்ந்த துறையையுடைய பாணனது மகள், நீரையடுத்த கரையில் பிடித்த வரால் மீனை, வஞ்சி மர விறகினால் சுட்டு, கள்ளுண்ட தன் தந்தைக்குக் கொடுத்தாள் என்பதை,

> ''தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்
> நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு
> வஞ்சி விறகில் சுட்டு வாய் உறுக்கும்''[67]

என அகநானூறு கூறுகிறது. இந்நிகழ்வு தந்தை மகள் உறவின் ஆழத்தை வெளிப்படுத்துகிறது எனலாம்.

மருத நில மக்கள் வயலில் பிறழும் வாளை மீனை செப்பம் செய்யும் கருவியால் துண்டித்து, அதன் தசையை சோற்றுக்கு கறியுணவாக உழத்தியருடன், உழவர்களும் வயிறு புடைக்க உண்டனர் என்பதை,

---

[66] நற். 60:3-6
[67] அகம் 216: 2-4

"பழனவாளைப் பரூஉக் கண் துணியல்
புது நெல் வெண்சோற்றுக் கண்ணுறை ஆக"[68]

என புறப்பாடல் எடுத்தியம்புகின்றது.

## கள்ளுணவு

பல பொருட்களிலிருந்து கள் எடுக்கப்பட்டாலும் மருத நில மக்களிடையே பனையிலிருந்து எடுக்கப்பட்ட கள் சிறப்பிடம் பெற்றிருந்தது. மருத நிலத்தில் பன்னாடையால் வடித்து எடுக்கப்பட்ட கள்ளையுண்டு களித்திருந்த மக்கள் மூலம் இதனை அறிய முடிகிறது.

மருத நிலத்தில் வாழ்ந்த இளமகளிர் இன்பத்தின் மயக்கத்தால் தாம் அருந்தும் கள்ளினை அருந்தாது மதுவைக் குடித்தனர். மதுவுண்ட மயக்கத்தில் தம் கணவர் அணியும் மாலைகளை மகளிர் அணிந்து கொண்டனர். மகளிர் அணிந்த மாலைகளை ஆடவர் சூடிக் கொண்டனர். இதனை,

"துணைப் புணர்ந்த மடமங்கையர்
பட்டு நீக்கித் துகில் உடுத்தும்
மட்டு நீக்கி மது மகிழ்ந்தும்
மைந்தா கண்ணி மகளிர் சூடவும்
மகளிர் கோதை மைந்தர் மலையவும்"[69]

என பட்டினப் பாலை கூறுகிறது.

பெண்ணொருத்தி கள்ளுண்டு மயங்கிய நிலையில் தன்மீது மொய்க்கும் வண்டை எங்குசென்று விரட்டுகிறோம் என்ற இடந்தெரியாமல் ஓட்டி கை சோர்ந்தாள் என்பதை,

---

[68] புறம் 61: 4-5

[69] பட்டி. பா. 106-110

“ஒருத்தி, இறந்த களியான் இதழ்மறைந்த கண்ணள்
பறந்தவை மூசக்கடிவாள், கடியும்
இடம் தேற்றாள் சோர்ந்தனள், கை”[70]

என கலித்தொகை குறிப்பிடுகிறது.

தெளிந்த கள்ளைப் பருகிய பெண்டிர் நீர்த்துறையில் நீர் மொண்டெடுக்க வந்து, கணவரது பண்பற்ற பரத்தமையைப் பாடினர் என்பதை,

“தென்கட் தேறல் மாந்தி மகளிர்
நுண்செயல் அம்குடம் இரீ இ பண்பின்
மகிழ்நன் பரத்தமை பாடி”[71]

என்பதால் அறியலாம். இதிலிருந்து பெண்கள் கள் அருந்தியமை தெளிவாகிறது.

## நெய்தல் நில உணவு

நெய்தல் நில மக்கள், தாங்கள் பிடித்த மீனையும், விளைவித்த உப்பையும் விற்று அதற்கு மாற்றாக நெல்லைப் பெற்று அதனை உணவாக்கி உண்டனர். உப்பை விற்று வாங்கிய நெல்லினால் வெண்சோற்றை ஆக்கி, அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவைமிகுந்த புளியங்கறியை அதிலே ஊற்றி கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்குக் கொடுத்தாள். இச்செய்தியை,

“நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
..............................................................
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”[72]

என்ற பாடல் விளக்குகிறது.

---

[70] கலித் 92: 48-50
[71] அகம் 336: 6-8
[72] அகம் 60: 4- 6

## மீனுணவு

நெய்தல் நில மக்களின் முக்கிய உணவாக மீன் இருந்தாலும், மீனுக்கு மாற்றாகக் கிடைக்கும் பொருட்களையும் பயன்படுத்தினர். இம்மக்கள் மீனை குழம்புக் கறியாகவும், கருவாடாகவும், சுட்டும் உண்டதை அகநானூற்றுப் பாடல் - 60 எடுத்தியம்புகிறது.

கொழுமீனாகிய உணவைக் கறிசமைத்து உண்ட பின்பு நெய்தல் நிலச் சிறுவர்கள் கொக்கு வேட்டைக்குச் சென்றனர் என்பதை,

> ‘‘கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்
> நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென’’[73]

என்ற அகப்பாடலில் தலைவி கூறுவதிலிருந்து அறியலாம்.

## மீனை சுட்டு உண்ணுதல்

நெய்தல் நில மக்கள் மீனை சுட்டு உண்ட செய்தியையும் அறிய முடிகிறது. கொழுத்த மீன்களைச் சுடுவதால் எழும் புகையானது தெருவெல்லாம் மணம் வீசி நின்றதை,

> ‘‘கொழு மீன் சுடுபுகை மறுகினுள் மயங்கி’’[74]

என நற்றிணை குறிப்பிடுகிறது. தீயில் சுட்டு உண்டதை புறநானூறு,

> ‘‘ஆரல் கொழுஞ்சூடு அம்கவுள் கடாஅ’’[75]

என குறிப்பிடுகிறது. மேலும், பரதவர் குலச் சிறுவர்கள் இறால் மீன்களை சுட்டு உண்ட செய்தியை,

---

[73] அகம் 290: 3-4
[74] நற் 31: 6
[75] புறம் 212: 4

"கடல் இறவின் சூடு தின்றும்

வயல் ஆமைப்புழுக்கு உண்டும்"[76]

என்ற பாடலால் அறியலாம்.

## கள்ளுணவு தயாரித்தல்

நெய்தல் நில மக்கள் கள்ளுணவு தயாரித்தலைப் பற்றி பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. குற்றாத கொழியல் அரிசியை (தவிடு நீக்கப்பெறாத அரிசி) களியாகத் துழாவி, கூழைத்தயாரித்து, அதனை வாயகன்ற தட்டுப் பிழாவில் விட்டு உலர ஆற்றுவர். இன்று முளைவிட்ட தானிய வகைகளைப் பயன்படுத்துவது போல அன்று நெல்முளையை இடித்து அக்கூழில் கலப்பர். அக்கலவையை இரண்டு பகலும், இரண்டு இரவும் சாடியில் ஊற்றி வைப்பர். பின்னர் அதில் வெந்நீர் ஊற்றி வேகவைத்து விரலாலே அலைத்து, சல்லடையில் வடிகட்டி அரிப்பர். இவ்வாறு தயாரிக்கப்பட்ட 'நறும்பிழி' என்ற கள்ளை விரும்பி பருகியச் செய்தியை பெரும்பாணாற்றுப்படை (275-282) விளக்குகின்றது.

ஒய்மா நாட்டு நெய்தல் நிலப் பரதவர், நுளைமகள் காய்ச்சி அரித்த கள்ளினைப்பருகினர். இதனை,

"கரும்புகைச் செந்தீ மாட்டி, பெருந்தோள்

.......................................................................

அறற் குழல் பாணி தூங்கி யவரொடு

வறற் குழற் சூட்டின் வயின்வயின் பெறுகுவீர்"[77]

---

[76] பட். பா. 63-64

[77] சிறுபாண் 156-163

என்ற பாடலடிகள் கள்ளுடன் உலர்ந்த குழல் மீனின் சூட்டிறச்சியையும் உண்டதைக் குறிப்பிடுகிறது. இதிலிருந்து நுளைமகள் கள்ளுணவு தயாரித்தமை புலனாகின்றது.

## கள்ளுணவு அருந்துதல்

நெய்தல் நில மக்கள் பனங்கள்ளையும், நெல்லரிசிக் கள்ளையும் பருகினர். பனங்கள்ளை மீனுக்குப் பண்டமாற்றாக உண்டு மகிழ்ந்ததை, நற்றிணை (38; 295; 388) வது பாடல்கள் விளக்குகின்றன.

பனங்கள்ளை மக்கள் அருத்தியதை 'பிணர்ப்பெண்ணைப் பிழி மாந்தியும்' என பட்டினப் பாலை - 89 வது பாடல் குறிப்பிடுகிறது. நெல்லரிசிக் கள்ளை அருந்தியதை "உவவு மடிந்து உண்டு ஆடியும்" என பட்டினப்பாலை - 93 வது பாடல் கூறுகிறது. காலையிலும், மாலையிலும் குடித்து மகிழ்ந்ததை,

> "ஞான்ற ஞாயிறு குடமலை மறைய
> மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்"[78]

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். நெய்தல் நில மக்கள் கள்ளுடன் இறால் மீனும், வயல் ஆமைகளின் இறைச்சியையும் சேர்த்து உண்டதை,

> "கருத்தொழில் கலிமாக்கள்
> கடல் இறவின் சூடு தின்றும்
> வயல் ஆமைப் புழுக்கு உண்டும்"[79]

என்பதால் கள்ளுணவு உண்ட செய்தியை நாம் அறிய முடிகிறது.

---

[78] நற். 239:1-3
[79] பட்டி. பா. 62-64

## விருந்தோம்பல்

நெய்தல் நில மகளிர் நெல்லை அரிசியாக்கித் தாம் உண்டதோடு அவ்வுணவினை விருந்தினருக்கும் அளித்தனர். இதனை,

> "திருவுடைவியல் நகர் வருவிருந்து அயர்மார்
> பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
> கொக்கு உகிர் நிமிரல் மாந்தி"[80]

என்பதால் அறியலாம். 'வரு விருந்து' என்னும் தொடர் இனி வரப்போகும் விருந்தினரைக் குறிக்கிறது. விருந்தினரை எதிர்பார்த்து சிறப்பு செய்ய வேண்டும் என்ற சிந்தனை நெய்தல் நில மக்களிடம் இருந்ததை இப்பகுதி எடுத்துக்காட்டுகின்றது.

நெய்தல் நிலப் பெண்கள் விருந்தினருக்கு மட்டுமல்லாது, அவர்களுடன் வந்த விலங்குகளுக்கும் உணவளித்தனர். உப்பிற்கு விலையாகப் பெற்ற நெல்லைக்குற்றி உணவாக்கி, அதனை குதிரைக்கும் உணவளிப்பதாக தலைவி கூறுவதை,

> "உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்
> அயினிமா இன்று அருந்த"[81]

என்ற பாடலடி புலப்படுத்துகிறது.

தலைவி மீனுக்கு மாற்றாக வாங்கிய நெல்லினை இடித்து மாவாக்கி, அதனுடன் தயிரிட்டுப் பிசைந்த உணவினை குதிரைகளுக்கும் கொடுப்பதாகக் கூறினாள். இதனை அகநானூற்றுப் பாடல் 340: 14-15 கூறுகிறது. இச்செய்திகள்

---

[80] நற் 258:4-6
[81] மேலது 254:6-7

விலங்குகளுக்கும் உணவளிக்கும் ஈகைப்பண்பை சங்ககால பெண்கள் கொண்டிருந்ததை புலப்படுத்துகிறது.

### பாலை நில உணவு வகைகள்

பாலை நில மக்களின் உணவாக புல்லரிசி, பருத்திக் கொட்டை, ஊனுணவு, கள், போன்றவற்றை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### புல்லரிசி உணவு

புல்லில் இருந்து கிடைக்கக்கூடிய அரிசியைப் புல்லுணவாக சங்க கால மக்கள் பயன்படுத்தினர். இன்றைய வழக்கில் 'புல்லுணவு' பெரும்பான்மையாக இல்லை. கிராமப் புறங்களில் சாமைப்புல், காடாக்கண்ணி முதலிய புல்வகை உணவுகளைப் பயன்படுத்துகின்றனர். எண் வகைக் கூலங்களுள் ஒன்றான புல்லினைப்பற்றி "பகைவர் புல்லார்க" என ஐங்குறுநூறு (4:2) கூறுகிறது. இதற்கு பகைவர் புல்லரிசிச் சோற்றினை உண்பார்களாக என்பது பொருளாகும்.

மறவர்கள் தம்முடைய உணவுக்காக விதைத்தவற்றுள் சில முளைக்காமல் நிலத்தில் கிடந்தன. அவற்றை எறும்புகள் உணவிற்காக எடுத்துச் சென்று வளையில் சேகரித்து வைத்தன. அதனை பாலை நில மக்கள் அகழ்ந்தெடுத்து தங்கள் உணவாகப் பயன்படுத்தினர். என்பதை,

> "சிறுபுல் உணவு நெறிபட மறுகி
> நுண்பல் எறும்பி கொண்டு அளைச் செறித்த
> வித்தா வல்சி, வீங்குசிலை, மறவர்
> பல் ஊழ் புக்கும் பயன்நிரை கவர"[82]

என அகப்பாடல் சுட்டுகிறது.

---

[82] அகம் 377:2-5

## எயிற்றியர் உணவு சமைத்தல்

எயிற்றியர் எறும்புப் புற்றிலிருந்து புல்லரிசியைத் தோண்டி எடுத்து உணவாகப் பயன்படுத்தினர். புல்லரிசியை உரலிலிட்டு குற்றி, ஊற்று தோண்டி நீர் எடுத்து அடுப்பு ஏற்றிக் கடுமையான சிரமத்திற்குப் பின் புல்லுணவைச் சமைத்தனர். இத்தகவலை,

> ''நுண் புல் அடக்கிய வெண் பல் எயிற்றியர்
> ...............................................................
> வாராது அட்ட வாகுஊன் புழுக்கல்''[83]

என எடுத்தியம்புகின்றது.

## பருத்திக் கொட்டை உணவு

பருத்திக் கொட்டை, புரதச் சத்து நிறைந்த உணவாகப் பயன்படுகிறது என உணவு நூல் வல்லுநர்கள் கூறுகின்றனர். பருத்திக் கொட்டையிலிருந்து பருத்திப் பாலெடுத்து இன்றைய மக்கள் உபயோகிக்கின்றனர். பாலை நிலத்தில் ஆண் பறவையானது பருத்திக் கொட்டையினுள் இருக்கும் பருப்பைப் பிளந்தெடுத்து பெண்பறவைக்கு ஊட்டியது. அப்போது கீழே விழுந்த விதைகளை வறுமையால் வாடிய பெண்டிர் பொறுக்கி பிற்கால உணவிற்குச் சேகரித்து வைத்தனர். என்பதை,

> ''பொதி வயிற்று இளங்காய் பேடை ஊட்டி
> போகில் பிளந்திட்ட பொங்கல் வெண்காழ்
> நல்கூர் பெண்டிர் அல்கற் கூட்டும்''[84]

என அகநானூறு கூறுகிறது. இதில் 'நல்கூர் பெண்டிர்' என்ற வரிகள் மூலம் பாலை நில மக்களின் வறுமை வெளிப்படுத்தப் பட்டுள்ளதை அறியலாம்.

---

[83] பெரும் - 94-100
[84] அகம் 129:8-10

## ஊனுணவு

எயிற்றியர் ஆழ்ந்த கிணற்றில் ஊறிய உவரி நீரை இறைத்து, பழைய பானையில் ஊற்றி, சோறு சமைப்பர். அவ்வாறு சமைத்த சோற்றினை கருவாட்டோடு உண்டு மகிழ்வர். புளிக்கறியிட்ட சோற்றினையும், ஆமாவின் சூட்டிறச்சியையும், முள்ளம் பன்றியின் தசையையும் உணவாகக் கொண்டனர். என்பதை,

"முளவு மா வல்சி எயினர் தங்கை"[85]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

மறவர் எருதினைக் கொன்று, தசையை நெருப்பிலிட்டு சுட்டு உண்டதை அகம் (265: 12-15) குறிப்பிடுகிறது.

விலங்குகளைக் கொன்று தமையன்மார்கள் கொணர்ந்த நிணமுடைய ஊனை எயிற்றியர் பகற்பொழுதில் வெயிலில் காய வைப்பர். இச்செய்தியை, ஐங்குறுநூறு 365-வது பாடல் புலப்படுத்துகிறது. இதிலிருந்து பாலை நில மக்கள் ஊனுணவை உண்டதை அறியமுடிகிறது.

## கள்ளுணவு

பாலை நில மக்கள் ஏனைய நிலங்களில் வாழ்ந்த மக்களைப் போன்று கள்ளுணவை மிகுதியாக அருந்தினர். எயிற்றியர் பன்னாடையால் அரிக்கப்பெற்ற நிறமுடைய கள்ளினை விற்றனர். அதனை சிவந்த கண்களையுடைய மறவர்கள் வயிறார உண்டதை,

---

[85] ஐங் 364:1

"அரியற் பெண்டிர் அல்கிற் கொண்ட
பகுவாய்ப் பாளைக் குவிமுலை சுரந்த
அரிநிறக் கலுழி ஆர மாந்தி"[86]

என அகப்பாடல் சுட்டுகிறது.

எருதின் தசையை சுட்டுத் தின்ற மறவர் நீர் வேட்கை நீங்கும் பொருட்டு நெல்லால் சமைத்த தோப்பிக் கள்ளினை அருந்தினர். என்பதை,

"விளர் ஊன் தின்ற வேட்கை நீங்க
துகள் அற விளைந்த தோப்பி பருகி"[87]

என்ற பாடலடி புலப்படுத்துகிறது. இதிலிருந்து பாலை நில மக்களின் கள் அருந்தும் வேட்கையை அறியலாம்.

**எயிற்றியர் விருந்தோம்பல்**

எயிற்றியர் விருந்தோம்புவதில் சிறந்திருந்தனர். இவர்களின் மனையில் ஈந்தின் விதை போன்ற அவிழாகிய சோறும், உடும்பின் பொரியலும் உணவாக இருந்தமையை அறிய முடிகிறது. விருந்தினர்க்கு தேக்கிலையில் உணவு கொடுத்ததை பெரும்பாணாற்றுப்படை (95-133) -வது பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

எயிற்றியர் காட்டுப்பன்றியைக் கறி சமைத்து இரவலர்க்கு சோற்றுடன் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை,

"பெரும்பெயர் ஆதி பிணங்கரிற் குடநாட்டு
............................
பைந்நிணம் பெருத்த பசுவெள் அமலை
வருநர்க்கு வரையாது தருவார்"[88]

---

86 அகம் 157:1-3

87 மேலது 265:15-16

88 புறம் 177

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. அரிதாகக் கிடைக்கும் புல்லரிசியை உவர்ப்பு நீரில், விளிம்பு உடைந்த பானை இருப்பினும், வறுமையை மறந்து விருந்தோம்பும் பண்பினை எயிற்றியர் பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

## பனங்குருத்து உணவு

சங்க காலத்தில் பனங்குருத்தைப் பிளந்து பதப்படுத்தியதை நற்றிணை குறிப்பிடுகிறது. இதிலிருந்து பனங்குருத்தை உணவாக பயன்படுத்தியதை நாம் அறியமுடிகிறது. இதனை,

> ‘‘செய் போழ் வெட்டிய பொய்தல் ஆயம்
> மாலை விரி நிலவில்’’[89]

என்ற பாடலில் சிவந்த பனங்குருத்தைப் பிளந்து பதப்படுத்துவதற்காகப் போடப்படும் மாலைப் பொழுதில் உடன் போக்குச் சென்ற தலைவியைத் தேடும்படி ஆயிற்று என உரை விளக்கம் அமைகிறது. இதனால் பனங்குருத்தை மாலைநேரம் பதப்படுத்த இடுவதை அறிய முடிகிறது.

உணவு கிடைக்கப் பெறாத வறுமையின் காரணமாக மரங்களின் நார்களையும், பனங்குருத்தையும் உணவாகச் சுவைத்து உண்டதை புறநானூறு உறுதிபடுத்துகிறது. இதனை,

> ‘‘நாரும், போழும் செய்து உண்டு, ஓராங்குப்
> பசி தினத்திரங்கிய இரும்பேர் ஒக்கற்கு’’[90]

என்பதால் அறியலாம். இன்றும் பனங்குருத்து, தென்னங்குருத்து இவற்றை உணவாக உண்ணும் பழக்கம் காணப்படுகிறது.

---

[89] நற். 271: 9-10

[90] புறம் - 370.

## நீர்

நாம் உட்கொள்கின்ற உணவுப்பொருட்களில் முதலிடம் வகிப்பது நீராகும். உடலுக்கு இன்றியமையாத உணவுப் பொருட்களில் நீர் முதன்மையானது. இதனைக் கருத்தில் கொண்டே வள்ளுவரும் "நீரின்றி அமையாது உலகு" எனக் கூறினார். உண்ட உணவு குருதியுடன் சேர்வதற்கும். குருதி தூய்மை அடைவதற்கும் நீர் பயன்படுகிறது. பழந்தமிழர் நீர் உண்பதற்கு உண் துறைகளை அமைத்திருந்தனர். இதனை "உண்துறை மகளிர் இரீஇயக் குண்டுநீர்" என நற்றிணை சுட்டுகிறது.

நீரானது அதன் வெப்பத் தன்மை பற்றி உரைக்கப்படும் போது வெந்நீர் என்றழைக்கப்படுகிறது. சுடுகின்ற நீரை வெந்நீர் என்பர். அந்தணரது வீட்டிற்குச் செல்லும் ஏழைகள் சோற்றுருண்டையை வயிறார உண்டு, முன்பனிக்காலமாதலால் வெந்நீரையும் செம்பில் பெற்றனர்.

இச்செய்தியை,

> "ஆசி றெருவி னாயில் வியன்கடைச்
> .........................................
> அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
> சேமச் செப்பிற் பெறீ இயரோ"[91]

என குறுந்தொகை நவில்கிறது. இன்று போலவே பழந்தமிழரும் வெந்நீர் பயன்படுத்தியச் செய்தியை அறியமுடிகிறது.

---

[91] குறுந் 277:1-5

குறிஞ்சி நில மக்கள் அருவி நீரையும், சுனை நீரையும் பயன்படுத்தினர். பலவகையான உணவுகளை உண்ட பின்னர் குளிர்ச்சியான நீரை அருந்தினர் என்பதை,

> ''அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
> நல் மரன் நளிய நறுந் தண் சாரல்
> கண்மிசை யருவி தண்ணெனப்பருகி''[92]

எனக் குறிப்பிடுகிறது. பளிங்கு போன்ற சுனை நீரும் குறிஞ்சி நில மக்களால் பயன்படுத்தப்பட்டது. இதனை,

> ''பளிங்குச் சொரிவன்ன பாய் சுனை''[93]

என்பதால் அறியலாம்.

முல்லை நில மக்கள் காட்டாற்று நீரினை பயன்படுத்தினர். விரைவாக ஓடும் தன்மையுடைய காட்டாற்று நீர் வழியிலுள்ள மரம், செடி, கொடிகளையெல்லாம் தழுவி அதன் சுவைகளையும் தன்னோடு இணைத்துக் கொள்வதால் சுவையுடையதாக இருக்கும். பல்வேறு செடிகொடிகளோடு கலந்து வருவதால் மருத்துவத் தன்மையை பெற்றிருப்பதாக மக்கள் கருதுகின்றனர். பழந்தமிழர் காட்டாற்று நீரைப் பயன்படுத்தியச் செய்தியை,

> ''........ கானக் கல்யாற்று
> தண்ணென உண்டு கண்ணில் நோக்கி
> முனியா நாடப் பெறின்''[94]

என நற்றிணைக் கூறுகிறது.

---

[92] புறம் 150:14-16
[93] குறிஞ்சி 57
[94] நற். 53:6-10

பாலைநில மக்கள் பெரும்பாலும் கிணற்று நீரை பயன்படுத்தியிருக்கின்றனர். கற்பாறைகளை உடைத்துக் கிணறு வெட்டும் போது அந்நீர் உவர் நீராக இருக்குமாதலால், வேறு வழியின்றி அதனை உண்பர். என்பதை,

> "கல்லுறுத்தியற்றிய வல்லுவர்க் கூவல்
> வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
> நனி நல் கூர்ந்தானா யினும்"[95]

என உறையூர் முது கூத்தனார் உவர்நீர் வழக்கில் இருந்தமையைச் சுட்டுகிறார். இன்றைய தமிழரும் கிணற்று நீரை குடிநீராகப் பயன்படுத்துகின்றனர்.

## தண்ணீரைத் தெளிய வைத்தல்

சங்ககால மக்கள் இயன்ற வரையில் தெளிந்த நீரினையே பயன்படுத்தியுள்ளனர். ஓடும் நீரோ, நல்ல சுனை நீரோ கிடைக்காத நிலையில் தூய்மையான தெளிந்த நீரினைப் பெறுவதற்காக பல்வேறு முயற்சிகள் மேற்கொண்டனர்.

வாளை மீனுடன் நீர்நாய் போரிட்டதன் விளைவாக நீர் கலங்கிய நிலையில் இருந்தது. ஆகவே அந்நீரினை எடுக்க விரும்பாத மகளிர் அந்நீர் தெளியும் வரை கள்ளினை அருந்தி காஞ்சி மரநிழலில் காத்திருந்தனர். என்பதை,

> "நாள்இரை தரீஇய எழுந்த நீர்நாய்
> வாளையொடு உழப்ப, துறைகலுழ்ந் தமையின்
> தெண்கட் தேறல் மாந்தி, மகளிர் நுண்செயல் அம்குடம் இரீஇ"[96]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

---

[95] புறம். 331: 1-3

[96] அகம். 336: 4-7.

மக்கள் வாழ்ந்த அனைத்துப் பகுதிகளிலும் தெளிந்த நீர் கிடைப்பதில்லை. அவ்வாறு தெளிந்த நீர் கிடைக்கப் பெறாமல் கலங்கிய நீர் கிடைத்தால் அதனைத் தெளிய வைப்பதற்காக தேற்றாங்கொட்டை விதையைப் பயன்படுத்தியுள்ளனர். இச்செய்தியை,

''கலம் சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து, நலம் பெற்றாள்''[97]

என்ற பாடல் மூலம் கலங்கிய நீர் விதையுடன் சேர்ந்து தெளிந்தது போல் தலைவி, தலைவனுடன் சேர்ந்து தெளிவடைந்தாள் என்ற உண்மை உணர்த்தப்படுகின்றது.

கலங்கிய நீரினைத் தெளிய வைப்பதற்காக கடுக்காயைப் பயன்படுத்தியச் செய்தியையும் அறிய முடிகிறது. இதனை,

''பூவற் படுவில் கூவல் தோண்டிய
செங்கண் சில்நீர் பெய்த சீறில்
முன்றில் இருந்த முதுவாய்ச் சாடி
யாம் கஃடு உண்டென, வறிது மாசு இன்று''[98]

என்ற பாடல் மூலம் கலங்கிய நீர் இருந்த பானையில் கடுக்காயை இட்டு நீரினைத் தெளிய வைத்த உண்மை புலப்படுகிறது. சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கையாக கிடைக்கப்பெற்ற தேற்றாங்கொட்டை மற்றும் கடுக்காயைப் பயன்படுத்தி நீரினைத் தெளிய வைத்துள்ளனர். ஆனால் தற்கால மக்கள் இயற்கைப் பொருளை விரும்பாமல் செயற்கைப் பொருளையே நாடிச் செல்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

---

[97] கலி. 142: 64-65.
[98] புறம். 319

**தாய்ப்பால்**

தாய்ப்பால் குழந்தைகளின் மிகச்சிறந்த உணவாகும். சங்க காலத்தில் தாயானவள் குழந்தைக்குப் பாலூட்டியதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பல குன்றுகளுடைய நாட்டைத் தனக்குரிமையாகக் கொண்ட தலைவனது மனைவி தன் மகனுக்கு தாய்ப்பால் ஊட்டியச் செய்தியை,

> “வாள் நுதல் அரிவை மகன் முலை ஊட்ட
> ..........................................................................
> குறும்பல் பொறைய நாடு கிழவோனே”[99]

என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

தாய்ப்பால் அருந்தாது முற்றத்தில் தேரை உருட்டி நடைப்பயிற்சி மேற்கொண்டிருக்கும் தன் மகனை எண்ணி தாய் கூறுவதை,

> “மைஅற விளங்கிய மணிமருள் அவ்வாய் தன்
> ……………………………………………………….
> பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்
> கால்வல் தேர் கையின் இயக்கி நடைபயிற்றா”[100]

என கலித்தொகை எடுத்தியம்புகிறது. பாலோடு விம்மின மார்பில் பாலுண்பதையும் மறந்து முற்றத்தில் உருட்டி விளையாடும் தேரைக் கையால் தள்ளியவாறு நடை பயிலுகிறான் என தாய் கூறுவதைக் காண முடிகிறது. இப்பாடலின் வழியாக நாம் பல செய்திகளை அறியலாம். குழந்தைப் பிறந்த பன்னிரண்டாவது மாதத்தில் நடந்து பழகுகிற பருவமுடைய குழந்தையைக் குறிப்பதாக இப்பாடல் அமைகிறது. இதன் மூலம் குழந்தை பிறந்த ஒரு ஆண்டு வரை தாய் குழந்தைக்குப் பாலூட்டியதை உணரலாம். ஆனால் இன்று குழந்தை

---

[99] ஐங். 404
[100] கலித். 81: 1-8

பிறந்த ஓராண்டுக்குள் தாய்ப்பால் கொடுப்பதைப் பெண்கள் நிறுத்தி விடுவதைக் நாம் காணலாம். இதற்கு பெண்கள் வேலைக்குச் செல்வதும் ஒரு காரணமாகும். ஒரு குழந்தைக்கு ஒன்றரை வயது வரை தாய்ப்பால் கொடுப்பது சிறந்தது. தாய்ப்பாலில் தான் குழந்தைக்குத் தேவையான அனைத்துச் சத்துகளும் நிறைந்துள்ளன எனவும், ஒன்றரை வயது வரை பாலூட்டும் தாய்மார்க்கு மார்பக புற்றுநோய் வராது எனவும் மருத்துவர்கள் பரிந்துரைக்கின்றனர்.

**சமுதாய மரபு**

ஒரு செயல் பல தலைமுறையினால் பின்பற்றப்பட்டால் அதற்கு மரபு என்று பெயர். மரபு இருவகைப்படும். ஒன்று சமுதாய மரபு, மற்றொன்று இலக்கிய மரபு.

ஒரு குறிப்பிட்ட இனத்தாரிடம் காணப்படும் பழக்கவழக்கங்களும், சடங்கு முறைகளும் சமுதாய மரபு எனப்படும். ஒரு குறிப்பிட்ட மொழியினர், இலக்கியத்தில் வழிவழியாகப் பின்பற்றிவரும் உத்திகள் இலக்கிய மரபு அல்லது இலக்கிய இயல்பு ஆகும். முன்னோர் தம் பழக்கத்திலிருந்து பின்னோரால் அறிந்து பின்பற்றப்படுகிற நல்ல வழக்கங்கள் சமுதாய மரபுகள் ஆகி விடுகின்றன. ஒரு காலத்தில் சிறந்த மரபுகளாக மதித்து கடைப்பிடிக்கப்பட்டவை தொடர்ந்து நெடுங்காலம் பின்பற்றப்பட்டு நிலை பெறுதலும் உண்டு. சில மரபுகள் காலப்போக்கில் மாற்றமடைவதும் உண்டு. சில வழக்கிழந்து போவதும் உண்டு. இவை கால சூழ்நிலைகளைப் பொறுத்தவை.

மரபுகளுக்கு விளக்கம் தரும் முறையில் “சாலை இளந்திரையன் - சமுதாய அமைப்பில் சில சம்பிரதாயங்களும், வரன்முறைகளும் ஓரளவு இன்றியமையாதவை. ஆழ்ந்து நோக்கினால் அவற்றில் ஒன்று மில்லாவிட்டாலும் ஒரு கூட்டாகக் கடைப்பிடிக்கத்தகுந்த சில பழக்க வழக்கங்கள் இருக்க வேண்டிய நிலையுள்ளது. பிறப்பு, திருமணம் முதலியவற்றையொட்டி நடக்கும் சடங்குகளெல்லாம் இத்தகையவே என்கிறார்”. இத்தகைய மரபுகளாகிய பழக்கவழக்கங்கள் அந்த சமுதாயத்தினரின் நம்பிக்கை அடிப்படையில் இருந்து வருபனவாகும். அவ்வகையில் சங்ககால மக்களின் உணவு மரபுகள் நம்பிக்கைகள், சடங்குகள், குடும்ப மற்றும் சமூக உறவுகளை ஆய்வதாக இவ்வாய்வேடு அமைந்துள்ளது.

## தொகுப்புரை

சங்க கால மக்கள் தம் நிலத்தில் உற்பத்திச் செய்த உணவுப் பொருட்களையும், பண்டமாற்று முறையில் பெற்ற உணவுப் பொருட்களையும் உணவாகக் கொண்டனர். குறிஞ்சி நில மக்கள் தினையரிசி, ஐவன அரிசி, மூங்கிலரிசி, தினைமாவு, பலாச்சுளை, பலாக்கொட்டை, பால், தேன், நெய், ஊனுணவு, கள் ஆகியவற்றை உணவாகக் கொண்டனர். ஊனுணவை சிறப்புணவாகக் கொண்டு பகுத்து உண்டனர். மேலும் விருந்தோம்பலின் போது கள்ளுணவினைக் கொடுத்து உபசரித்தனர்.

முல்லை நில மக்கள் ஆடு, மாடுகள் மேய்த்து அவற்றிலிருந்து கிடைத்த பால்பொருட்களை உணவாகக் கொண்டனர். காய்ச்சப்படாத பாலிலிருந்து வெண்ணெய் தயாரிக்கும் பழக்கத்தையும் கொண்டிருந்தனர். முல்லை

நிலத்தலைவி செம்மறி ஆட்டின் பாலிலிருந்து செய்யப்பட்ட தயிரில், புளிப்புடைய உணவு சமைத்து விருந்து செய்ததை அறிய முடிகிறது. கருணைக்கிழங்கினைப் பொரியலாகச் சமைத்தும், ஊனுணவினை நெய்விட்டு பொரித்தும் விருந்தினரை உபசரித்தனர். நெல்லிக்கனி, விளாம்பழம், புளியம் பழம் போன்றவற்றையும் உணவாகக் கொண்டனர்.

மருத நிலம் செழிப்புடையதாகத் திகழ்ந்தது. இந்நிலத்தின் மக்கள் வேளாண்மையின் மூலம் கிடைத்த நெல்லையும், நெல்லிற்குப் பண்ட மாற்றாகப் பெற்ற பொருட்களையும் உணவாகக் கொண்டனர். பாலுணவு மற்றும் கொள்ளும், பயறும், பாலும் கலந்த கூழுணவு இவற்றை விரும்பியுண்டனர். உழுந்தம் சோறு, உழுந்தம் பணியாரம் நெற்பொரி, அவல், மாங்காய்ச் சாற்றுணவு, பாகற்காய் முதலிய உணவுகளையும், நன்னீரில் வாழும் வரால் மீனுணவினையும் உண்டனர். இளமகளிர் இன்பத்தின் மயக்கத்தால் கள்ளினை அருந்தாது, மதுவினைக் குடித்தனர். இதனால் ஏற்பட்ட மயக்கத்தில் கணவர் அணியும் மாலையினை மனைவி அணிந்ததையும், மனைவி அணியும் மாலையினை கணவன் அணிந்ததையும் அறிய முடிகிறது. கள்ளுண்டு மயங்கிய பெண்ணொருத்தி தன் மீது மொய்க்கும் வண்டினை எங்கு சென்று விரட்டுகிறோம் என்ற இடந்தெரியாமல் விரட்டிச் சென்றதையும் விளக்கப்பட்டுள்ளது.

நெய்தல் நில மகளிர் மீனுணவினையும், மீனுக்கு மாற்றாகக் கிடைத்த பொருட்களையும் பயன்படுத்தினர். மீனைக் குழம்புக்கறியாகவும், கருவாடாகவும், சுட்டும் உணவாகக் கொண்டனர். நுளைமகள் கள்ளுணவினைக்

காய்ச்சி அரித்து பயன்படுத்தியதை அறிய முடிகிறது. விருந்தினரை எதிர்பார்த்து சிறப்பு செய்து, அவர்களுடன் வந்த விலங்குகளுக்கும் உணவளித்தனர்.

பாலை நில மக்கள் புல்லரிசி, பருத்திக்கொட்டை, ஊனுணவு, கள் முதலிய உணவு வகைகளை உட்கொண்டனர். எயிற்றியர் வறுமையில் வாடின போதும் விருந்தினரை சிறப்பாக உபசரித்தனர்.

இன்று போலவே பழந்தமிழரும் வெந்நீரையும், குளிர்ச்சியான நீரையும் அருந்தினர். சங்க காலத்தில் தாயானவள் தன்னுடைய குழந்தைகளுக்கு நடைபயிலும் பருவத்திலும் பாலூட்டியதை அறிய முடிகிறது.

ஊன் வகைகளைச் சுட்டும், பொரித்தும் உண்டனர். ஆனால் மீன் வகைகளைப் பொரித்து உண்ட செய்தி காணப்படவில்லை.

கள்ளுணவினை இருபாலரும் அருந்தினாலும் இவ்வுணவை வெறுத்த பெற்றோரும் இருந்ததை முல்லைத்திணைப்பாடல் விளக்குகிறது.

சங்க கால உணவுப் பழக்கத்தினை தற்கால மக்கள் பின்பற்றி வந்தாலும் பலர் புதுமை என்ற பெயரில் துரித உணவுப் பழக்கத்திற்கு தங்களை மாற்றியுள்ளனர். இந்த உணவுப் பழக்கமானது உடலுக்குத் தீங்கு விளைவிப்பதாக உள்ளது. ஆகவே பெரும்பாலான மக்கள் பழைய உணவு முறைக்கு மீண்டும் மாறிவருவது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு ஐந்திணைகளுக்கும் உரிய உணவு குறித்தும், உணவு தயாரிப்பது குறித்தும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

முன்னுரை

நம்பிக்கை - விளக்கம்

நம்பிக்கை - தோன்றக் காரணங்கள்

உளவியலாரின் கருத்து

நிமித்தம் - பொருள்

நிமித்தங்களின் வகைகள்

விரிச்சி கேட்டல்

கட்டு பார்த்தல்

நாளும், நேரமும் பார்த்தல்

நிமித்தங்கள் உணர்த்துபவை

புள் நிமித்தம்

தீய நிமித்த நம்பிக்கை

விலங்குகள்

மர நிமித்தம்

விண்ணியல் நிமித்தம்

உடலுறுப்புகள் குறித்த நம்பிக்கை

தும்மல், புரையேறுதல் பற்றிய நம்பிக்கை

கனவு நம்பிக்கை

உளவியலாளர் கருத்து

பல்லி ஒலித்தல் பற்றிய நம்பிக்கை

இறை நம்பிக்கை

தெய்வத்திடம் வேண்டுதல்

நேர்த்திக்கடன் செலுத்துதல்

கடவுளைப் பழித்தல்

கூற்றுவன் பற்றிய நம்பிக்கை

இம்மை, மறுமை நம்பிக்கை

சூளுரை மீது நம்பிக்கை

ஊழ்வினை நம்பிக்கை

ஊழிக்காலம்-நம்பிக்கை

பலி பற்றிய நம்பிக்கை

பேய் குறித்த நம்பிக்கை

வெறியாட்டு

பிறை தொழுதல்

தை நீராடல்

நடுகல் நம்பிக்கை

சூரர மகளிர் வழிபாடு

சடங்கு

திருமணச் சடங்கு

திருமணச் சடங்கின் தோற்றம், தேவை

திருமணச் சடங்கின் நோக்கம்

சிலம்பு கழி நோன்பு

திருமண நாள் சடங்கு

மண நீராட்டுதல்

இசைக் கருவி முழக்குதல்

விளக்கேற்றல்

மலரணிதல்

காப்பு கட்டுதல்

மணப்பெண் உணவு சமைக்கும் சடங்கு

ஐம்படைத்தாலி

குழந்தைப் பேற்றுச் சடங்கு

விழாக்கள்

பலியிடுதல்

நிறைவுரை

## முன்னுரை

இலக்கியங்கள் மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்யும் ஆவணங்களாக விளங்குகின்றன. சங்க காலம் முதல் இன்று வரை தமிழர்களின் அகவாழ்வையும், புறவாழ்வையும் ஒவ்வொரு காலத்தில் எழுந்த இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. சங்ககாலம் முதற்கொண்டு தமிழர்கள் கடைப்பிடித்து வரும் சில ஒழுகலாறுகளை நம்பிக்கை எனலாம். தமிழர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை பலவிதமான நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் பின்பற்றி வருகின்றனர். இந்த நம்பிக்கைகள் தமிழர்களது தனிமனித வாழ்வையும், சமூக வாழ்வையும் வழி நடத்திச் செல்பனவாக விளங்குகின்றன. இவை தமிழர்களது வாழ்வின் இன்றியமையாத கூறுகளாகவும் காணப்படுகின்றன. மனித வாழ்வில் நிகழும் இடையூறுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையில், மனித மனம் சிலவற்றைப் படைத்து காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவை நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன. உலகிலுள்ள அனைத்து மனிதர்களிடமும் நம்பிக்கை உள்ளது. மனிதனின் பட்டறிவு, பகுத்தறிவு, கற்றுத்தெளிவடைதல் இவற்றால் உணர்ந்து மூட நம்பிக்கைகளை விட்டு நல்ல நம்பிக்கைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். இருப்பினும் பகுத்தறிவாளர்கள் பகுத்து அறிவதே சரியென நம்பும் கொள்கையும் ஒரு நம்பிக்கையே ஆகும். மக்கள் தாங்கள் செய்து வரும் வழிபாடு, விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர். இவ்வாறு பரம்பரையாக செய்து வரும் செயல்களே சடங்குகளாகும். இவை நூல் முறையாலும், சான்றோர் நெறியாலும் வழி வழியாக வருவன. இவற்றை அறிந்த முதியோர் ஏனையோர்க்கு வழிகாட்ட இவை பின்பற்றப்படுகின்றன.

## நம்பிக்கை - விளக்கம்

நம்பிக்கை - என்பதற்கு “விசுவாசம், ஆணை, சத்தியம் உறுதிப்பாடு, நிசம்”[1] என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதி பல்வேறு பொருள்களைத் தருகிறது. மனிதன் இயற்கையின் பாதிப்பிற்கு மிகுதியாக உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் நம்பிக்கைகள் தோன்றியிருக்கலாம் என்ற கருத்து இன்றைய சமூகத்தில் நிலவி வருகிறது. சமூகத்தால் தலைமுறை, தலைமுறையாகப் பின்பற்றி வரும் செயல்கள் ‘மரபு’ எனப்படும், அத்தகு மரபுகளைச் சமூக நன்மை கருதி உருவாக்கப்பட்ட எழுதாச் சட்டங்கள் எனலாம். சங்க காலத் தமிழர்கள் தம் வாழ்க்கை முறைகளில் சில மரபுகளைத் தொடர்ந்து பின்பற்றி சமூக நன்மைக்குத் துணைபுரிகின்றனர்.

## நம்பிக்கைத் தோன்ற காரணங்கள்

இயற்கையில் ஏற்படும் மாற்றங்களின் பயமும், நன்மை பெற வேண்டுமென்ற எண்ணங்களுமே நம்பிக்கை தோன்ற காரணங்களாகும். இதனைப் பின்பற்றியே தெய்வம், மந்திரம், சடங்கு, பேய் என்பவை உருவானது. தாயின் வயிற்றுக்குள் குழந்தை உருவாவதும், தேங்காய்க்குள் நீர் நிறைந்திருப்பதும், நாம் நினைப்பவை அனைத்தும் நடக்காததும் ஒரு தெய்வீக சக்தியாகும். இதுவே நம்பிக்கையாக மாற்றம் பெற்றன. மனிதர்கள் ஒவ்வொருவருக்குள்ளும் பல்வேறு வகையான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. அவை மனிதனின் மரபணு, வளரும் சூழல் ஆகியவற்றிற்கேற்ப மாறுபடுகின்றன. ஒருவர் கொண்டுள்ள நம்பிக்கை இன்னொருவருக்கு மூடநம்பிக்கையாக இருக்கலாம்.

---

[1] மதுரைத் தமிழ் பேரகராதி, ப. 13.

மனிதன் தான் செய்யும் செயல்களில் வெற்றி கிடைக்க வேண்டுமென்பதற்காகவும், தீயச் செயல்கள் நடைபெறாமல் தடுப்பதற்காகவும் இறைவனை வேண்டி இறை நம்பிக்கையுடன் வாழத் தொடங்கினான். வாழ்க்கை மரபுகள் என்பதில் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், நோன்புகள் ஆகியன அடங்கும். நம்பிக்கை ஒரு செயலின் காரணமாகவும், மரபு வழியாக சந்ததிகள் தோறும் பின்பற்றப்படுகிறது.

நன்று, தீது குறித்த எண்ணத்தாலும், அச்சம், ஆர்வம் ஆகியவற்றின் காரணமாகவும் தமிழரிடையே காலங்காலமாகப் பல நம்பிக்கைகள் தோன்றி வழங்கி வருகின்றன. நிமித்தங்களும், நிமித்தக் கூறுகளும் பார்த்தல், நல்லநாள் பார்த்தல், விரிச்சி கேட்டல் போன்ற பல நம்பிக்கைகள் பண்டையத் தமிழரிடையே தோன்றின. இந்த நம்பிக்கைகளில் பல அறிவியல் அடிப்படை அற்றவை. ஆயினும் இவற்றின் தாக்கம் தமிழ் மக்களின் உள்ளங்களில் மிகுதியாகவே உள்ளது. காரண காரிய தொடர்புக்குட்பட்டு ஆதாரங்களின் வாயிலாக நிரூபிக்க முடிவதை நம்பிக்கை எனவும், அவ்வாறு நிரூபிக்க முடியாததை மூட நம்பிக்கை எனவும் கொள்ளலாம். நம்பிக்கைகள் எப்பொழுது தோன்றின எனத் திட்டவட்டமாகக் கூறுதல் இயலாது. எனினும் இயற்கையின் பாதிப்புக்கு உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்க காலத்தில் அவை தோன்றின எனலாம்.

## உளவியலாரின் கருத்து

ஒரு சமுதாயத்தின் நம்பிக்கை மற்றொரு சமுதாயத்தின் நோக்கில் மூட நம்பிக்கையாக இருக்கலாம். இதுபோல ஒரு சமுதாயத்தின் மூட நம்பிக்கை மற்றொரு சமுதாயத்தின் நல் நம்பிக்கையாகவும் திகழலாம். ‘‘அறிவு வளர்ச்சி

தோன்றிய இக்காலத்தில் பெரும்பான்மையான நம்பிக்கைகள் மூட நம்பிக்கைகளாகக் கருதப்படுகிறது. அன்றைய காலத்தில் மூட நம்பிக்கையாகக் கருதப்பட்டவை, இன்றைய அறிவியல் ஆய்வில் நம்பிக்கைகளாக மாறியுள்ளது என்று டாக்டர். க. கைலாசபதி அவர்கள் கூறியுள்ளார். மேலும் நம்பிக்கைகளுக்குக் காரணம் காணுதல் இலகுவன்று என்ற கருத்தையும் கூறியுள்ளார்''[2].

## நிமித்தம் - பொருள்

நிமித்தம் என்ற சொல்லிற்கு ''ஏது காரணம், அடையாளம், பொருட்டு, சகுனம், புட்குறி''[3] என பல பொருள்கள் காணப்படுவதை மதுரைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது. இன்று காரணம், பொருட்டு ஆகிய பொருள்கள் நடைமுறை பேச்சு வழக்கிலுள்ளது.

''நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை, தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி''[4] என்று இ. சுந்தரமூர்த்தி குறிப்பர். ''நிமித்தம் என்பது நிகழப்போவதை உணர்த்துவதாகக் கருதப்படும் சம்பவம், சமயம் போன்ற குறிப்பு''[5] என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கூறுகிறது.

'நிமித்தம்' என்ற சொல்லிற்கு 'அறிவிப்பது' என்று பொருள். ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன் நல்ல நாளும், நல்ல நேரமும்,

---

2 மதுரைத் தமிழ்ப் பேரகராதி, பக். 51.
3 கைலாசபதி, க. பண்டைத் தமிழர், வாழ்வும் வழிபாடும், ப. 44.
4 சுந்தரமூர்த்தி, இலக்கியச்சுடர், பக். 11.
5 க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 823.

நன்னிமித்தமும் பார்த்துத் தொடங்கினால் அச்செயல் நன்மையாக முடியும் என்பது பண்டையத் தமிழ் சமூகத்தின் நம்பிக்கையாகும்.

நிமித்தங்கள் நம்பிக்கைகளுக்கு முக்கியமானதாகும். மனிதன் ஆற்றலுடன் செய்யும் செயல்களுக்கும், இயற்கையின் செயல்களுக்கும் ஒரு தொடர்பாக அமைவது நிமித்தக் கூறுகள் ஆகும். இவை நன்மையையும், தீமையையும் வெளிப்படுத்துகின்றன எனலாம்.

**நிமித்தங்களின் வகைகள்**

நிமித்தங்களை நன்னிமித்தம், தீநிமித்தம் என இருவகைப்படுத்தலாம். பொதுவாக இந்த நிமித்தங்கள் நாள், பொழுது, கோள், விலங்கு, பறவை, மாந்தர், மரம் போன்றவற்றின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றன.

**நன்னிமித்தம்**

நன்னிமித்தம், செயலைச் செய்வதற்கு தூண்டுவதாக இருக்கும். எப்பொழுதும் நிகழ்வது நிமித்தமாகாது. எப்பொழுதாவது நிகழ்வதே நிமித்தமாகும். பறவாத போது பறந்த நாரையும், பூவாத போது பூத்த மலரும், செறியாத போது செறிந்த வளைகளும் தலைவன் வரவு குறித்த நன்னிமித்தங்களாக உணரப்பட்டது.

பிரிவுத் துயரால் வாடுகின்றதான, தலைவியைச் சுற்றிலும் நடப்பவற்றைத் தோழி காண்கிறாள். அவை அவளுக்கு நல்ல நிமித்தமாகத் தோன்றின. எனவே, தலைவிக்கு அவள் ஆறுதல் கூறினாள். வானத்தில்

நாரைகள் உயரமாகப் பறந்தன. மலர்கள் மலர்ந்து, தேனீக்கள் தேனைத் தொகுக்க மலர்களை நாடின. தலைவியின் தோள்கள் புதுப்பொலிவைப் பெற்றன. மகிழ்ச்சியைத் தரும் செயல்கள் நிகழ இருப்பதை இந்நிமித்தங்கள் அறிவித்தன. ஆகவே, தலைவன் வருவான் என்பதை தோழி முறையாக எடுத்துக் கூறினாள். இதனை,

"குருகும் இருவிசும்பு இவரும் புதலும்
கரிவண்டு ஊதவாய் நெகிழ்ந்தனவே
கரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்
வருவர் கொல்வாழி - தோழி"[6]

என நன்னிமித்தங்களைச் சுட்டிக் காட்டி தோழி தலைவியைத் தேற்றினாள்.

நல்ல நிமித்தம் பார்த்துப் படைக்கலங்களை எடுக்கும் ஆடவரை அகநானூறு,

"குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்தும்
படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்"[7]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

## தீய நிமித்தம்

தீய நிமித்தம் சோர்வு தரக்கூடியது. அதற்காக மனமுடையாமல் தொடர்ந்து உழைக்க வேண்டுமென்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. தீமையை உணர்த்தும் குறியீடுகளாக மரங்கள், பறவைகள், விலங்குகள், கனவுகள் போன்றவை சங்ககாலத்தில் அமைந்துள்ளன. தலைவன் இடைச் சுரத்திலிருந்து திரும்பி வரும் போது தன் கன்றை இழந்துச் செல்லும்

[6] குறுந். 260: 1 - 4.
[7] அகம். 207: 3 - 4.

பசு குறுக்கிடுகிறது. இவ்வாறு கன்றை இழந்துச் செல்லும் பசு குறுக்கிடுவது தீய நிமித்தமாக கருதப்பட்டது. ஆயினும் தலைவன் அதனை மனதில் கொள்ளாமல் திரும்பி வருவான் என தோழி தலைவிக்குக் கூறி அவளைத் தேற்றினாள். இதனை, குறுந்தொகைப் பாடல் (260: 7-8) குறிப்பிடுகிறது.

### விரிச்சி கேட்டல்

நற்செய்தியை எதிர்பார்த்திருக்கும் போது பிறர் வாயிலாகப் பொருத்தமான சொற்களைக் கேட்டு அதனால் நம்பிக்கைக் கொள்ளுதல் "விரிச்சி" எனப்படும். எதிர்பாராத முறையில் தீய சொற்களைக் கேட்டல் தீய சகுனமாகும். "விரிச்சி கேட்டல்" என்பதற்கு "நற்சொல் கேட்டல்" எனவும் பொருள் கொள்வர். இதனை அசரீரி எனவும் வழங்குவர். தலைவியின் காதல் நோயினை அறியாத தாய், அதனை அறிய விரும்பி கட்டுவிச்சியினை அழைத்து விரிச்சி கேட்பது வழக்கம்.

பண்டையக் காலத்தில் குறிகேட்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது என்பதனை அகப்பொருள் இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. குறிசொல்லும் பெண்களை கட்டுவிச்சி என்றும், அகவன் மகள் என்றும், குறிசொல்வோனை வேலன் என்றும் குறிப்பிட்டனர்.

தெய்வங்களை அழைத்துக் குறைகேட்டலும், அவை நிறை கூறுவதுமான தெய்வழிபாட்டுச் செய்திகளைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. தலைவியின் உடலின்கண் ஏற்பட்ட வேறுபாட்டின் காரணத்தினைச் செவிலித்தாய் முதலியோர் நெற்குறி பார்ப்பவர்களைக் கொண்டு ஆராய்ந்ததை சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

ஏதேனும் ஒரு செய்தியைப் பற்றி இருவர் பேசும் போது அருகிலிருப்பவர்கள் அவர்கள் பேசும் வார்த்தைகளைத் தமக்கு சாதகமாக எடுத்துக் கொள்வதும், யாருக்காகவோ யாரோ சொல்லும் சொற்களைத் தனக்குச் சொன்னதாக நம்புவதும் விரிச்சி கேட்டல் எனப்பட்டது.

தலைவியின் பக்கத்து வீட்டில் வசிப்பவர் 'வருவார்' என்று கூறிய சொல்லைத் தலைவியும், தோழியும் விரிச்சியாக எடுத்துக் கொண்டனர். அவள் கூறியவாறு தலைவன் வரைவோடு வந்தான் என்பதை,

> ''அமிழ்தம் உண்க - நம் அயல் இலாட்டி
> பால் கலப்பன்ன தேக்கொக்கு அருந்துபு
> நீலமென்சிறை வள் உகிர்ப் பறவை
> நெல்லி அம் புளிமாந்தி, அயலது
> .......................................................................
> மலைகெழு நாடனை வரும் என்றோளே''[8]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

மேலும் முதுபெண்டிர் விரிச்சி கேட்கும் முறையை பத்துப்பாட்டு நூல்கள் மூலம் அறியலாம். இதனை,

> ''யாழ் இசை வண்டு, ஆர்ப்ப நெல்லோடு
> நாழி கொண்ட நறுவீமுல்லை
> அரும்பு அவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
> பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப''[9]

என முல்லைப்பாட்டு கூறுகிறது.

---

[8] குறுந். 201.
[9] முல்லைப்பாட்டு, 8 - 11.

தொல்காப்பிய புறத்திணையில் வெட்சித்திணைக்கண் போர் நிகழ்ச்சிக்குரிய துறைகளுள் ஒன்றாக “பாக்கத்து விரிச்சி” சுட்டப்படுகிறது.

“படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி”[10]

எனவும்,

“திரிந்திழை விரிச்சி நிற்ப”[11]

“நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்”[12]

என்ற புறநானூற்றுப் பாடலடிகளிலும் விரிச்சி என்ற சொல் பயின்று வந்துள்ளது. விரிச்சி கேட்டல் ‘வாய்ப்புள்’ எனவும் வழங்கப்படுகிறது. பறவைகளின் ஒலியை வைத்து புள் நிமித்தம் பார்க்கப்பட்டது போன்று வாய்ச் சொல்லையும் நன்னிமித்தமாகக் கொண்டனர். வேண்டிய பொருளின் விளைவினை நன்கு அறிவதற்காக இருள் குவியும் மாலை வேளையில் சொல்லோர்ந்து நிற்றல் விரிச்சி என்பதை,

“வேண்டியப் பொருளின் விளைவு நன்கறிவதற்கு
ஈண்டிருள் மாலைச் சொல்லோர்த்தன்று”[13]

என புறப்பொருள் வெண்பாமாலை விளக்குகிறது.

மனித சமூகத்தின் நம்பிக்கைச் சார்ந்த செயல்பாடுகளில் குறிசொல்லுதல், குறிகேட்டல், குறி அறிதல் போன்றவையும் அவை சார்ந்த செயல்பாடுகளும் முக்கியத்துவம் பெறுகின்றன.

இன்றைய அறிவு வளர்ச்சி மிக்க காலத்திலும் விரிச்சி கேட்டல், சகுனம் பார்த்தல், பூ பொருத்தம் பார்த்தல் என்ற நிலையில் மக்களிடையே இவ்வியல்புகள் காணப்படுகின்றன எனலாம்.

---

[10] இளம்பூரணனார் உரை, தொல். பொருள், நூற். 6.
[11] தொல். பொருள் நூற். 6.
[12] புறம். 280: 6.
[13] புறப்பொருள் வெண்பாமாலை, நூற். 3.

## கட்டு பார்த்தல்

கட்டு என்பது சேரியின் வயதான பெண்ணாகிய குறிசொல்லும் மாதரை வீட்டிற்கு அழைத்து வந்து, முறத்தில் பிடி நெல்லையிட்டு தெய்வத்திற்கு வழிபாடு செய்து குறி கூறுவது என்றும், குறி கூறும் பெண் குறி கேட்போரை முன் அமர்த்தி முறத்திலே பிடி நெல்லையிட்டுத் தெய்வத்தை வழிபட்டு அந்நெல்லினை நான்கு, நான்காக பகுத்து எண்ணி, ஒற்றை எண்ணாக வந்தால் நன்மை நேரும் என்றும் இரட்டை எண்ணாக வந்தால் தீமை நேரும் என்றும் இதனால் என்னென்ன பலன்கள் கிட்டும் என்று கூறுவதே கட்டு என்று விளக்கமளிக்கிறது.

கட்டுவிச்சி நரை மூதாட்டியராக இருப்பாள். ஆகவே அவள் கூறுவது பலரால் ஏற்கப்பெற்று பாராட்டைப் பெறும். அவள் தெய்வங்களையும், கட்டுக்கேட்பவர்களின் இருமரபினையும் அழைத்துப் பாடும் இயல்புடையவள்.

செவிலித்தாய் கட்டுவிச்சியை அழைத்து தலைவியின் காதல் நோயின் உண்மைத் தன்மையை அறிய கட்டுப்பார்க்கிறாள். கட்டுவிச்சி பாடும் போது தலைவன் குன்றத்தை மீண்டும் பாடும்படியாக தோழி வேண்டுகிறாள். இதனால் கட்டுவிச்சி பலமுறை தலைவன் குன்றத்தைப் பாடுகிறாள். அவ்வேளையில் செவிலிக்குத் தலைவன் குன்றத்தை ஏன் பலமுறை பாடவேண்டுமென்ற ஐயம் எழுகிறது. அப்போது தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கிறாள். என்பதனை,

''அகவன் மகளே! அகவன் மகளே
மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங்கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே

இன்னும் பாடுக பாட்டே - அவர்
நல்நெடுங் குன்றம் பாடிய பாட்டே"[14]

என்ற குறுந்தொகைப் பாடல் மூலம் ஔவையார் வெளிப்படுத்தியுள்ளார்.

நற்றிணையில் குன்ற நாடன் பிரிந்து சென்றதால் தலைவியின் நல்ல நுதலில் பசலைப் படர்கிறது. இதனைக் கண்ட தாய் செம்மையான முதியப் பெண்ணாகிய கட்டுவிச்சியை அழைத்து முறத்தில் நெல்லினையிட்டு, முறத்தின் முன் தலைவியை நிறுத்தி கட்டுக் கேட்கிறாள் என்பதை,

"குன்ற நாடன் பிரிவின் சென்று
நல் நுதல் பரந்த பசலை கண்டு, அன்னை
செம் முது பெண்டிரோடு நெல்முன் நிறீஇ,
கட்டின் கேட்கும்"[15]

என்ற பாடலால் அறியலாம். இடுக்கி மாவட்ட பழங்குடிகளான மன்னான் இன மக்களிடம் கட்டுப்பார்க்கும் வழக்கம் இன்று வரை இருப்பதை டாக்டர். நசீம்தீன் குறிப்பிடுகின்றார். ஒரு பலகையில் சிறிது நெல்லை குவித்து குறி பார்க்க வந்தவரை அதிலிருந்து சிறிது நெல்லை நீக்கும் படி கூறி, அவ்வாறு நீக்கிய நெல்லை எண்ணிக்கையிட்டு, ஒற்றை எண்ணாக அல்லது இரட்டை எண்ணாக வருவது கொண்டு அவர்கள் எண்ணிய காரியம் நிறைவேறுமா? நிறைவேறாதா? என்பதைக் கணிக்கின்றனர்[16].

---

14 குறுந். 23.
15 நற். 288: 4 - 7.
16 நசீம்தீன்., இடுக்கி மாவட்ட பழங்குடி மக்களின் வழக்காற்றியல், ப. 70.

கட்டுவிச்சி முறத்தில் நெல்லையிட்டு, எண்ணி, அதனால் புலப்படும் நிமித்தங்களை அறிந்து கூறுவாள். கட்டுவிச்சி தெய்வம் ஏறி குறி கூறுதலும் உண்டு. இவளைப் பிற்காலத்தில் குறத்தி என்று கூறுவர். தொல்காப்பியர் இதனை,

"கட்டினும், கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டியத் திறத்தால் செய்திக்கண்ணும்"

என்று பொருளதிகாரம் 113-வது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

தெய்வத்தினை வணங்கி கழங்குகளை (கழற்சிக்காய்) கையில் அள்ளியெடுத்து எண்ணிப் பார்த்து அதற்கேற்ப குறி கூறும் முறையே கழங்குக்குறி எனப்படும். தலைவனுடன் உடன் போக்கு சென்ற மகளை மனையின் கண் கொண்டு சேர்ப்பானா? என்பதைக் கழங்கின் நுண்ணிய குறியால் கூறுக என நற்றாய் கழங்குக் குறி கேட்பதை அகநானூறு 195-வது பாடல் புலப்படுத்துகிறது.

**அசரீரி**

அசரீரிக்கும், விரிச்சி கேட்டலுக்கும் வித்தியாசம் உண்டு என்பதை பிற்கால இலக்கியவாதிகள் நிரூபித்துள்ளனர்.

'அசரீரி' என்பது 'வடசொல்' ஆகும். இது விண்ணிலிருந்து தோன்றும் ஒலியாகும். கேட்பவர்களின் கண்ணுக்குக் காட்சியளிக்காமல் காதிற்கு மட்டும் கேட்கின்ற ஓர் ஒலியாகும். மனதில் எண்ணும் ஒரு செயலுக்கோ, அல்லது வாயால் கேட்கும் கேள்விக்கோ விண்ணில் இருந்து தெரிவிக்கின்ற ஒலியாகும். இதனை தெய்வ வாக்கு என்று மக்கள் கருதினர்.

இதனை கிறிஸ்தவர்களின் புனித நூலான விவிலியத்திலும் காணலாம். ஆபிரகாம் ஈசாக்கைப் பலியிடச் சென்றபோது வானத்திலிருந்து ஆபிரகாமே, ஆபிரகாமே என்று கூப்பிட்டச் சத்தத்தைக் கேட்டார் என்பதை (ஆதியாகமம் 22: 11-18) வரையிலான பகுதிகள் பதிவு செய்துள்ளன.

அசரீரியைக் காவிய காலத்திற்கு முற்பட்ட சங்க காலத்தில் பார்க்க முடியவில்லை. காவிய காலங்களில் தான் அசரீரியைப் பார்க்கிறோம். இது சகுனம் அல்லது நிமித்தத்தைக் குறிக்கும் விரிச்சியினின்றும் வேறுபட்டது என்று எடுத்துக் காட்டுவார் கே.கே. பிள்ளை என்ற ஆசிரியர்.

### நாளும், நேரமும் பார்த்தல்

ஒரு வேலையோ அல்லது நல்ல செயலையோ செய்ய முற்படும் போது நல்ல நேரம், சகுனம் பார்த்துச் செல்வது சங்ககாலம் முதல் இக்காலம் வரையில் மக்களிடம் இருக்கும் ஒரு பழக்கம் ஆகும். மேலும் ஒரு குறிப்பிட்ட மனிதரைப் பார்த்து, அவர்களின் மூலம் நல்ல வாழ்த்துக்களைப் பெற்று காரியத்தைத் தொடங்கினால் நல்லது நடக்குமெனவும், வேண்டியது கிடைக்குமென்பதும் நம்பிக்கை ஆகும்.

ஒரு செயல் இனிது நிறைவடைவதற்காக நல்ல நாள் மற்றும் நல்ல நேரம் பார்த்து செயலை நடப்பிப்பதே நாள் நிமித்தம் எனப்படும்.

எந்தவொரு செயலைத் தொடங்குவதற்கு முன்னரும் நல்லநேரம் பார்த்து தொடங்கும் பண்பு பண்டையத் தமிழ் மக்களிடம் காணப்பட்டதை இலக்கியங்களின் மூலம் அறியலாம்.

பண்டைய காலத்தில் நல்ல நாளில் மணம் முடிக்கப் பெற்ற தலைவனும், தலைவியும் எக்காரணத்தினாலும் பிரியாது அவர்களை நாள்மீன் இணைத்து வைக்கும் என்ற நம்பிக்கை இருந்ததை கலித்தொகை மூலம் அறியலாம். இதனை,

> ‘‘நாளும் கோள் மீன் தகைத்தலும் தகைமே’’[17]

என்ற கலித்தொகைப் பாடல் புலப்படுத்துகிறது.

குறிஞ்சி நில மக்கள் நல்ல நிகழ்ச்சி நடத்துவதற்கு நல்ல நாளும், நேரமும் பார்த்தமையை,

> ‘‘நெறியறி செறிகுறி புரிதிரிபு
> அறியா அறிவனை முத்துறீஇ’’[18]

என்னும் பாடல் வரிகள் சுட்டுகின்றது. குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலர் மலரும் காலங்களை திருமணம் நிகழும் காலமாகக் கொண்டிருந்தனர். என்பதை,

> ‘‘நன்மலை நாடன் வேங்கை விரிவிடம் நோக்கி
> வீங்கு இறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே’’[19]

என்னும் பாடலடிகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

அன்றைய காலங்களில் நல்லநாள், நல்லநேரம் பார்ப்பதை விட இன்றைய காலங்களில் நல்லநேரம் பார்க்கும் பண்பு அதிகரித்து வருகின்றது எனலாம். தொலைக்காட்சிகளில் காலை நேரங்களில் ‘ராசிபலன்’ நிகழ்ச்சி நடைபெறுவதைச் சான்றாக கூறலாம்.

---

[17] கலித். 5 9.
[18] மேலது. 39: 4 - 6.
[19] மேலது. 38.

தொல்காப்பியர் காலத்தில் தோன்றிய நிமித்தக் கூறுகள் இன்றைய நடைமுறை வாழ்க்கையிலும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இதனை,

''அச்சமும் உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்''[20]

என தொல்காப்பியம் நவில்கிறது. புறநானூற்றுப் பாடல் மூலம் பரிசில் பெற விரும்பிய நபர் தான் பரிசில் பெறாவிட்டால், பரிசில் பெற வேண்டி சென்ற வள்ளல்களைப் பழித்துக் கூறுவதில்லை. தாம் புறப்பட்டுச் செல்லும் வழியில் உண்டாகும் பறவை நிமித்தத்தையும், புறப்பட்ட நேரத்தையும் பழிப்பர் என்பதை,

''புள்ளும், பொழுதும் பழித்தல் அல்லதை
உள்ளிச் சென்றோர் பழியலர்''[21]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதிலிருந்து தமிழர்கள் நாள் நிமித்தம் மீது கொண்டிருந்த நம்பிக்கையை அறிய முடிகிறது.

## பெண் கேட்க நல்லநாள் பார்த்துச் செல்லல்

நல்ல நாளிலே தொடங்கும் காரியம் இடையூறில்லாமல் வெற்றிபெறும் என்பது பண்டையத் தமிழர்களின் நம்பிக்கையாகும். அக்காலத்தில் பெண் பார்க்கவும், பெண்கேட்கவும் நல்லநாள் பார்த்துப் புறப்பட்டதை,

''நன்னாள் தலைவரு மெல்லை நமர் மலைத்
தந்தாண் தாந்தாங்குவா தென்றோற் றனர் கொல்''[22]

என கலித்தொகையில் தலைவி கூறுவதிலிருந்து உணர முடிகிறது.

---

[20] புறம். 204: 10 - 11.
[21] இளம்பூரணனார் உரை, நூற். 88.
[22] கலி. 39:32.

தோழி தலைவனிடம், தலைவியை மணந்து கொள்ளும்படி கூறுகிறாள். மேலும் தலைவனிடம் நீ வரும் வழியில் நல்ல நாள் கேட்டு, தாமதமில்லாமல் வந்தால் இத்தலைவியை நீ அடைவது உறுதி என்றும் கூறுகிறாள். இதனை,

''தந்தாயல் வேண்டாவூர் நாள் கேட்டுத் தாழாது
வந்தாள் நீ எய்துதல் வாயால் மற்றொந்தாய்''[23]

என்ற பாடல் உறுதிபடுத்துகிறது.

## நிமித்தங்கள் உணர்த்துபவை

ஒரு செயலினைத் தொடங்கும் போது அச்செயலால் தீங்கு நேரிட இருப்பின் இயற்கையின் சக்தியால் முன்கூட்டியே மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டது என நம்பினர்.

நன்னிமித்தம் என்பது நல்லவற்றை உணர்த்துவனவாகவும், தீ நிமித்தம் என்பது தீமையைச் சுட்டுவதாகவும் மக்களால் கருதப்பட்டது. பறவைகள், விலங்குகள், மரங்கள் மக்களின் கனவுகள் போன்றவை நன்மையையும், தீமையையும் உணர்த்தும் நிமித்தக் குறியீடுகளாகச் சங்க காலத்தில் மட்டுமின்றி இக்காலத்திலும் மக்களால் நம்பப்படுகிறது.

## புள் நிமித்தம்

பறவைகளின் ஒலி, இயக்கம், இடப்பெயர்ச்சி ஆகியவற்றின் மூலம் நிமித்தம் பார்க்கப்பட்டது. புள் என்பதற்கு பறவை என்னும் பொதுப்பெயரும் பறவையால் அமையும் நிமித்தம் என்னும் சிறப்புப் பெயரும் உண்டாயின.

---

23 திணைமாலை நூற்றைம்பது, 46: 1 - 2.

பறவை இனங்களில் காகம் கரைதல், குயில் கூவுதல், நாரை உயரப்பறத்தல் போன்றவை நன்னிமித்தம் உணர்த்துவதாக மக்கள் நம்பினர்.

ஆந்தை அலறல், கோட்டான் குழறுதல், குடிஞை போன்ற பறவைகள் தீயநிமித்தம் உணர்த்துவதாகப் பண்டைய மக்கள் கருதினர்.

ஆந்தை, கூகை, குடிஞை முதலியவை ஒரே இனத்தைச் சேர்ந்த பறவைகள் ஆகும்.

**கூகை**

கூகை என்பது சுடுகாட்டிற்கு அருகில் வாழும் ஒரு பறவையாகும். இப்பறவை வசிப்பது புறங்காடு ஆகும். கூகையின் குரலை அழுகுரேலாடும், பறையோசையோடும் ஒப்பிட்டனர். கூகையின் வாய் வளைந்து காணப்படும். இதனை,

"வளைவாய்க் கூகை நன்பகற்குழறவும்"[24]

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.

கூகைக்குக் குடுமி இருப்பதாக மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர் பள்ளிக்
குடுமிக் கூகை குரலொடு முரல"[25]

என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

---

24 பட்டினப்பாலை - 268.
25 மதுரைக்காஞ்சி - 169: 170.

பத்துப்பாட்டில் கூகையைப் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. கூகையின் அலறல் சத்தத்தைக் கேட்டால் மக்கள் தீய அறிகுறி என நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அதன் சத்தத்தைக் கேட்டதும் கல்லால் விரட்டினர். கூகையின் அலறல் சத்தம் சாவோரை அழைக்கும் தன்மையுடையது என எண்ணினர். இன்றைய சமுதாயத்திலும் இவ்வகைப் பறவைகள் அலறினால் 'சாவு' வருவதாக நினைத்து விரட்டுவதை நாம் காணலாம்.

### கணந்துள் பறவை

'கணந்துள்' என்ற பறவை ஆறலைக் கள்வர் நடமாட்டத்தைச் சத்தம் எழுப்பி மற்றவர்கட்கு எச்சரிக்கை விடுக்கும். இப்பறவையின் ஒலியினால் மக்கள் ஆறலைக் கள்வரின் பிடியிலிருந்து தம்மைக் காத்துக் கொள்வர் என்பதை,

> ''நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ
> ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்''[26]

என்ற குறுந்தொகைப் பாடல் மூலம் அறியமுடிகிறது.

### வானம்பாடி பறவை

புள்ளியும், வரியும் உடைய வானம்பாடி என்னும் பறவை வானத்தை நோக்கிப் பாடினால் மழைவரும் என்ற நம்பிக்கை இருந்தது. அப்பறவை வானத்தைப் பார்த்துப் பாடுவது, வானினை வாழ்த்துவது போல் இருப்பதால் அதற்கு 'வானம் வாழ்த்தி' என்ற பெயரும் உண்டு. வானம் பாடி பறவை மழை நீரை விரும்பிப் பாடும் என்பதை 'துளிநசைப் புள்' என புறநானூறு 198-வது பாடல் குறிப்பிடுகிறது.

---

[26] குறுந். 350.

### குடிஞை

குடிஞை பறவையின் அலறல் வழிச்செல்வோர்க்கு காரியங்களின் இயல்பினை உணர்த்தும் விதமாக இருந்தது என மக்கள் நம்பினர். இதனை,

> ‘‘உயாவிளி பயிற்றும் யாவுயர் நனந்தலை
> உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்கும்
> கடுங்குரற் குடிஞைய நெடுங்குன்றம்’’[27]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது.

‘குடிஞை’ என்று சங்க இலக்கியம் சுட்டும் கோட்டானை தொல்காப்பியர் கூகையோடு ஒன்று படுத்திப் பேசுவதை,

> ‘‘மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்’’[28]

என்ற தொல்காப்பியம் பாடல் வரியின் மூலம் அறியலாம்.

### காகம் கரைதல்

‘காகம் கரைந்தால் உறவினர் வருவர்’ என்ற நம்பிக்கை மக்களிடையே இன்றும் காணப்படுகிறது. காகம் கரைதலை தலைவன் வரவு குறித்த நன்னிமித்தமாகக் கொண்டாள் தலைவி. பிரிவுத் துயரால் வருந்திய தனக்கு காகம் ஆறுதலாகக் கரைந்து குரல் தந்ததாகவும், அதன் படியே தலைவன் வந்தமையாலும் தலைவி மகிழ்ந்தாள் என்ற செய்தியைக் குறுந்தொகை கூறுகிறது. இதனை,

> ‘‘பெருந்தோள் நெகிழ்ந்த செல்லற்கு
> விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே’’[29]

என்ற பாடல் மூலம் புள் நிமித்த நம்பிக்கைப் புலனாகிறது.

---

27 அகம். 19: 3 - 5.
28 இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 613.
29 குறுந். 210: 5 - 6.

காகத்தின் ஒலி சகுனம் உணர்த்தும் காரணியாகப் பழங்கால மக்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். பறவை இனங்களில் காகம் அறிவு மிக்கது ஆகும். காகம் கரைந்தால் வீட்டிற்கு விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை அக்காலம் முதல் இக்காலம் வரையிலும் நடைமுறையிலுள்ளது. இதனை,

''மறுவில் தூவிச் சிறுகருங்காக்கை
அன்புடை மரபினின் கிளையோடார''[30]

என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

தலைவியினது தாய் காகத்தைப் பார்த்து குற்றமில்லாத சிறகுகளை உடைய சிறிய கருங்காக்கையே! வெற்றி தரும் வேலையுடைய காளையோடு அழகிய சிலவான கூந்தலுடைய என் மகளும் இங்கே என் மனைக்கு வருமாறு கரைந்து உதவுவாயாக என்று கூறுகிறாள். இப்பாடலிலிருந்து காகம் கரைந்தால் நன்மையுண்டாகும் என்ற நம்பிக்கை பண்டையத் தமிழரிடம் இருந்ததை அறியலாம்.

தலைவனது பிரிவினால் வருந்திய தோழிக்கு, தலைவி கூறும் போது இரவு நேரத்தில் இனிய கனவுகள் தோன்றுகின்றன. அல்லாமல் நனவிலும் இல்லத்திலே புள் நிமித்தங்கள் நல்லனவாக உள்ளன. எனவே தலைவன் விரைவில் வருவார் என்ற குறிப்பினை தலைவி உணர்த்துகிறாள். இதனை,

''கனவும் கங்குல்தோறு இனிய நனவும்
.............................
நெஞ்சும் நனி புகன்று உறையும்''[31]

என்று கூறுவதிலிருந்து தலைவியின் புள் நிமித்த நம்பிக்கைப் புலனாகிறது.

---

30 ஐங். 391.
31 அகம். 141: 2 - 4.

## காகத்திற்குப் பலியிடுதல்

காகம் கரைந்துண்ணும் இயல்புடையது ஆகும். உணவு உண்பதற்கு முன் காகத்திற்கு உணவிடும் பழக்கத்தினை இன்றும் கிராமப் புறங்களில் காணலாம். இறந்தோரின் நினைவு நாளான திதியின் போதும், ஈமச்சடங்குகள் செய்த பின்னரும், அமாவாசை நோன்பின் போதும் காகத்திற்கு உணவிடும் பழக்கம் இன்றும் இருந்து வருகிறது. மக்கள் இடும் பலிச்சோற்றை காகம் உண்பதை ‘‘பலியுண் காக்கை’’[32] என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது.

பல பசுக்களிலிருந்து பெறப்பட்ட நெய்யோடு தொண்டி என்னும் ஊரிலுள்ள வயல்களில் விளைந்த வெண்நெல் அரிசியால் ஆக்கிய வெண்மையானச் சோற்றை ஏழு கலங்களில் இட்டுவைத்து, அவற்றைத் தோளில் ஏந்திக் கொண்டு காக்கைக்குப் பெண்கள் அளித்தனர். இச்செய்தியை குறுந்தொகைப் பாடல்,

‘‘பல் ஆ பயந்த நெய்யின் தொண்டி

................................

விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே’’[33]

எனக் குறிப்பிடுகிறது.

மருதநில மக்கள் காக்கைக்கு நாள் தவறாமல் பலிச்சோறு வழங்கியதை,

‘‘செஞ்சோற்ற பலி மாந்திய கருங்காக்கை’’[34]

---

32 நற். 281: 1.
33 குறுந். 210: 2 - 6.
34 பொருநர். 183 - 4.

என பொருநராற்றுப் படை குறிப்பிடுகிறது. இப்பாடல்களின் வழியாக காகத்திற்குப் பலியிடுவதையும், அதன் பயனாகிய காக்கை கரைதலாகிய நிமித்தமும், தலைவன் வருகையும் நிகழ்ந்ததை காக்கைப் பாடினியார் என்ற புலவர் குறிப்பிட்டுள்ளார்.

## தீய நிமித்த நம்பிக்கை

பறவைகள் குறித்துப் பழந்தமிழர் கொண்டிருந்த நம்பிக்கையை மார்க்கோபோலோ தம் பயணக்குறிப்பில் சுட்டிக்காட்டியுள்ளார். வெளியிடத்திலிருந்து புதுப்பறவைகள் தன் நாட்டிற்கு வந்தாலும், தன் நாட்டில் நெடுநாள் தங்கிய பழைய பறவைகள் அவ்விடத்தைவிட்டு வெளியே சென்றாலும் தீநிமித்தம் என பண்டையோர் கருதினர். இதனால் நாட்டில் நிலநடுக்கம், பூகம்பம் போன்றவை தோன்றும் என்பது அவர்களின் நம்பிக்கையாகும். ஆனால் சேரமான் யானைகட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை புதுப்புள் வரினும், பழம்புள் செல்லினும் தம்நாட்டு குடிமக்களுக்கு அச்சம், நடுக்கம் தோன்றாமல் அன்புடன் காத்தான். மன்னனின் மாண்பு கண்டு இம்மன்னனுக்கு யாதொரு தீங்கும் நிகழக்கூடாது என மக்கள் அன்பால் குறிப்பிட்டனர். இச்செய்தியை,

> ‘‘புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்
> விதுப்புற அறியா ஏமக்காப்பினை
> அனையை ஆகல் மாறே
> மன்னுயிர் எல்லாம் நின் அஞ்சும்மே’’[35]

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

---

[35] புறம். 20: 18 - 21.

## விலங்குகள்

யானை, குதிரை, பசு, எருது முதலிய விலங்குகள் தீநிமித்தக் குறிகளாக சங்ககாலத்தில் கருதப்பட்டது.

## யானை, குதிரை

யானை, குதிரை போன்ற மிருகங்கள் மன்னனுக்கு மிகவும் முக்கியமானது ஆகும். யானை துஞ்சினாலோ, குதிரை முடங்கிக் கிடந்தாலோ தீ நிமித்தக் குறியாக மக்கள் கருதினர்.

## பசு

தன் கன்றை நினைத்துச் செல்லும் பசு குறுக்கிடுவதையும், கன்று இல்லாத பசு குறுக்கிடுவதையும் தீய நிமித்தமாகக் கொண்டனர். இதனை,

> "கன்று இல் ஓர்ஆ விலங்கிய
> புன்தாள் ஓமைய சுரன் இறந்தோரோ"[36]

என தோழி தலைவியிடம் இத்தகைய தீ நிமித்தக் நிகழ்வுகளையும் பொருட்படுத்தாது தலைவன் வருவான் என்று கூறி தலைவியைத் தேற்றுகிறாள்.

## எருது

எருது ஆயர்குல மக்களுக்கு நிமித்தக் குறியாக பயன்பட்டது. எருது எதிரே வந்தால் வெளியே செல்லமாட்டார்கள். ஆனால் வணிக குலத்தில் பிறந்த கோவலன் தன் மனைவியின் கால் சிலம்பை விற்பதற்காக மாதரி

---

[36] குறுந். 260 7 8.

வீட்டிலிருந்து புறப்பட்டான். அந்நேரம் எருது எதிரே வருவதைப் பார்த்த பின்னரும் வீடு திரும்பாமல் சென்று விட்டான். இதனை,

> ‘‘பல்லான் கோவல ரில்ல நீங்கி
> வல்லா நடையின் மறுகிற் செல்வோன்
> இமிலே றெதிர்ந்த திழுக்கென வறியான்
> தன் குலமறியுந் தகுதியன் றாதலின்’’[37]

என்ற சிலப்பதிகாரப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

## ஓந்தி நிமித்தம்

பாலை நிலத்தின் வழிச்செல்வார் ஓந்தியை நிமித்தமாகக் கொள்கின்றனர். ஒந்தி நிமித்தம் காட்டி தலைவனது செலவினைத் தடுத்தாள் தலைவி. இருப்பினும் வினையின் மேற்கொண்ட காதலால் தலைவன் ஓந்தியை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. என்பதை,

> ‘‘வேதினவெரிநின் ஓதிமுது போத்து
> ஆறுசெல் மாக்கள் புள்கொள் பொருந்தும்
> சுரனே சென்றனர் காதலர்’’[38]

என்ற பாடலடிகளால் அறியலாம்.

## மரநிமித்தம்

மரத்தை தெய்வத் தன்மையுடையதாக எண்ணி வழிபட்டு நிமித்தம் அறியும் பழக்கம் பழந்தமிழகத்தில் இருந்து வந்துள்ளது. தமிழ்நாட்டு மக்கள் மட்டுமல்லாது, உலகில் பல இடங்களில் வாழ்ந்த மக்களும் இவ்வாறு நம்பிக்கைக் கொண்டிருந்தனர். ‘‘மரத்தை அடிப்படையாகக் கொண்டு பல

---

[37] சிலம்பு, 16: 98 - 101 வரி.
[38] குறுந். 140: 1 - 3.

நம்பிக்கைகள் உலக சமுதாயத்தில் நிலவுகின்றன"[39] என்று கலைக் களஞ்சியம் குறிப்பிட்டுள்ளது.

### உன்ன மரம்

உன்னம் என்பது இலவ மரமாகும். இது சிறிய இலையும், பொன்னிறப் பூவும், புல்லிய அடியுமுடையது. இதனை நிமித்தம் உணர்த்தும் மரமாக பழங்கால போர்வீரர்கள் கருதினார்கள். உன்ன மரம் தழைத்துக் காணப்பட்டால் போரில் வெற்றி பெறுவார்கள் என்றும், உன்ன மரம் கருகிக் காணப்பட்டால் போரில் தோல்வி அடைவர் என்பதும் வீரர்களின் நம்பிக்கையாகும். இச்செய்தியை உன்னமரம் முன்கூட்டியே உணர்த்தி விடும் என்று மக்கள் நம்பினர். உன்ன நிலை குறித்துத் தொல்காப்பியப் புறத்திணையில்

"ஓடாக் கழல்நிலை உளப்படஓடா
உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும்"[40]

என்று குறிப்பிடுகிறது. புறங்கொடாத சினங்கொண்ட வேந்தனை உன்ன மரத்தொடு சார்த்தி வெற்றி தோல்விகளை அறிவதற்குக் காரணமான உன்னமரம் என்பது இதன் பொருளாகும். இதன் இலக்கணத்தைப் புறப்பொருள் வெண்பாமாலை,

"துன்னரும் சிறப்பின் தொருகழல் மன்னனை
உன்னம் சேர்த்தி உறுபுகழ் மலிந்தன்று"[41]

உன்ன மரம் நாட்டில் கேடு வருங்கால் உலகறியும் எனவும், கேடுவராத காலம் குழைந்தும் நிற்கும் என்கிறார் இளம்பூரணர்.

---

[39] கலைக்களஞ்சியம் ப. 723.
[40] இளம்பூரணனார் உரை, நூற். 65.
[41] புறப்பொருள், பொதுவியற் படலம் கொளு - 4.

செல்வக் கடுங்கோ வாழியாதனின் மறவர் உன்ன மரத்தின் நிமித்தம் பார்த்தபோது மரம் கரித்துக் காட்டியது. அது தோல்வி காட்டும் நிமித்தமாக இருந்தாலும், தன் ஆற்றல் மிகுதியால் அந்நிமித்த நிலையைப் புறக்கணித்துப் போரிட்டு பகைவரைப் புறங்கண்டு வாகை சூடினான். எனவே அவ்வேந்தனை உன்னத்துப் பகைவன் எனக் கபிலர் பதிற்றுப்பத்து 61-வது பாடல் மூலம் புகழ்ந்துள்ளார்.

## வேங்கை மரம்

வேங்கை மரம் பூத்துக் குலுங்குவது மணநாளை அறிவிக்கும் நன்னிமித்தம் என்பது மக்களின் நம்பிக்கையாக இருந்து வந்துள்ளது. இதனை, “நல்நாள் பூத்த நாகு இள வேங்கை”[42] எனவும் “நல்நாள் வேங்கை வீ நன்கனம் வரிப்ப”[43] என்ற அகப்பாடல்கள் தெரிவிக்கின்றன. நல்ல மணநாளை அறிவிக்கும் வேங்கை மலர்கள் உதிர்ந்து விழுந்து அவ்விடத்தை வெறியாடும் களம் போல அழகு செய்ததை கலித்தொகை 38-வது பாடலின் 5-வது அடி விளக்குகின்றது.

வேங்கை மரத்தின் கீழிருந்து மணம் பேசி முடித்ததை,

> “......... நுந்தையும்
> மன்றல் வேங்கைக் கீழ்இருந்து
> மணம் நயந்தனன் அம்மலை கிழவோற்கே”[44]

என்ற கலித்தொகைப் பாடல் புலப்படுத்துகின்றது.

---

42 அகம். 85: 10.
43 மேலது, 133: 4.
44 கலித். 41: 42 - 44.

### பனை, ஆல், கடம்பு

பனை, ஆல், கடம்பு போன்ற மரங்களில் கடவுள் உறைவதாகப் பழந்தமிழர் நம்பினர். அம்மரங்கள் தழைத்தால் வெற்றியும், வாடினால் தோல்வியும் கிடைக்கும் என்று நம்பினர்.

### காவல் மரம்

காவல் மரம் நாட்டையும், மக்களையும் காப்பாற்றும் என நம்பினர். அதனால் காவல் மரம் என அழைத்தனர். பழந்தமிழ் வேந்தர் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் காவல் மரமாகக் கொண்டிருந்தனர். வேங்கை, புன்னை, வேம்பு முதலிய மரங்களைத் தமிழ் வேந்தர் வெற்றியைக் குறிக்கும் மரங்களாகப் போற்றினர்.

நிமித்தம் பார்த்தல் என்பது தொல்காப்பியர் காலத்திலிருந்தே தொடர்ந்து வரும் நம்பிக்கையாக கொண்டுள்ளனர். அது முரணாக வாய்த்தால் மனம் தளராது ஊக்கத்துடன் நிமித்த ஊழையும் உப்பக்கம் கண்டுள்ளனர் என்பதைச் சங்க இலக்கியச் சான்றுகளிலிருந்து அறிய முடிகிறது.

சங்ககாலத் தமிழர்கள் மட்டுமல்லாமல் இக்கால மக்களும் மரங்களின் மீது நம்பிக்கைக் கொண்டுள்ளனர். புளிய மரத்திலும், முருங்கை மரத்திலும் பேய் இருப்பதாகவும், வேப்ப மரத்திலும், ஆல மரத்திலும் கடவுள் இருப்பதாகவும் மக்கள் கருதுகின்றனர். இன்றும் இது கிராம மக்களின் நம்பிக்கையாக உள்ளது.

## விண்ணியல் நிமித்தம்

வானில் விண்மீன்கள், கோள்கள், நட்சத்திரங்கள் முதலியவைத் தோன்றுகின்றன. இவற்றின் செயல்பாட்டிற்கும், உலகில் வாழும் மக்களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு என்று பண்டைய மக்கள் நம்பினர்.

விண்ணில் ஏற்படும் நிகழ்வுகள் பெரும்பாலும் தீ நிமித்தக் கூறாகவே கருதப்பட்டது. இவ்வகை நம்பிக்கைகள் இன்றும் பெரிதளவில் மக்களிடம் காணப்படுகிறது.

## வெள்ளி

வெள்ளி என்பது சுக்கிரன் என்னும் கிரகம் ஆகும். சுக்கிரனை தமிழிலக்கியங்களில் வெள்ளி என்று அழைத்தனர். இது வானில் மாலையிலோ அல்லது காலையிலோ கண்ணுக்குத் தென்படும். அதிகாலையில் காட்சியளிக்கும் வெள்ளியையே விடிவெள்ளி என்றழைத்தனர்.

வெள்ளி கிழக்கே உதிக்குமானால் இரவு விடியும் என்று நம் முன்னோர்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். வெள்ளி கோளின் இயக்கத்தைப் பற்றி பண்டைய தமிழர்கள் கூர்ந்து கவனித்திருந்தனர். இதனை,

> "வசையில் புகழ்வயங்கு வெண்மீன்
> திசை திரிந்து தெற்கேகினும்
> மலைத் தலைய கடற்காவிரி"[45]

எனப் பட்டினப்பாலை நவில்கிறது.

---

[45] பட். பா (1-6) வரி.

வெள்ளியாகிய மீன் தான் நிற்பதற்குரிய வடதிசையில் நில்லாமல் தெற்கு திசையில் சென்றால் மழை பொழியாது என்பது நம்பிக்கையாகும். அதற்கு மாறாக வெள்ளி வடதிசையிலிருந்து தெற்கு திசையில் சென்றாலும் மழை பொழிந்து காவிரியில் நீர் பெருகியதைப் பட்டினப் பாலை கூறுகிறது.

நெருப்பாகிய செவ்வாயும், வெள்ளியாகிய சுக்கிரனும் சேர்ந்தால் மழைபெய்யாது என்பது சோதிட நூல் கூறும் உண்மையாகும். இவ்வுண்மையைப் பதிற்றுப் பத்து பறைசாற்றுகிறது.

> ''அழல் சென்ற மருங்கின் வெள்ளியோடாது
> மழைவேண்டு புலத்துமாரி நிற்ப''[46]

மழைக் கோடாகிய வெள்ளி வடக்கே சாய்ந்தால் மழையும், தெற்கே சென்றால் மழையின்மையும் நேரும் எனப் பதிற்றுப் பத்து 24: 24- 25வது அடிகள் கூறுகின்றன.

வெள்ளிக் கோளினை இன்றைய சமுதாயத்தில் மழைக்குரிய கோளாகவே மக்கள் கருதுகின்றனர். இக்கருத்து சங்ககால மக்களின் கருத்தை மெய்ப்பிக்கின்றன.

## வானவில்

வானவில் பகலில் வானத்தில் தோன்றுவதே மரபாகும். ஆனால் இரவில் தோன்றினால் தீயதாகக் கருதப்பட்டது. வானத்தில் தோன்றும் நிகழ்வுகளுக்கும், மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதை அக்கால மக்கள் நம்பியதைப்

---

46 பதிற்று. 13: 25 -26.

போன்று இன்றைய மக்களும் நம்புகின்றனர். நம் முன்னோர்களின் கருத்துப்படியே இன்றைய வானியல் ஆராய்ச்சியாளர்கள் பல கருத்துக்களைக் கணித்துக் கூறுகின்றனர். தொல்காப்பியர் காலத்தில் காலத்தைக் கணித்துக் கூறும் கணியர் இருந்தனர். அவர்களை அறிவன் என்று அழைப்பர். இவர்கள் மழை, பனி, வெயில் ஆகிய முக்காலத்தையும் கணித்துக் கூறுகின்ற 'அறிவர்'களாக காணப்பட்டார்கள்.

## உடல் உறுப்புகள் குறித்த நம்பிக்கை

மனிதரின் உறுப்புகளில் சிலவற்றை நிமித்தம் உணர்த்துவதாக மக்கள் நம்பியிருந்தனர். கண், தோள் போன்றன இடமோ, வலமோ துடித்தல் நிமித்தமாக அமைகின்றன. ஆடவர்க்கு வலது தோளும், வலது கண்ணும் துடித்தல் நல்ல சகுனமாகவும், பெண்களுக்கு இடது தோளும், இடது கண்ணும் துடித்தல் நல்ல சகுனமாகவும் கொள்ளப்பட்டன. பெண்களை விட, ஆண்களின் உடலில் ஏற்படும் மாற்றத்தை நன்னிமித்தம் உணர்த்துபவை என மக்கள் நம்பினர்.

ஏதேனும் காரியத்திற்குப் புறப்படும் போது கண்துடித்தல், கனவு காணுதல், தும்மல் விடுதல் போன்ற நிகழ்வுகள் நிகழுமாயின் அவற்றைக் கொண்டு எதிர்காலத்தைக் கணிக்கும் நம்பிக்கை தமிழர்களிடையே இருந்தது.

## கண்துடித்தல் பற்றிய நம்பிக்கை

பெண்களின் இடது கண் துடித்தால் நன்மை நேரும் என்றும், வலது கண் துடித்தால் தீமை விளையும் என்பதும் சங்ககால மக்களின் நம்பிக்கை ஆகும். இதனை,

''கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உண்ணிறை கரந்தகத் தொளித்து நீ ருகுத்தன
எண்ணுமுறை இடத்தினும், வலத்தினும் துடித்தன''[47]

என்ற பாடல் வரிகளில் பிரிந்திருந்த கண்ணகியின் கண்களும், கூடியிருந்த மாதவியின் கண்களும் கண்ணீர் சிந்தின. ஆனால் துடிக்கும் போது கண்ணகிக்கு இடக்கண்ணும், மாதவிக்கு வலக்கண்ணும் துடித்தன. இக்கண்துடிப்புகள் முறையே நன்மை, தீமை, நிகழப் போவதன் அறிகுறிகள் எனக் கூறுவதிலிருந்து கண்துடிப்புகள் குறித்த தமிழர்களின் நம்பிக்கைகளை நம்மால் அறிய முடிகிறது. மேலும், ஐந்திணை எழுபது,

''பூங்கண் இடம் ஆடும் கனவும் திருந்தின்
ஓங்கிய குன்ற பிறந்தாரை யாம் நினைப்ப
வீங்கிய மென்றோர் கவினி பணிதீரப்
பாக்கத்துப் பல்லி படும்''[48]

என்ற பாடல் மூலம் தலைவி, தலைவனைப் பற்றி குறிப்பிடுகிறாள்.

உயர்ந்த மலையைக் கடந்து சென்ற நம் தலைவனைப் பற்றி நாம் நினைத்தவுடனே அழகிய கண்களிலே இடக்கண் துடிக்கிறது. கண்ட கனவுகளும், நற்கனவுகளாக இருந்தன. இளைத்துப்போன மெல்லிய தோள்களும் அழகுடன் பருத்தன. நம் துன்பம் தீரும்படி பல்லியும் நற்குறி சொல்லியது என்னும் இப்பாடல் மூலம் தமிழர்களின் நம்பிக்கைகளை அறியமுடிகிறது.

---

[47] சிலம்பு, இந்திரவிழாவூரெடுத்தக்காதை (237-239) வரி, பக். 101.
[48] ஐந்திணை எழுபது - 39.

## தும்மல், புரையேறுதல் பற்றிய நம்பிக்கை

தும்மல் இயல்பாக வருவதன்று. யாரேனும் ஒருவர் நம்மை நினைப்பதால் தான் வருகிறது என்ற நம்பிக்கை தமிழர்களிடையே நீண்ட காலமாக காணப்படுகிறது.

தலைவனது பிரிவை ஆற்றியிரு என்று கூறிய தோழியிடம் தலைவி, பொருள் வயின் பிரிந்தோர் என்னையும் நினையாரோ? என்கிறாள். 'பிரிந்தவர் உள்ளார் கொல்லோ' என்பதன் மூலம் தலைவன் நினைப்பதால் தலைவிக்கு ஏற்படும் தும்மல், புரையேறுதல் முதலியன நிகழாமையால் தலைவன் தன்னை நினைத்துப் பார்க்க வில்லையோ என ஐயமுற்றாள். இதனை நற்றிணைப் பாடலில்

"உள்ளார் கொல்லோ - தோழி கொடுஞ்சிறை"[49]

என மதுரைப் பெருமருதனார் என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

"எனை விருப்புடையர் ஆயினும், நினைவிலர்"[50]

என நற்றிணைப் பாடலில் நெய்தல் தத்தனார் என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

இன்றும் இந்நம்பிக்கையுள்ளவர்களை நாம் காண முடிகிறது. தும்மலை பழந்தமிழ் மக்கள் நிமித்தமாகக் கருதியதை திருக்குறள்,

"தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று"[51]

என்று கூறுகிறது. மூவாதியார்,

---

[49] நற். 241.
[50] மேலது, 130 6.
[51] குறள். 1318.

"சென்றவர் உள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்து

ஒள்ளிய தும்மல் வரும்"[52]

என தும்மல் குறித்த நம்பிக்கையை புலப்படுத்தியுள்ளார்.

## கனவு பற்றிய நம்பிக்கை

இளைஞர்களே கனவு காணுங்கள் என்று வலியுறுத்தியவர் முன்னாள் பாரதக் குடியரசுத் தலைவர் ஆ.பெ. ஜெ. அப்துல்கலாம் அவர்கள். இந்தியா வல்லரசாக இன்றைய இளைஞர்கள் கனவு கண்டு செயல்பட வேண்டுமென்பதையே அவ்வாறு கூறினார்கள். தூங்கும் போது காண்கிற கனவு அன்று. தூங்கவிடாமல் செய்வதே கனவு. கனவு காணுதல் என்பது செயலுக்கான முயற்சி நிலை. பழந்தமிழ் இலக்கியங்களும் இந்நிலையை எடுத்தியம்புகின்றன. தொல்காப்பியம் முதற்கொண்டு இன்றைய இலக்கியங்கள் வரை கனவு குறித்து பேசாத இலக்கியங்களே இல்லை எனலாம். நிறைவேறாத எண்ணங்களும் கனவாக வெளிப்படும்.

கனவுகள் மக்களின் வாழ்வில் பின்னர் நிகழப்போவதை முன்கூட்டியே அறிவிப்பன ஆகும். மனிதராகப் பிறந்த அனைவருக்கும் கனவுகள் தோன்றும். விலங்குகளும் கனவு காண்பதாக இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை ஆராய்ச்சியாளர்களும் கூறியுள்ளனர். சங்ககால மக்கள் கனவுகள் குறித்து அதிக நம்பிக்கைக் கொண்டிருந்தனர். 'அடியார்க்கு நல்லார்' கனவுகளின் பயனைக் கூறும் 'கனா நூல்' பற்றி குறிப்பிட்டுள்ளார்.

'திருவள்ளுவர்' கனவின் முக்கியத்துவத்தைக் கூற 'கனவுநிலை உரைத்தல்' என்ற ஓர் அதிகாரமே அமைத்துள்ளார். கனவினை 'சொப்பனம்' எனவும் கூறுவர்.

---

[52] ஐந்திணை எழுபது - 40.

கனவுகளை நல்லவற்றை உணர்த்துபவை, தீயவற்றை உணர்த்துபவை என இரண்டு வகைப்படுத்துவர். நன்மையைத் தெரிவிக்கும் கனவுகளை விட தீயவற்றை வெளிப்படுத்தும் கனவுகளே அதிகமாக காணப்பட்டதாக மக்கள் கருதினர்.

## உளவியலாளர் கருத்து

ஒரு மனிதனின் ஆழ் மனதில் தோன்றும் விருப்பங்களே கனவுகளாக வெளிப்படுகின்றது என்றும், வேறுசிலர் கனவுகள் உளநோயால் தோன்றுகிறது என்றும் கூறுவர். ‘‘கனவுகள் எதிர்பாராமல் நிகழ்வதால் நம் உள்ளத்திற்கு எச்சரிக்கைச் செய்வதாக அமைந்துள்ளது’’[53] என ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் கூறியுள்ளார்.

உளவியல் அறிஞர்கள் ‘‘அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்பர்’’[54].

## நல்லவற்றை உணர்த்துபவை

சங்ககாலத்தில் கனவில் தலைவிக்கு இருந்த நம்பிக்கையை அகப்பாடல்கள் சுட்டுகின்றன. பிரிந்துச் சென்ற தலைவன் திரும்பிவர கால தாமதமானது. இதனால் தலைவியின் துயரை தன் துயரைப் போல் எண்ணி தோழி வருந்தினாள். ஆகவே தலைவி தன் தோழியைத் தேற்ற வேண்டிய நிலை ஏற்பட்டது.

---

53 சுப்பிரமணியன், ச.வே. இலக்கியக் கனவுகள், ப. 14.

54 சக்திவேல், சு. நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 211.

தலைவன் பிரிந்துச் சென்ற பின்னர், ஒவ்வொரு இரவும் தான் இனிய கனவு காண்பதாகவும், அதற்கேற்ற முறையில் நன்னிமித்தங்கள் நனவில் தோன்றுவதாகவும் தலைவி தோழிக்கு எடுத்துரைத்தாள். இதனை அகநானூறு,

''அம்ம வாழி தோழி கைம் மிகக்
கனவும் கங்குறோணிய நனவும்
புனைவினை நல்லில் புள்ளும் பாங்கின
நெஞ்சம் நனி புகன் றுறையும்''[55]

என்று குறிப்பிடுகிறது.

நற்றிணைப் பாடலில் தலைவி கனவு கண்டு தோழிக்கு உரைக்கிறாள். வௌவால் தான் துயிலும் போது தனக்குக் கிடைக்கப் பெறாத நெல்லிக் கனியின் புளிப்புச் சுவைக்குக் கனவு காணும். அதுபோல பரதவரின் மகிழ்ச்சியையும், கடற்கரையையும் நினைத்து உறங்கிய போது தலைவனுடன் சேர்ந்திருப்பதாகக் கனவு கண்டேன் என்று தலைவி கூறுவதை,

''ஊள் ஊர் மாஅத்த முள் எயிற்றுவாவல்
ஓங்கல் அம்சினைத் தூங்கு துயில் பொழுதின்
வெல் போர்ச் சோழர் அழிசி அம் பெருங்காட்டு
நெல்லி அம்புளிச்சுவைக் கனவியா அங்கு,
அது கழிந்தன்றே - தோழி!
.................................
சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்,
பெருந்தண் கானலும், நினைந்த அப்பகலே''[56]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

---

55 அகம். 141.
56 நற். 87.

இளமைப் பருவம் ஆசையும், ஆற்றலும் நிறைந்தது. ஆசை கனவுகளிலிருந்து தொடங்குகிறது. எண்ணங்களுக்குச் செயல்வடிவம் கொடுக்கும் முன் மனம் அது குறித்து அசைபோடுகின்றது. அதுவே கனவு நிலையாகத் தோற்றம் கொள்கிறது. இளமைப் பருவக் காலத்தில் காதலும் முன்னிலை வகிக்கும். தொல்காப்பியர் காதல் குறித்து நான்கு கனவு நிலைகளைக் குறிப்பிடுகின்றார்.

''காதல் கைம்மிக்க கனவின் அரற்றலும்''[57]

என செவிலி கூற்று நிகழுமிடத்தில் காதல் மிகுதியால் தலைவனை நினைத்துக் கனவில் அரற்றுகிறதைக் காணலாம்.

''கனவும் உரித்தால் அவ்விடத்தான''[58]

என்பது தலைவன், தலைவி சந்திப்பு நிகழாத போது கனவில் சந்திப்பு நிகழ்வதாகக் காட்டப்படுகின்றது.

''நாணுதல் துஞ்சல் அரற்றுக்கனவெனாஅ''[59]

என்பன மெய்ப்பாட்டு நிலையாக அமைகின்றது.

''கண்துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்''[60]

என்பனவற்றால் இளமைப் பருவ கனவு நிலை சுட்டப்படுகின்றது.

தலைவி தன் காதலனைக் கனவில் கண்டு, உண்மையென நினைத்துத் துயிலெழுந்தாள். நனவில் எழுந்து, பார்க்கும் போது தலைவனைக் காணாது, வருத்தமுறுகின்ற நிலையை,

---

57 இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 113: 6.
58 மேலது, நூற். 195.
59 மேலது, நூற். 256: 5.
60 மேலது, நூற். 266: 5.

"வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட, ஏற்று எழுந்து
அமளி தை வந்தனனே"[61]

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.

கிறிஸ்தவர்களின் புனித நூலான விவிலியத்தில் கனவு காண்பதைக் குறித்து பல பகுதிகளில் விளக்கப்பட்டுள்ளது. கனவுகள் நன்மையாகவும், தீமையாகவும் நிறைவேறியது குறித்தும், அரசர்கள் கனவுக் கண்டு அக்கனவிற்கானப் பொருள் என்ன என்பதை அறிய ஞானிகளைத் தேடிச் சென்றதையும் காண முடிகிறது. இதனை ஆதியாகமம் (41: 15 - 26) வரையிலான பகுதிகளிலும், தானியேல் 2: 3 பகுதியிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

பார்வோன் என்ற ராஜா யோசேப்பை நோக்கி "ஒரு சொப்பனம் கண்டேன். அதின் அர்த்தத்தைச் சொல்ல ஒருவரும் இல்லை. நீ சொப்பனத்தைக் கேட்டால், அதின் அர்த்தத்தைச் சொல்லுவாய் என்று உன்னைக் குறித்துக் கேள்விப்பட்டேன்" என்று (ஆதியாகமம் 41: 15)-இல் கூறுவதையும், சாலோமோன் என்ற அரசன் கனவு கண்டதையும் நாம் அறியமுடிகிறது. சாலோமோனுக்கு நித்திரைத் தெளிந்த போது அது சொப்பனம் என்று அறிந்தான் என I இராஜாக்கள் 3: 15ல் காணமுடிகிறது. இவ்வாறு கனவு குறித்த நம்பிக்கை மக்களிடையே ஆழமாக வேரூன்றியிருந்ததை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

[61] குறுந். 30: 3 - 4.

## பல்லி ஒலித்தல் பற்றிய நம்பிக்கை

பல்லியின் ஒலி நல்ல நிமித்தமாகக் கருதப்பட்டது. பிரிவுத்துயரினை ஆற்றாது வருந்தி மெலியும் தோளின் மெலிவினைப் போக்கும் மருந்தாகப் பல்லியின் ஒலியைத் தலைவி கருதினாள். பல்லியின் ஓசையைக் கேட்ட போதெல்லாம் அவள் கைகூப்பித் தொழுதாள். அவ்வொலியை நன்னிமித்தமாக எண்ணித் தலைவன் வருவான் என நம்பி அவள் உயிர்வாழ்ந்தாள். இதனை,

"வருந்து தோள் பூசல் களையும் மருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத்தொழு துறைவி செவிமுத லானே"[62]

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். மேலும்,

"பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்லகூறு என நடுங்கி"[63]

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகிறது. இத்தகவலை [நற்றிணை 169: 1 - 3, 246; கலித்தொகை 169] என்ற பாடல்களும் விளக்குகின்றன.

பல்லி ஒலித்தலைத் தோழி கேட்டு, தலைவிக்கு அதனைச் சுட்டி ஆற்றுவித்தாள். பொருள் வயிற்பிரிந்த தலைவனை எண்ணி தலைவி துயருற்றாள். இதனை அறிந்த தோழி, தலைவியைத் தேற்றுவதற்குப் பல்லியின் ஒலியைப் பயன்படுத்திக் கொண்டாள் என்பதை,

"நீங்குக மாதோ நின்னவலம் ஓங்குமிசை
உயர் புகழ்நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே"[64]

---

[62] அகம். 351.
[63] அகம். 289.
[64] நற். 333.

நற்றிணைப் பாடலடிகள் குறிப்பிடுகிறது. இவ்வாறு பல்லி ஒலிப்பது பற்றிய நம்பிக்கை சங்ககாலம் முதற்கொண்டு தமிழர்களின் வாழ்வில் முக்கிய இடம் பெறுகிறது.

## இறைநம்பிக்கை

இறைநம்பிக்கை மக்கள் வாழ்வில் முக்கியப் பங்கு வகிக்கிறது. அவ்வகையில் கடவுள் வாழ்த்து பற்றிய குறிப்புகள் மிகுதியும் இடம் பெற்றுள்ளன. இறை நம்பிக்கை மக்களை அறத்தோடும், ஒழுக்க நெறியோடும் வாழ வழி செய்கிறது.

தலைவியின் உடல் மெலிவைக் கண்டு ஆற்றாதவளாக செவிலி காணப்படுகிறாள். தன் மகள் உற்ற நோய்க்குக் காரணம் தெய்வத்தால் நிகழ்ந்தது என எண்ணி, இறைவனைப் போற்றி, வாயால் வாழ்த்தி, உடலால் வணங்கி, பன்னிற மலர்களைக் கலந்து சிதறியும், சந்தனம், அகில் முதலிய வாசனைப் பொருள்களையும் செலுத்தி வழிபட்டாள். இதனை,

> ‘‘வேறுபல் உருவின் கடவுள்பேணி
> நிறையும் விரையும் ஓச்சியும்’’[65]

என்னும் வரிகள் கடவுளைப் பேணி வழிபட்டால் நோய் நீங்கும் என்ற இறை நம்பிக்கையைச் சுட்டிக்காட்டுகிறது.

முல்லைநில மகளிர் மாலை நேரமாகிய அந்திப் பொழுதில் இல்லுறைத் தெய்வத்தை வழிபடுதல் மரபாக காணப்பட்டது. ஆனால் கூதிர்கால இயற்கை மாறுபாடு காரணமாக அந்திப் பொழுதை அறிய அவர்களால் இயலவில்லை எனினும் மகளிர் தம் பூந்தட்டில் பறித்து வைத்திருக்கின்ற பிச்சி போன்ற மலர்

---

[65] குறிஞ்சி. பா (6-7).

அரும்புகள் கட்டவிழ்ந்து மணம் வீசுவதைக் கண்டு அந்திப் பொழுது வருவதை அறிந்தனர். உடனே விளக்கில் திரியிட்டு நெல்லையும், மலரையும் தூவி கைக்குவித்து இல்லுறை தெய்வத்தை வணங்கினர்.

சங்ககால மக்களிடம் இறைநம்பிக்கை அதிகமாக காணப்பட்டதை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். நெய்தல் நிலப்பெண்கள் தம் சுற்றத்துடன் கூடித் தம் தெய்வமாகிய வருணனைக் கையாலே தொழுது வழிபட்டனர். எம் குறைமுடித்தால் உமக்கு இவை தருவோம் என்று பாராய்க்கடன் பூண்டு வாழ்த்தி வழிபட்டனர் என்பதை

''அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி
யாயும் ஆயமோடு அயரும்''[66]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. மேலும்,

சுற்றத்தாருடன் கூடிச் சென்று, திரண்டு நின்று வழிபாடு செய்தல் குன்றக் குறவர்களிடையேயும் காணப்பட்டது. இதனை,

''அணங்கொடு நின்றது மலை வான்கொள்க எனக்
கடவுள் ஓங்குவரை பேண்மார், வேட்டு எழுந்து
கிளையொடு மகிழும் குன்ற நாடன்''[67]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம்.

## குழந்தைகளை வழிபடச் செய்தல்

குழந்தைகளை கடவுள் உறையும் திருக்கோவிலுக்குக் கொண்டு சென்று வழிபடச் செய்யும் வழக்கம் சங்கத் தமிழரிடம் காணப்பட்டது. காலை, மாலை

[66] அகம். 240: 8 - 9.
[67] நற். 165: 3 - 5.

வேளைகளில் மக்கள் கடவுளை அதிகமாக வழிபட்டனர். இவ்வாறு கடவுளை வழிபடும் போது திருக்கோவிலை வலம் வருவர். பெரியோர்கள், குழந்தைகளையும் உடன் அழைத்துச் சென்று வழிபடுவர். தலைவி ஒருத்தி தன் இளம் புதல்வனை, தோழியுடன் அனுப்பி, தேவர் கோட்டம் தொழுது வரச் செய்கிறாள். இதனை,

> ''புத்தேளிர் கோட்டம் வலம் செய்து இவனொடு
> புக்கவழி எல்லாம் கூறு''[68]

எனவும்

> ''கடவுட் கடிநகர் தோறும் இவனை
> வலம் கொளீஇவா எனச் சென்றாய்''[69]

என்ற பாடல் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## தெய்வத்திடம் மக்களின் வேண்டுதல்கள்

இறைவனிடம் மக்கள் தங்கள் தேவைகளை கேட்டுப் பெற்றுக் கொள்வது வேண்டுதல் ஆகும். கலித்தொகையில் மக்கள் இறைவனிடம் வேண்டும் பயன்கள் குறிக்கப்பட்டுள்ளது. நாங்கள் சுற்றமுடன், இன்றுபோல் எந்நாளும், உன் திருவடியைச் சார்ந்து பொலிவு பெற வேண்டும் எனவும், எங்கள் அறிவில் தீமை சேராது மெய்யுணர்வு பெற வேண்டுமெனவும், துன்பம் நீங்கிய இன்பம் மிகுந்த நாட்களைப் பெற வேண்டியும் வேண்டுதல் செய்தனர். இதனை,

> ''தீது இன்றிப் பொலிக! எனத் தெய்வக் கடி அயர்மார்
> வீவு இல் குடிப்பின் இருங்குடி ஆயரும்''[70]

என்ற பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

---

[68] கலி. 82: 4 - 5.
[69] கலி. 104: 4 - 6.
[70] கலி. 105:6-7

பல்வேறு பயன்கருதி பரங்குன்றத்து மகளிர் வழிபட்டமையை பரிபாடலில் காணலாம். ஒரு சில மகளிர் தாம் காதலரோடு அளவளாவியதாகக் கண்ட கனவு, பழுதாகாமல், நனவில் அவருடன் நீராடி மகிழ, வையை நதி புதுவெள்ளத்தைப் பெற வேண்டும் என வேண்டுகின்றனர். சிலர் கருப்பம் உண்டாக வேண்டும் என காணிக்கைச் செலுத்துகின்றனர். சிலமகளிர் கணவருக்குப் பொருள் வாய்ப்பதாக எனவும், கணவர் போரில் வெற்றி பெறுவாராக எனவும் கடவுளை வேண்டினர். இச்செய்தியை,

“அருவரைத் சேராத் தொழுநர்
கனவின் தொட்டது கை பிழையாகாது
நனவில் சேஎப்ப நின்றளி புனல் வையை
வருபுனல் அணிக, என வரம் கொள்வோரும்
கருவயிறு உறுக எனக் கடம் படுவோரும்
செய்பொருள் வாய்க்க எனச் செவி சார்த்துவோரும்
ஐ அமர் அடுக என அருச்சிப் போரும்
பாடுவார் பாணிச்சீரும், ஆடுவார் அரங்கத்தாளமும்”[71]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இதன் மூலம் பாடுவோரும், ஆடுவோருமாக பற்பல பயன் வேண்டி மகளிர் வேண்டியமையை அறியலாம்.

## திருமணம் நடக்க வேண்டுதல்

குறிஞ்சி நிலமக்கள் திருமணம் விரைந்து நடைபெற வேண்டுமென்று தெய்வத்திடம் வேண்டினர். இவ்வாறு வேண்டுதல் வைக்கும் போது குரவைக் கூத்தாடினர். இச்செய்தியை,

---

[71] பரி. 8: 102 - 109.

"தெரியிழாய் நீயும் நின்கேளும் புணர
வரை உறை தெய்வம் உவப்ப, உவந்து
குரவை தழீஇயாம் ஆட, குரவையுள்
கொண்டு நிலை பாடிக்காண்"[72]

என்ற பாடல் எடுத்தியம்புகின்றது. இன்றும் இத்தகைய வேண்டுதலைக் காணலாம்.

## மழை பெய்ய வேண்டுதல்

குறவர் மழை பெய்ய வேண்டியும், வேண்டாத போது பெருமழை பெய்தால் அது நிற்க வேண்டியும் தெய்வத்தைப் போற்றினர் என புறநானூறு தெரிவிக்கிறது. இதனை,

"மலை வான் கொள்க! என உயர் பலிதூஉய்
மாரி ஆன்று, மழை மேக்கு உயர்க! எனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கன்
பெயல் கண் மாறிய உவகையர், சாரற்
புனத்தினை அயிலும் நாட"[73]

என்ற புறப்பாடல் மூலம் உலகை வாழ வைக்கும் மழையைத் தொழுது வேண்டியதை அறியலாம்.

## நேர்த்திக்கடன் செலுத்துதல்

ஏதேனும் ஒரு செயல் நடப்பதற்காக இறைவனிடம் வேண்டுதல் செய்து அது நிறைவேறினால் இறைவனுக்கு ஏதேனும் செலுத்துவதாக வேண்டுவது

---

72 கலித். 39: 26-29.
73 புறம் 143: 1 - 5.

நேர்த்திக்கடன் ஆகும். மேலும் கடவுளுக்குப் பல பொருட்களைக் காணிக்கைச் செலுத்துதலும், நேர்த்திக்கடன் செய்தலும் உண்டு. தாங்கள் ஆற்றும் விளைவின் பயனை கடவுளுக்கு படைத்தும் மகிழ்ந்தனர்.

குறவன் ஒருவன் தான் பயிரிட்ட தினைப்புனத்தில் விளைந்த தினைக்கதிர் சிலவற்றை தெய்வத்திற்காக என நேர்ந்து விட்டிருந்தான். அக்கதிரை தெய்வத்திற்கு என அறியாது ஒரு மயில் உண்டு விட்டது. அதனால், அது மிகவும் துன்புற்று நடுங்கியது. இதனை,

''புனவன் துடவைப் பொன் போல் சிறுதினைக்
கடி உண் கடவுட்கு இட்ட செழுங்குரல்
அறியாது உண்ட மஞ்ஞை, ஆடுமகள்
வெறி உறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்''[74]

எனவரும் குறுந்தொகைப் பாடலால் அறியலாம். தெய்வத்திற்குப் பொருள்களை நேர்தலை 'கடம் பூணுதல்' என்றும் வழங்குவர் என்பதை,

''நிலை உயர் கடவுட்குக் கடம்பூண்டு தன் மாட்டுப்
பலசூழு மனத்தோடு பைதலென் யானாக''[75]

எனக் குறிப்பிடுகிறது.

''விடர் முன்க அடுக்கத்து விறல் கெழு சூலிக்குத்
கடனும் பூணாம், கைந்நூல் யாவாம்''[76]

என்ற பாடல் வழியாக தலைவி, தலைவனது பிரிவிற்காக கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்பு நாண் அணிதல், நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல்

---

[74] குறுந். 105: 1 - 4.
[75] கலி. 46: 16 - 17.
[76] குறுந். 218: 1 - 8.

இவை யாவும் தலைவனது உயிரை தன்னுயிராகக் கருதாமல் வேறாகக் கருதுவோரது செயல்கள் எனக் குறிப்பிடுகிறாள். திருமறையிலும் நேர்ந்துக் கொள்வது குறித்து பல இடங்களில் பதிவாகியுள்ளது. தாவீது ராஜா பல பொருட்களை நேர்ந்துக் கொண்டதைக் குறித்து I நாளாகமம் 11: 18ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதிலிருந்து தமிழர்களின் நேர்த்திக்கடன் செலுத்தும் மரபானது சங்ககாலத்திலும் தொடர்ந்து இக்காலம் வரையிலும் நடைமுறையிலுள்ளதை நாம் அறியலாம்.

## கடவுளைப் பழித்தல்

பொருள் தேடச் சென்ற தலைவன், மிகக்கொடிய காட்டு வழியிலும், மலைப் பகுதியிலும் தீங்கின்றித் திரும்பி வரவேண்டுமே என்ற கவலையால் சிலபோது தலைவி கடவுளைப் பழித்துரைப்பதும் உண்டு. என்பதை,

> ''ஐதே கம்ம, இவ்உலகு படைத்தோனே
> வை ஏர் வால் எயிற்று ஒள் நுதற்குறுமகள்
> கைகவர் முயக்கம் மெய் உறத்திருகி
> ஏங்கு உயிர்ப்பட்ட வீங்கு முலை ஆகம்
> துயில் இடைப்படூஉம் தன்மையது ஆயினும்,
> வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்
> .......................................
> கானம் திண்ணிய மலை போன்றிசினே''[77]

[77] நற். 240.

நம்பிக்கையின்மையால் தலைவி அவ்வாறு பழித்துரைத்தாள் என்று தவறாக எண்ணுவதற்கு இடமில்லை. கவலையும் அச்சமும் உச்சநிலையிலிருக்கும் போது கடவுளையும் கடிந்துரைக்கும் போக்கு மானிட உலகத்தில் இயற்கையாகும்.

உலகினைப் படைத்தோன் கெடுக என்று கூறுவதை, திருக்குறள்,

> ''இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து
> கெடுக உலகியற்றி யான்''[78]

என்று குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது. முயற்சி செய்து உயிர்வாழ்தல் என்றில்லாமல், இரந்தும் ஒருவன் உயிர்வாழ்தலை, இவ்வுலகைப் படைத்தவன் விதித்திருப்பானாகில், அவனும் அலைந்து கெடுக என குறிப்பிட்டுள்ளார்.

## கூற்றுவன் குறித்த நம்பிக்கை

மக்கள் இறக்கும் போது அவர்களின் உயிரினை எடுத்துச் செல்பவர் கூற்றுவனாகிய எமன் என சங்ககால தமிழர்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். கூற்றுவனை எமன் என்றும் குறிப்பிடுவர். தலைவனுடன், தலைவி உடன் போக்கு சென்றதால் அயலார் அலர் உரைத்தனர். இதனால் வருந்திய தாய், தலைவனுடன் உடன்போக்கு செல்வதற்கு முன்பே என்னுயிரைக் கூற்றுவன் கொண்டு செல்லவில்லையே. தலைவன் பின் சென்ற தலைவியைத் தேடுமாறு இதுகாறும் என்னைக் கூற்றுவன் கைவிட்டான். அத்தகைய கூற்றுவன் 'தானே கெடுக' என மருட்சியுடன் கூறியதை,

---

[78] குறள் - 1062.

"மா இருந் தாழி கவிப்ப
தா இன்று கழிக, எற்கொள்ளாக் கூற்றே"[79]

என்ற பாடல் மூலம் கூற்றுவன் குறித்த நம்பிக்கையை அறியலாம்.

## இம்மை, மறுமை நம்பிக்கை

மனிதர்களின் இறப்பிற்குப் பிறகு மறுபிறவி உண்டென்றும், அவை பல பிறவிகள் தோறும் தொடரும் என்றும் நம்பினர். திருவள்ளுவர் ஏழு என்று வரையறை செய்கிறார். இதனை,

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"[80]

என குறிப்பிட்டுள்ளார். ஏற்படாத நற்பண்புடைய மக்களைப் பெற்றிருந்தால், ஒருவனுக்கு ஏழு பிறப்பிலும் தீவினைப் பயன்களாகிய துன்பங்கள் அணுகாது என்று பதிவு செய்துள்ளார்.

'உயர்நிலை உலகில்' தலைமக்கள் நம்பிக்கைக் கொண்டோராவர்.

"அன்னைக்கு உயர்நிலை உலகமும் சிறிதால்"[81]

எனவும்

"பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை"[82]

என்று குறுந்தொகைப் பாடலடியும் கூறுகிறது.

தலைவிக்கு மறுபிறப்பில் இருந்த நம்பிக்கையினை அவள் நயமுற வெளியிட்டாள். தலைவன் உள்ளம் உருகும் வண்ணம் அவள் தன் கருத்தைக் கூறினாள். இதனை,

---

79 நற். 271: 11 - 12.
80 குறள். 62.
81 குறுந். 361: 1
82 மேலது 141

“இம்மை மாறி மறுமை யாயினும்
நீயாகியர் எம் கணவனை
யானா கியர் தின் நெஞ்சு நேர்பவளே”[83]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

தலைவனுக்கும் மறுபிறப்பில் நம்பிக்கை இருந்தது என்பதை குறுந்தொகைப் பாடல்,

“பெறுவதி யையா தாயினும் உறுவதொன்று
உண்டுமன் வாழிய-நெஞ்சே! திண்தேர்க்
...............................
இன்றை அன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை என ஒன்று இன்றி
மறுமை உலகத்து மன்னுதல் பெறினே”[84]

என குறிப்பிடுகிறது. களவுக் காலத்தில் தலைவி இற்செறிக்கப்பட்டாள். அவளைக் காணாமல் தலைவன் பெரிதும் நொந்தவனாயினும் நம்பிக்கை இழக்காமல் இவ்வுலகில் அவளை அடைவது இல்லையாயினும், மறுமை உலகில் அவளைப் பெறுவது உறுதி எனத் தன் நெஞ்சிற்கு ஆறுதல் கூறினான்.

## மறுபிறப்பில் நட்புடன் பிறப்பது பற்றிய நம்பிக்கை

ஒருவர் இறக்கும் போது மனதில் உள்ள நினைப்பே அடுத்த பிறவியிலும் தொடரும் என்ற நம்பிக்கை சங்ககாலத் தமிழர்களிடம் காணப்பட்டது. தலைவனுடன் உடனுறையும் நாளில் உயிர் நீங்கப் பெற்றால் மீண்டும் நட்புடையவராகப் பிறப்போம் என்று தலைவி நினைப்பதை,

---

[83] குறுந். 49: 3 - 6.
[84] குறுந். 199.

"பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு
உடன் உயிர் போகுதில்ல கடன் அறிந்து
இருவேம் ஆகிய உலகத்து
ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயர்கே"[85]

என்ற பாடலடிகள் வழியாக அறியலாம்.

## சூளுரை மீது நம்பிக்கை

ஒருவர் கூறிய சொல்லை உறுதிப் படுத்துவதற்காகவும், பிறரை நம்ப வைப்பதற்காகவும் ஆணையிடுவது வழக்கம். இவ்வாறு கடவுள் மீது ஆணையிட்டுக் கூறுவதை தொல்காப்பியர் 'முன்தேற்று' என்று கூறுவர்.

தலைவன், தலைவியிடம் தெய்வம் சான்றாக நின்னை விரைவில் வந்து மணம் முடிப்பேன் என்று கையைப் பற்றி சூளுரை வழங்கினான். அவ்வாறு சூளுரை வழங்கிய பின் அவன் வரைவு நீட்டித்தமையால் அந்த சூளுரைகள் பொய்யாகின. ஆகவே அத்தெய்வங்களால் தலைவனுக்கு ஏதம் ஏற்படும் என தலைவி வருந்துவதை,

"எக்கர் நண்ணிய எம் ஊர் வியன்துறை,
நேர் இறை முன்கை பற்றி
சூரர மகளிரோடு உற்றசூளே"[86]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

சூள் உரைத்தோர் தம் உரையினின்றும் தவறுவாராயின் அவருக்குத் தீமை வந்தெய்தும் என்பதில் தலைவி உறுதியான நம்பிக்கைக் கொண்டாள். சொன்ன சொல்லினைக் காவாமல் மீறுதல் கொடிய செயலாகும். ஊர்

---

[85] குறுந். 57: 3 - 6.
[86] குறுந். 53: 5 - 7.

மன்றத்தின் கண் உள்ள மராமரத்தில் வாழும் கடவுள் கொடியவர்களை வருத்தும் என்பது வழக்காகும். ஆகவே தலைவன், கொடியவன் அல்ல எனத் தலைவி பரிவுடன் கூறியதை,

> "மன்ற மராஅத்த பேஎம் முதிர் கடவுள்
> கொடியோர்த் தெறூஉம் என்ப, யாவதும்
> கொடியர் அல்லர் எம் குன்று கெழு நாடர்"[87]

என்ற கபிலர் பாடல் வழி அறிய முடிகிறது.

தலைவியைத் தேற்ற தலைவன் முருகக் கடவுளை வணங்கி, வஞ்சின மொழியை வாய்மையாகக் கூறுகிறான். இதனை மேலும் உறுதிப் படுத்த அழகிய தெளிந்த இனிய அருவி நீரைக் குடித்து சூள் உரைக்கின்றான். என்பதை,

> "மீமிசைக் கடவுள் வாழ்த்தி கைதொழுது
> ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி"[88]

என்னும் இப்பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது. இவ்வாறு சூளுரை செய்பவர்கள் பொய்க்கமாட்டார்கள் என்பது பழங்கால மக்களின் நம்பிக்கையாகும்.

## ஊழ்வினை நம்பிக்கை

ஊழ்வினையை எவராலும் வெல்ல முடியாது என்று மக்களால் இன்றும் நம்பப்படுகிறது. மக்களிடத்தில் ஊழ், மறுபிறவி, முற்பிறவி, சொர்க்கம் செல்லுதல் போன்றவற்றின் மீது நம்பிக்கை இருந்ததைச் சங்க இலக்கியப் பாடல்கள் வழியாக அறியமுடிகிறது.

சொர்க்கம் செல்வதற்கும், நரகம் செல்வதற்கும், பிறவி எடுப்பதற்கும் அடிப்படையாக இருப்பது நாம் செய்த வினையின் பயனே என்று மக்கள் நம்பினர்.

---

87 குறுந். 87: 1 - 3.
88 குறிஞ்சிப்பாட்டு 209 - 210.

ஒவ்வொருவருக்கும் அவரவரின் வினைப்பயன் காரணமாக நடக்க வேண்டியது நடந்தே தீரும் என்ற நம்பிக்கை மக்களிடம் நிலவியது. அது தான் விதி என்றும், விதியை யாராலும் வெல்ல முடியாது என்றும் மக்கள் கூறுவதைக் காணமுடிகிறது.

தோழி தலைவனிடத்தில் உனக்குக் கிடைக்க இருக்கும் பொருள் உன் செயலாலன்றி ஊழ்வினையாலே வாய்க்கக் கூடியது என்ற ஊழின் தன்மையை எடுத்துக் கூறுவதை,

> ''கிழவர் இன்னோர் என்னாது பொருள் தான்
> பழவினை மருங்கின் பெயர்பு உறையும்''

என கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகிறது.

பருவமடையாத இளமைக் காலத்தில் தலைவனும் தலைவியும் உடம்பால் நீங்காது விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களை பருவமெய்திய பின் உள்ளத்தாலும் நீங்காதவாறு நட்பாக்கி மகிழ்வித்த ஊழ்வினை மிகவும் வலிமை வாய்ந்ததாகும் என இடைச் சுரத்துக் கண்டோர் கூறி மகிழ்ந்ததை,

> ''நல்லை மன்றம்ம பாலே - மெல் இயல்
> துணைமலர்ப்பிணையல் அன்ன இவர்
> மணம் மகிழ் இயற்கை காட்டியோயே''[89]

என்ற பாடல் வழியாக அறிய முடிகிறது.

தலைவன், தலைவியரின் நட்பானது ஊழினால் கூட்டப்பட்டு பிறவிகள் தோறும் தொடர்வதாகும். அந்நட்பானது முற்பிறப்பிலேயே அமைந்து காணப்பட்டு

---

[89] குறுந். 229: 5 - 7.

உரிய காலத்தில் வெளிப்படுவது. பிறர் ஒருவரால் கூட்டப்பட்டு, பிணிக்கப்படுவது இல்லையாதலின் அதனை ஒருவராலும் பிரிக்கவும் இயலாது என்று தலைவி கூறியதை,

> ‘‘பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு
> யாத்தேம் யாத்தன்று நட்பே
> அவிழ்த்தற்கு அரிது, அது முடிந்தமைந்தன்றே’’[90]

என குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

### ஊழிக் காலம் பற்றிய நம்பிக்கை

உலகம் அழியும் காலத்தை ஊழிக்காலம் என்பர். ஊழி பற்றிய நம்பிக்கை பழங்காலந்தொட்டு மக்களிடம் காணப்படுகிறது. இவ்வுலகெல்லாம் ஒரு சேர நடு நடுங்கி அஞ்சும் படியாக ஊழிக் காலத்தே இப்பெரிய நிலவுலகம் அழியும் என்று நெய்தற்கலியில் கூறப்பட்டுள்ளது. இதனை,

> ‘‘ஒரு நிலையே நடுக்குற்று இவ்வுலகெலாம் அச்சுற
> இருநிலம் பெயர்ப்பு அன்ன’’[91]

என்ற வரிகள் மூலம் ஊழிக்காலம் அழிவது பற்றிய நம்பிக்கையை அறியலாம்.

ஊழித்தீ குறித்தும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. ஊழித் தீயானது கிளர்ந்தெழுந்து யாவற்றையும் பொசுக்கும் என நம்பினர். இதனை,

> ‘‘பசும் பிசிர் ஒள் அழல்
> ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர் திகழ்பு
> ஒல்லா மயலொடு பாடு இமிழ்வு உழிதரும்
> மடங்கல் வண்ணம் கொண்ட கடுத்திறல்’’[92]

---

[90] குறுந். 313: 5 - 6.
[91] கலி. 134: 9 - 10.
[92] பதிற். 62: 5 - 8.

என பதிற்றுப்பத்து கூறுகிறது. தீப்பொறிகளையுடைய ஒளிபொருந்திய நெருப்பு ஊழிக்கால முடிவில் தோன்றும். சூரியன் பல உருவம் கொண்டது போன்ற மாயத்தொடு ஒளிதிகழப்பெற்று உயிர்களுக்கு பொறுக்கவியலாத மயக்கத்தைச் செய்யும் என இப்பாடல் விளக்குகிறது. இதனால் ஊழிக்காலம், ஊழித்தீ பற்றிய பண்டைய தமிழர்களின் நம்பிக்கை இன்றும் தொடர்வதைக் காணலாம்.

### பலி பற்றிய நம்பிக்கை

பலி கொடுத்தல் என்பது தெய்வ வழிபாட்டுக் கூறுகளில் ஒன்றாகும். தங்களுக்கு நல்லது நடக்க வேண்டும் என்ற அடிப்படையிலேயே எல்லா விதமான பலிகளும் மக்களால் கொடுக்கப்பட்டு வருகிறது எனலாம். உயிர்பலி, குருதிப்பலி, சோற்றுப்பலி, பூப்பலி, தேன்பலி என பலிப்பொருள்கள் பலவகையாகக் காணப்படுகிறது.

கடவுளை வணங்குவதற்குப் பூக்களைப் பலியாக இட்டு வழிபடும் வழக்கம் இன்றும் உள்ளது. இது எளிய வழிபாட்டு முறையாக கருதப்படுகிறது. இவ்வழிபாட்டு மரபு வழிவழியாக பின்பற்றப்பட்டு வருகிறது என்பதை,

> ‘‘பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ’’[93]

என்ற மருதக்கலி பாடலடியால் உணரலாம்.

கிறிஸ்தவர்களின் திருமறையான விவிலியத்திலும் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் விலங்குகள், பறவைகள் போன்றவற்றைப் பலி கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. புதிய ஏற்பாட்டுக் காலத்தில் கடவுள் நமக்காக பலியானதினாலே பலிகொடுக்கும் வழக்கம் இல்லாமற் போய்விட்டது.

---

[93] கலித். 93:24

## பேய் குறித்த நம்பிக்கை

மக்களிடம் அச்சத்தினாலும், நம்பிக்கையாலும் பேய், பிசாசு, ஆவி குறித்த எண்ணங்கள் நிலைத்து விட்டன. சுடுகாட்டில் பேய், பிசாசு உறைவதாக மக்கள் நம்புகின்றனர், உச்சிப்பொழுது நேரம், அந்திநேரம், நள்ளிரவு நேரங்களில் பேய் பிசாசுகள் உலவும் நேரமென மக்களால் நம்பப்படுகிறது. நாட்டுப்புற மக்கள் பேய் பிசாசுகளைக் 'காத்துக் கருப்பு' என்ற சொற்களால் அழைக்கின்றனர்.

பண்டையத் தமிழரின் வெற்றி தெய்வமாகிய கொற்றவைக்கு ஏவல் செய்வோர் கூலியாகிய பேய்களே என்று மக்கள் நம்பியதை,

> ''பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித் தாங்கு
> வருந்தல் நின் வஞ்சமுரைத்து''[94]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் உணர்த்துகிறது.

தொல்காப்பியத்தில் அணங்கு என்னும் பெண் தெய்வத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அணங்கு என்பதை சிலர் பேய் என்றும், தெய்வம் என்றும் கூறுகின்றனர். தொல்காப்பியர் அச்சத்திற்குரிய மெய்ப்பாட்டிற்கு அணங்கு, விலங்கு, கள்வர், இறை என்னும் நான்கு காரணங்களைக் குறிப்பிடுகின்றார். இதனை,

> ''அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
> பிணங்கல் சாலா அச்சம் நான்கே''[95]

என்ற நூற்பா புலப்படுத்துகிறது, எனவே வருத்தும் பெண் தெய்வம் என்ற அடிப்படையில் அணங்கு வழிபாடு தொல்காப்பியத்தில் இருந்துள்ளது.

---

[94] கலித். 89 8 9.

[95] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 252

பேய் பற்றிய நம்பிக்கைகள் பழங்காலத்தில் அதிகமாகக் காணப்பட்டன. எனினும் இயல்பாக கிராமப்புற மக்கள், நகர்ப்புற மக்கள் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோரிடமும் பேய் பற்றிய உணர்வு இருக்கின்றது என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம்.

''தமிழிலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் மனித மனத்தில் தோன்றிய அச்சந்தரும் எண்ணத்தின் காரணமாக விளைந்த ஒன்றே பேய் உருவம் என்று கூறப்படுகிறது. இயற்கையின் இயக்கத்திற்குரிய காரணங்களை ஆய்ந்து அறியாத நிலையில் இயற்கையின் ஆற்றலைப் பார்த்து அவன் கற்பனையில் எழுந்த உருவமே 'பேய்' உருவம் என்று நம்பினார்கள்''[96].

சங்க இலக்கியத்தில் பேய் என்பதைக் குறிக்க 'பேஎய்' என்ற சொல்லும் 'கழுது' என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது. உலக ஆசைகளையும், இன்பங்களையும் அனுபவிக்காமல் இறப்பு நிகழ்ந்தால் அவர்களது ஆத்மா சாந்தியடையாமல் 'பேய்' வடிவமாகி கண்ணுக்குப் புலப்படாது வந்து துன்பம் விளைவிக்கும் என்று நம்பினர். கண்ணுக்குப் புலப்படாத அந்தப் பேய் வடிவத்தினை அமைதியடையச் செய்வதற்காகப் பலி சடங்குகளைச் செய்து, குலதெய்வமாக மாற்றிக் கொண்டனர். அதனை வழிபட்டால் வாழ்வு வளம் பெறும் என நம்பி பேய்களை வழிபடத் தொடங்கினர். அச்சந்தரும் தோற்றத்தைக் கொண்ட பேய்களைக் குறித்து மதுரைக் காஞ்சி,

> ''பானாள் கொண்ட கங்குல் இடையது
> பேயும் அணங்கும் உருவு கொண்டு''[97]

எனக் குறிப்பிடுகிறது.

---

[96] தமிழவன், ப. 438-439.
[97] மதுரைக் காஞ்சி. 631-632.

இரவில் வரும் தலைவனைப் பேய்கள் வருத்தும் என தலைவி வருந்துவதையும், பேய்கள் காற்றைப் போல இயங்கும் என்பதையும்,

‘‘கழுதுகால் கிளர ஊர் மடிந்தன்றே’’[98]

எனவும்

‘‘கழுதுகால் கொள்ளும் பொழுது கொள் பானாள்’’[99]

என்ற நற்றிணைப் பாடலடிகள் வெளிப்படுத்துகிறது.

இறந்த கணவனின் உடலைப் பேய்கள் தீண்டாதவாறு மனைவி காத்துக் கொள்ளுதலை, தொல்காப்பியர்,

‘‘இன்னகை மனைவி பேஎய் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தொடாக்காஞ்சியும்’’[100]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இளம்பெண்டிர் தலைவன் மீது கொண்ட காதல் நோயால் துன்புறும் போது அதனை உணராத தாய் முதலானோர் இவள் பேயால் கொள்ளப்பட்டாள் எனக் கருதி அப்பேயை ஓட்டுமாறு வேலனை வேண்டியதாகவும், வேலனுக்கு மறி அறுத்துப் பலியிட்டு வழிபாடு செய்ததாகவும் குறுந்தொகைக் குறிப்பிடுகிறது. இதனை,

‘‘மறிக் குரல் அறுத்து, தினைப்பிரப்பு இரீ இ,
செல் ஆற்றுக் கவலைப் பல் இயம் கறங்க,
தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா,
வேற்றுப் பெருந்தெய்வம் பல உடன் வாழ்த்தி
பேஎய்க் கொளீஇயர், இவள் எனப்படுதல்’’[101]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

---

[98] நற்றி. 255: 1.
[99] மேலது. 171: 9.
[100] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 77: 10 - 11.
[101] குறுந். 263.

## வெறியாட்டு

வெறியாட்டு ஒரு தொன்மச் சடங்காகவே கருதப்படுகின்றது. கன்னிப்பெண்களை சூரி அணங்கு, முருகணங்கு போன்றவை தீண்டித் துன்புறுத்தும். அது வெறியாட்டின் வழி தீரும் என்று பழந்தமிழ் மக்கள் நம்பினர்.

முருகனைப் போல வேடம் பூண்டு கையில் வேலேந்தி ஆடும் மலைநாட்டுப் பூசாரி வேலன் எனப்பட்டான். குறமகளது நோய் முருகனால் வந்ததென்று செவிலித்தாய் ஐயுற்று அக்கடவுளை அமைதிப்படுத்த ஒரு களத்தை அமைத்து பூசையிட்டு ஆடிப்பாடி வழிபடும் முறையே வேலன் வெறியாட்டு எனப்படும்.

தினையரிசிச் சோற்றுடன், குருதியைக் கலந்து பல பண்ணியங்களோடு வேலனுக்குப் பலியிடுவர். ஆட்டுக் குட்டியைப் பலியிட்டு, அதன் இரத்தத்தைத் தலைவியின் நெற்றியில் பூசுவர். இத்தகைய வெறியாட்டு முறைகள் நிகழ்ந்ததை,

> ''முருகு அயர்ந்து வந்த முதுவாய் பேல
> சினவல் ஓம்புமதி வினவுவது உடையேன்
> பல்வேறு உருவில் சில் அவிழ் மடையொடு
> சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி''[102]

என்ற குறுந்தொகைப் பாடலும்,

> ''வெறி என அன்னை தந்த முதுவாய் வேலன்''[103]

என்ற அகநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றன.

[102] குறுந். 362: 1 - 4.
[103] அகம். 388.

"மென்றோள் நெகிழ்ந்த செல்லல் வேலன்
வென்றி நெடுவே ளென்னும் அன்னை"[104]

என்னும் கூற்று தலைவியின் உடல் வேறுபாட்டிற்கு முருகனே காரணம் என தவறாகப் புரிந்து கொண்ட தாயைக் காட்டுகிறது. இதனைக் காதல் என்று அறியாத தாய், செவிலி ஆகியோரது மனநிலையினை (நற்றிணை 173; 251; 282) வெளிப்படுத்துகின்றன. நாட்டுப்புற தெய்வ வழிபாட்டில் தெய்வமேறி வாய்ச்சொல் கூறும் வழக்கமும், பலியிடும் முறையும் இன்றுவரை இருந்து வருவது வெறியாட்டின் மரபுத் தொடர்ச்சியை காட்டுகிறது எனலாம்.

## பிறைதொழுதல்

பிறைதொழும் பழக்கம் தமிழகத்தில் பழங்காலம் முதல் இன்று வரை மரபாக இருந்து வருகிறது. பிறையினைத் தொழுதால் வாழ்வும், வளர்ச்சியும் அடையலாம் என்ற எண்ணம் மக்களிடம் உருவானது. பிறை மதியோடு நிறைமதியையும் வழிபடும் வழக்கம் உருவானது. "பிறையினைப் போற்றி வழிபடும் மரபு பண்டைய நாகரிக நாடுகளில் சிற்சில வேறுபாடுகளுடன் இருந்துள்ளது என்பர்"[105].

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத் தொடக்கத்தில் உலகைக் காக்கின்ற ஞாயிறு, மழை ஆகியவற்றோடு 'திங்களைப் போற்றுதும்' (சிலப்பதிகார மங்கல வாழ்த்துப்பாடல் - 1) என திங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து முதற்கண் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது. ஏனெனில் நன்செய் பயிர்களின் சூல் பிடிப்பிற்குச்

[104] குறுந். 111: 1 - 2.
[105] சுப்பிரமணியன், தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, ப. 204.

சந்திரனின் ஒளிக்கதிர்கள் அவசியம். ஒள்ளிய அணிகளை அணிந்த மகளிர் உயர்ந்த பிறைச் சந்திரனை வணங்கும் செய்தியை,

> "ஒள்இழை மகளிர் உயிர் பிறைதொழூஉம்
> புல்லென் மாலை"[106]

என ஒளிபொருந்திய ஆபரணங்களை அணிந்த மகளிர் பிறை தொழுத செய்தி புலப்படுகிறது.

> "குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்"[107]

என்ற பாடலடி பழைமைக்குரியதும், எல்லோராலும் தொழப்படுவதும் என குறிப்பிட்டுள்ளது. இதிலிருந்து பிறைதொழும் வழக்கத்தினை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

### தை நீராடல்

மார்கழித் திங்களன்று பாவையர்களால் மேற்கொள்ளப்படும் பாவை நோன்பினையே 'தைந்நீராடல்' என்ற தொடர் குறிக்கும்.

மார்கழித் திங்கள் முழுவதும் பாவையர்கள் அதிகாலையில் எழுந்து நீராடி சிவன், திருமால் ஆகிய தெய்வங்களை வேண்டி நோற்கும் நோன்பே பாவை நோன்பு எனப்படும். மாணிக்க வாசகரின் திருவெம்பாவையும், ஆண்டாளின் திருப்பாவையும் இந்த தைந்நீராடல் சிறப்பினை அழகாக எடுத்துக்காட்டுகின்றன.

---

[106] அகம். 239: 9 10.
[107] மதுரைக்காஞ்சி, 193.

மகளிர் பலர் திரளாகச் சென்று குளிர்ந்த நீர் நிரம்பியிருக்கும் பொய்கையில் நீராடியச் செய்தியை ஐங்குறுநூறு சுட்டுகிறது. மேலும், மகளிர் அதிகாலையில் நீராடினர் என்பதை நற்றிணைப் பாடல் கூறுகிறது.

தலைவி அதிகாலைப்பொழுதில் தழையாடையும், மாலையும் தந்தவன் இத்தலைவன் என்று தைத்திங்களில் நீராடி நோன்பு மேற்கொண்டதை,

"பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து,
தழையும், தாரும் தந்தனன், இவன் என
இழை அணி ஆயமொடு தகுநாண் தடைஇ,
தைஇத் திங்கள் தண் தயம் படியும்"[108]

என்ற நற்றிணை பாடலடியில் பூதன்தேவனார் என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

நோன்பு நோற்பவர், தைத் திங்களின் போது நீராடி நோன்பிருந்ததை

"வான் பெயல் நனைந்த, புறத்த, நோன்பியர்"[109]

என்ற பாடல்கள் மூலம் அறியலாம்.

மணமாகாத மகளிர் நல்ல கணவர் கிடைக்கும் பொருட்டு மார்கழி மாதத்து முழுமதி நாள் தொடங்கி தைத்திங்களில் முடிக்கின்ற ஒரு நோன்பாகும். இந்நோன்பின் போது மனதில் இறைவனை நினைத்துப் போற்றுவதன் மூலம் நினைத்த காரியம் இனிதே நிறைவேறும் என மகளிர் நம்பினர். இதனைக் கலித்தொகைப் பாடல் (59: 13) "தையில் நீராடிய தவம்" எனக் குறிப்பிடுகின்றது.

---

[108] நற். 80: 4 - 7.
[109] மேலது. 22: 7.

இவ்வாறு தைந்நீராடும் மகளிர் அயலார் வீடுதோறும் சென்று இசையுடன் பாடி உணவுப் பொருள்களை இரந்து பெறுவர். அவ்வாறு வீடுதோறும் இரந்து பெற்ற உணவுப் பொருளைப் பிறருக்குக் கொடுத்து உண்பர். நீராடி நோன்பிருந்தவர் உண்ணும் உணவானது ஒரு கைப்பிடி அளவே இருந்தது என நற்றிணை 22-வது பாடல் குறிப்பிடுகிறது. இக்காலத்திலும் அடியார் இதைச் செய்வது வழக்கத்திலுள்ளது.

## நடுகல் - நம்பிக்கை

நடுகல் என்றால் நட்டக்கல் என்று பொருள்படும். நடுகல் என்ற வினைத்தொகை இலக்கண இலக்கியங்களில் பேசப்படுகிறது. நடுகல்லை 'நட்டக்கல்', 'நடப்பட்டகல்' என புறநானூறும், 'நாட்டப்படுங்கல்' எனத் தொல்காப்பியமும் குறிக்கின்றன.

நாட்டைக் காக்க போரில் இறந்த வீரர்களுக்கு கல்நட்டு வழிபாடு செய்து வருவது பண்டைய தமிழரின் மரபாகும். போரில் இறந்தவர்களின் நினைவாக நடப்படும் கற்களை நடுகல் என்றழைப்பர்.

வீரத்தைப் போற்றும் பண்பு, ஆவி பற்றிய நம்பிக்கை அக்காலத்தில் இருந்தது. இறந்தவர்களின் ஆன்மாவைச் சடங்குகள் செய்து ஓர் குறிப்பிட்ட இடத்திற்கு கொண்டு வரமுடியும். அந்த ஆவியை ஒரு பொருளில் நுழைத்து விடவும் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகெங்குமுள்ள மக்களிடம் இருந்தது.

## நடுகல் வழிபாடு செய்தல்

பிறருக்காக தங்களின் இன்னுயிரை மாய்த்துக் கொண்ட வீரர்கள் பிற மனிதர்களின் வழிபாட்டிற்கு அடித்தளமாக அமைகின்றனர். இவர்களது வீரமும்,

தியாகமும் போற்றப்படுகின்றன. இறந்தவர்களின் பெருமையும், புகழும் மற்றவர்களுக்கு உணர்த்தக்கூடிய விதமாக அவர்களுக்கு வீரவணக்கம் செலுத்துகின்ற நினைவு கல்லாக நடுகல் விளங்குகிறது. போரில் இறந்தவர்களின் தியாகம் மற்றும் பெருமைகள் போற்றப்பட்டு அவர்கள் வணக்கத்திற்குள்ளாகின்றனர். இறந்தவர்களுக்காக நடுகல் நடுவதன் மூலம் அவர்களது உயிர் நிலைநிறுத்தப்படுகிறது என்றும் இறந்தவர்களின் உயிரை வழிபடுவதனால் தங்களுக்கும் தங்கள் ஊருக்கும், நாட்டிற்கும் நன்மைகள் செய்யும் என்றும் நம்பினர்.

தொல்காப்பியர் வெட்சித்திணையில் ஆநிரைப் போரில் இறந்தவர்களுக்கு எடுக்கப்படும் நடுகல்லைப் பற்றி,

> ‘‘காட்சி கால்கோல் நீர்ப்படை நடுகல்
> சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் என்ப
> இருமூன்று வகையில் கல்லொடு புணர’’[110]

என்ற பாடலடிகள் விரித்துரைக்கின்றன.

வீரனுக்கு ஏற்ற கல்லை தேர்ந்தெடுத்து நேர்ந்தியாக வெட்டியெடுத்து, அதனை புனித நீரால் சுத்தம் செய்து அக்கல்லை வீரனாகப் பாவித்து அதற்கு வழிபாடு செய்து, படையல் வைத்து வழிபட்டனர்.

ஐங்குறுநூற்றில் ஓதலாந்தையார் என்ற புலவர் யானையினுடைய தும்பிக்கையில் இருக்கின்ற சொரசொரப்பைப் பார்த்து எழுத்துக் கல் பொறித்த நடுகல்லோடு ஒப்பிடுகிறார்.

---

[110] இளம்பூரணனார் உரை, தொல். பொருள் 63.

"விழுத் தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல்லன்ன விழுப் பிணர்ப்
பெருங் கை யானை"[111]

என்ற பாடலில் தலைவன் அறநெறியிலிருந்து விலகாமல் தன் உடம்பிலே அம்புகளை நேருக்குநேர் ஏற்று வீரமரணம் அடைந்தவர் எனவும் அவருடைய பீடும், பெயரும் உடைய நடுகல் எழுத்துக்களை யானையின் துதிக்கையிலே இருக்கின்ற சொர சொரப்பை உடையது என்றும் கூறுகின்றார்.

பெண்கள் நடுகல்லை வழிபடும் போது விருந்தினர் வீட்டுக்கு வர வேண்டும் என வேண்டினர். மேலும் கணவனும், வேந்தனும் போரில் வெற்றி பெற வேண்டும் என்றும் வேண்டுதல் செய்தனர். இதனை,

"ஒலிமென் கூந்தல் ஒள்நுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும், ஒடியாது
விருந்து எதிர் பெறுகதில் யானே, என்னையும்,
ஒ ................................ - வேந்தனொடு
நாடு தரு விழுப்பகை எய்துக எனவே"[112]

என்ற புறப்பாடல் எடுத்தியம்புகின்றது.

## சூரர மகளிர் வழிபாடு

'சூரர மகளிர் என்போர் அச்சந்தரும் தெய்வ மகளிர்' என்று பொருள்படும். தெய்வத்தைச் சுட்டி சூள் செய்தல் பழந்தமிழரின் நம்பிக்கையாகும். தலைவி தலைவன் கூறிய சூளினை நினைத்து வருந்துகிறாள். தலைவன் தலைவியிடம் விரைந்து வந்து மணம் முடிப்பதாக கூறிய சூளுரையானது, காலங்கடந்துச் சென்றதால் வருத்தமளிப்பதாக உள்ளது என தலைவி தலைவனிடம் கூறுகிறாள். இதனை,

---

[111] ஐங். 352.
[112] புறம் - 306

"எம் அணங்கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புண்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறிஅயர் களம் தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி அன்ன
எக்கர் நண்ணிய எம்ஊர் வியன் துறை
நேர்இறை முன்கை பற்றி
சூரர மகளிரோடு உற்ற சூளே"[113]

என சூரர மகளிர் முன் உரைத்த சூளினை நினைவூட்டுகிறாள். இதன் பொருளாவது சத்தியத்தை மீறினால் தெய்வம் தண்டிக்கும் என்ற நம்பிக்கையே ஆகும். இந்த நம்பிக்கை இன்றும் தொடர்கிறது எனலாம்.

உயர்ந்த மூங்கில்கள் வளர்ந்தோங்கும் மலையிடத்தே சூரர மகளிர் வாழ்வர். அவர்கள் கடவுள் தன்மையுடைய மலைச் சுனையிலுள்ள இலைகளைக் கடந்து, குவளை மலரைப் பறித்து அவற்றோடு குருதி போன்ற நிறமுடைய காந்தள் மலரையும் அழகுபடக் கட்டி சூடுவர். அவ்வாறு சூடிக்கொண்டு அருவியின் ஒலியே இசைக் கருவிகளாகக் கொண்டு அச்சூரர மகள் ஆடுவாள். என்பதை,

"கடவுள் கற்சுனை அடை இறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி ஒண்பூ உருகெழக் கட்டி
பெருவரை அடுக்கம் பொற்பச்சூள் மகள்
அருவி இன் இயத்து ஆடும்"[114]

என்ற நற்றிணை பாடலடியால் அறியலாம். இவ்வாறு சூரர மகளிர் மற்றும் சூள் குறித்த நம்பிக்கைகளை இலக்கியத்தின் வழியாக நாம் அறியலாம்.

---

[113] குறுந். 53.
[114] நற்றி. 34: 1 - 5.

## சடங்கு

மக்கள் தாங்கள் செய்து வரும் வழிபாடு, விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர். பொதுவாக மனிதன் பிறந்தது முதல் இறப்பு வரையிலும் பல்வேறு வகையான சடங்குகளைப் பின்பற்றி வருவதை இலக்கியங்களால் அறியலாம். தற்காலச்சூழலில் சடங்குகள் சாதியோடும், சமஸ்கிருதத்தோடும், வைதீகத்தோடும் தொடர்புடையதாக உள்ளன. வைதீகத் தலைமை உருவாவதற்கு முன்னர் சாதி நிலைப்பட்ட சமூகங்கள் தங்களுக்குள் சடங்கு நடத்தும் பிரிவினரை வைத்திருந்தனர்.

சடங்கு என்பதற்கு மதுரைத் தமிழ் பேரகராதி "சாஸ்திர விதி பற்றியும், வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை" (2004-798) என பொருள் கூறுகிறது.

வழிபாடு, விழா முதலிய சடங்குகள் மக்கள் பயன் கருதி செய்யப்படுவன ஆகும். மழை வளம் பெருகவும், தங்கள் வாழ்வு சிறக்கவும் மக்கள் தெய்வம் போற்றுகின்றனர்.

## திருமணச் சடங்கு

திருமண அறிவிப்புத் தொடங்கி, திருமணம் முடியும் வரையிலும் பல சடங்குகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. இவை குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

சங்க அகப்பாடல்களில் திருமணத்தைக் குறிக்கும் பாடல்கள் இரண்டாகும். அவை கருத்தொற்றுமை உடையன. ஒன்று நல்லாவூர் கிழார் பாடியது. மற்றொன்றினைப் பாடியவர் விற்றூற்று மூதெயினனார். தலைவியின் வாழ்வில் திருமணம் ஈடு இணையற்ற நிகழ்ச்சியாக காணப்படுகிறது.

## திருமணச்சடங்கின் தோற்றமும் தேவையும்

பண்டைய நாளில் தன் வாழ்க்கைத் துணையை தாமே தேர்ந்தெடுத்து வாழ்க்கை நடத்தி வந்த மக்களும் இருந்தனர். இவர்களுள் சிலர் களவொழுக்கம் நடத்திய பிறகு, தலைவியைத் துறக்கவும் செய்தனர். இதனைக் கண்ட சான்றோர்கள் பலர் முன்னிலையில் பெற்றோர்கள் உடன்பட்டு கொடுக்க வேண்டும் என்ற முறையை உருவாக்கினர்.

திருமணம் என்பது ஒரு சடங்கு. அது பொய்யும், வழுவும் வாழ்க்கையில் மலிந்த பின்னர் ஏற்பட்ட சடங்காகும். மனித உள்ளத்தின் நற்கூறுகளை அகப்பாடல்கள் மிக விரிவாக எடுத்தியம்புகின்றன. அதே நேரத்தில் பொய்யும், மறதியும் ஆங்காங்கே தென்படாமல் இல்லை என்பதை குறுந்தொகை, நற்றிணைப் பாடல்கள் சுட்டிக் காட்டுகின்றன.

குறுந்தொகைத் தலைவி வழியாக, தலைவன் பொய்யாக சூளுரை கூறியதை அறியலாம். நானும் அவனும் களவு மணம் புணர்ந்த போது சான்றாவார் யாருமில்லை. ஆனால் நாரையிடம் கேட்கலாம், என்றாலும் நாரை ஆரல் மீனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இப்போது தலைவன் கள்வனைப்போல பொய் கூறுவானாகில் நான் என்ன செய்வேன் என்று கலங்கினாள். இதனை,

> ‘‘யாருமில்லைத் தானே கள்வன்
> தானது பொய்ப் பின் யானெவன்செய்கோ
> குருகும் உண்டு தான் மணந்த ஞான்றே’’[115]

என்ற பாடல் வழியாக தலைவன் பொய் கூறுவதை அறிய முடிகிறது.

---

[115] குறுந், 25.

நற்றிணைப் பாடலில் வருகின்ற தலைவி கடலில் மீன் பிடிக்கும் பரதவ குலப்பெண். தலைவனோ செல்வவளமிக்க அரச பரம்பரை. இருவரும் கலந்தனர். பின்பு தலைவன், தலைவியை மறந்து நீண்ட நாட்களுக்குப் பின்னர் திரும்பி வந்தான். அறிவு நலமிக்க தோழி தலைவனுக்கு அறிவு புகட்ட விரும்பினாள். அவள் தலைவனிடம் இவள் சிறுகுடியில் பிறந்த பரதவருடைய மகள். நீயோ நெடுங்கொடிஅசையும் தேரில் செல்லும் அரசர் மகன். மீன்களைக் காவல் செய்யும் எம் உடம்பு புலால் நாறுகிறது. எம் வாழ்க்கை உம்மோடு பொருந்துவது அன்று என இடித்துக் கூறினாள். இதனை,

"இவளே கானல், நண்ணிய காமர் சிறுகுடி
நீல் நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு
மீன் எறி பரதவர் மகளே; நீயே
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே
..............................................................................................
நும்மோடு புரைவதோ அன்றே"[116]

என்ற நற்றிணைப்பாடல் மூலம் தலைவன் தலைவியை மறந்து விடுவதைக் காணலாம்.

உறுதியும், தெளிவும் இல்லாத மனமானது கிடைக்கும் இன்பத்தை நுகர்ந்துவிட்டு பின்பு எதுவுமே நடவாதது போல இருந்து விடுவதும் உண்டு. இத்தகைய மனநிலையைச் செம்மை செய்ய வேண்டியும், சான்றோர் பல்வேறு சடங்குகளைத் தோற்றுவித்தனர். ஒழுக்கக் கேடுகளை அகற்றுவதற்காக திருமணம் நடைபெற்றது. தொல்காப்பியம்,

---

[116] நற்றி. 45.

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[117]

என தொல்காப்பியருக்கு முன்பே சடங்குமுறைத் திருமணங்கள் நிலவி வந்துள்ளன என்பதை 'என்ப' என்ற சொல்லினால் அறியலாம்.

## திருமணச் சடங்கின் நோக்கம்

தலைவியின் வாழ்க்கையைப் பாதுகாக்கவே கரணம் அல்லது சடங்கு தோன்றியது என்பதை இதன் மூலம் அறியலாம். இல்லத்தில் வாழ்வோரில் முதன்மையான பாத்திரம் தலைவியே என்பதை அகநானூற்றின் மூலம் அறியலாம். "மனைமுதல்" என்ற தொடர் தலைவியைச் சுட்டுவதாக. அகநானூற்றுப் பாடல் 51-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. நல்ல சமுதாயத்தை உருவாக்கும் உயர்ந்த நோக்கத்தில் சடங்குகள் பிறந்தன. இச்சடங்குகள் பண்பட்ட மனங்கொண்ட சமுதாயத்திற்கு வழிவகுத்தன. சமுதாய நலன் சிறக்க இல்லற நலன் சிறக்க வேண்டும். அதற்குத் தலைவியின் வாழ்வு போற்றப்பட வேண்டும். அத்தகைய போற்றுதலின் அடிப்படையில் அமைந்தவையே கரணங்கள் ஆகும்.

## சிலம்புகழி நோன்பு

திருமண நிகழ்ச்சிக்கு முன்பாக தலைவியின் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுவதற்கு ஒரு சடங்கு நிகழ்த்தப்படும். இதனை "சிலம்புகழி நோன்பு" என்பர். இன்று போல் திருமணத்திற்கென்று தனி ஆடை,

---

[117] இளம்பூரணனார் உரை, தொல். பொருள், நூற் - 143.

அணிகலன்களைக் கொள்ளுதல் அன்றும் வழக்கிலிருந்துள்ளது. திருமணத்தின் முன்னரும், பின்னரும் அணிகலன்கள் குறித்து சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அவற்றுள் ஒன்று சிலம்பு. சிலம்பு காலில் அணியும் ஆபரணம். இதனை 'நூபுரம்' எனவும் அழைத்தனர். கலித்தொகையில்

"திருந்தடிநூபுரம் ஆர்ப்ப"[118]

எனவும், சிலப்பதிகாரத்தில் "பரியக நூபுரம் பாடகஞ்சதங்கை" எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த சிலம்புகழி நோன்பு தன் இல்லத்தில் நிகழ வேண்டும் என்று விரும்புகின்றனர். உடன்போக்கில் செல்லும் தலைவியர்க்கு இந்நோன்பும், மணவினையும் தலைவனது இல்லத்திலேயே பெரும்பாலும் நிகழ்ந்து விடுகிறது என்பதை,

"அதர் உழந்து அசையின கொல்லோ - ததர் வாய்
சிலம்புகழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே"[119]

எனவும்

"நும்மனைச் சிலம்பு கழீஇய யரினும்
எம்மனை வதுவை நன் மணம் கழிக எனச்
சொல்லின் எவனோ மற்றே
..............................................
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே"[120]

என மகட்போக்கிய தாய்மார் பேசுவதிலிருந்து அவர்களின் விருப்பம் புலனாகிறது. இவ்வாறு உடன்போக்கில் பிரிந்த தாய்மார் பேச்சுக்களால்

---

118 கலித். 83: 16.
119 நற். 279: 9 - 11.
120 ஐங். 399: 1 - 5.

இச்சிலம்பு கழி நோன்பும் குறிக்கப்படுதலினால் இது சிறப்பாக போற்றப்படும் சடங்கு என்பதை அறியலாம். இதனை அகம் (49; 117; 315; 321) போன்ற பல பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

தலைவனைக் காண்பதற்கு களவுகாலத்தில் தலைவி குறியிடம் நோக்கி செல்கிறாள். அவ்வாறு செல்லும் போது சிலம்போசையுடன் சென்றமையை அகநானூறு கூறுவதால், திருமணத்திற்கு முன்பு பெண்கள் காலில் சிலம்பு அணிந்த செய்தியினை அறியலாம். இதனை,

''அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினம் வந்து
துஞ்ச ஊர் யாமத்து முயங்கினாள், பெயர்வோள்,
ஆன்ற கற்பிற் சான்ற பெயரியள்''[121]

என்ற பாடல் சுட்டுகிறது.

உடன்போக்கில் சென்ற தலைவி தன் காலடிச் சிலம்போசையால் தாய் தன் போக்கைத் தெரிந்து கொள்வாளோ என்று அஞ்சி, தானே தனது சிலம்பைக் கழற்றி வைத்துவிட்டு காதலித்த தலைவனுடன் சென்ற செய்தியையும் காணமுடிகிறது. இதனை,

''அரி பெய்துபொதிந்த தெரிசிலம்பு கழீஇ,
யாய் அறிவுறுதல் அஞ்சி,
வேய் உயிர் பிறங்கல் மலை இறந்தோளே''[122]

என்ற செவிலித்தாயின் கூற்றிலிருந்து இதனை நாம் கண்டு கொள்ளலாம்.

சிலம்பு கழித்தல் என்ற சடங்கு இன்றும் சில இடங்களில் காணப்படுகிறது. திருமணமாகும் பெண் தன் காலில் சிறுவயதிலிருந்தே

---

[121] அகம் 198: 10 - 12.
[122] அகம் 321: 15 - 17.

அணிந்திருந்த சிலம்பினைக் கழற்றி வைத்த பின்பு தான் மணவறைக்குச் செல்ல வேண்டும். சிலம்புடன் செல்லக் கூடாது. ஆனால் சிலம்பு அல்லது சிலம்புக்குப் பதிலாக ஏதாவது ஒரு நகையை அம்மா வீட்டில் கொடுத்து விட்டு செல்ல வேண்டும். பிறந்த வீட்டின் லட்சுமி கடாட்சம் அந்த பெண்ணுடன் போய் விடாமலிக்க இந்த சடங்கு இப்போதும் வழக்கத்திலுள்ளது.

"திருமணத்திற்கு முன் மணமகள் காலிலிருந்து சிலம்பு நீக்கப்பெற்று, திருமணத்தின் போது மெட்டி அணிவிக்கப்படும்"[123] என சங்கத் தமிழர் வாழ்வியல் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளதை காணமுடிகிறது. இவ்வாறு சிலம்புகழி நோன்பு என்னும் சடங்கு நிகழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலமாக அறிய முடிகிறது. மணமான பின்னர் சிலம்பு அணியப்படுவதில்லை என்பதை ஐங்குறுநூறு 399-வது பாடல் "நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்" என குறிப்பிடுவதால் அறிய முடிகிறது.

## திருமண நாள் சடங்குகள்

திருமணத்திற்குரிய நல்ல நாளாக பழந்தமிழர் தீய கோள்களின் தொடர்பு நீங்கப் பெற்று திங்கள் உரோகிணியோடு கூடிய நாளை நன்னாளாகக் கருதினர். இதனை,

> "கனை இருள் அகன்ற கவின் பெறுகாலை
> கோள் கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
> கேடு இல் விழுப்புகழ் நாள் தலை வந்தென"[124]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

---

[123] நீலகண்டபிள்ளை, நா. சங்கத் தமிழர் வாழ்வியல், பக். 48.
[124] அகம். 86: 5 - 7.

“மதியம் சகடணைந்த நாளிலே மாமுது பார்ப்பான் சடங்குகாட்ட கண்ணகியும், கோவலனும் தீவலம் வந்தனர்” என சிலப்பதிகாரம் பகர்கிறது. இதனை சிலம்பு (1: 50 - 54) வரையிலான பகுதிகளில் காணமுடிகிறது.

## வீட்டினை அலங்கரிக்கும் சடங்கு

பண்டைய தமிழர் திருமணம் மணமகள் வீட்டிலேயே நடைபெற்றது. திருமணக் காலத்தில் வீட்டுச் சுவர்களுக்கெல்லாம் செம்மண்பூசி, புதுமணல் பரப்பி மாலையினைத் தொங்க விடுவர். இவ்வாறு மணமனை அழகுபடுத்துவதை அகநானூறு, கலித்தொகை பாடல்களால் அறிய முடிகிறது. இதனை,

“புனை மாண் இஞ்சி பூவல் ஊட்டி
மனை மணல் அடுத்து மாலை நாற்றி”[125]

என்ற அகப்பாடல் விளக்குகிறது.

வீட்டிற்குமுன் வரிசையாக கால்களை நட்டுப் பந்தலிட்டனர். பந்தலின் கீழ் புதுமணல் பரப்பினர். விளக்குகள் பொருத்தமான இடங்களில் வைக்கப்பட்டு, மாலைகள் தொங்கவிட்டு வீட்டை அழகு படுத்தினர். என்பதை,

“தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனை விளக்குறுத்து, மாலை தொடரி”[126]

என்ற அகப்பாடல் மூலம் அறியலாம்.

மகளின் திருமணத்திற்கு தாய், தந்தையர் வேலைப் பாடுகள் மிக்க தமது வீட்டின்கண், புதிதாகக் கொண்டு வந்த மணலைப் பரப்பினர் என்பதை அகப்பாடல் சுட்டுகிறது. இதனை,

---

[125] அகம். 195: 3 - 4.
[126] அகம். 86: 3 - 4.

"புனைவினை நல் இல் தருமணல் குவைஇ,
பொம்மல் ஓதி எம் மகள் மணன், என
வதுவை அயர்ந்தனர் நமரே"[127]

என்ற பாடல்கள் வழியாக திருமணத்தின் போது வீட்டினை அலங்கரிக்கும் மரபினை அறியலாம். இன்றைய நாட்களிலும் திருமணத்திற்காக வீட்டினை அழகுபடுத்துவதை நாம் காணமுடிகிறது.

### திருமணச் சடங்குகள்

### மணநீராட்டுதல்

திருமணத்தினை முதுமையான செவ்விய பெண்கள் நடத்தி வைத்தனர். புதல்வரைப் பெற்றெடுத்த மங்கல மகளிர் நால்வர் கூடி நின்று "கற்பினின்றும் வழுவாது நல்ல பல பேறுகளைக் கணவனுக்குத் தருக; கணவனை விரும்பி அவனால் விரும்பப்படும் சிறப்பினைப் பெறுக" என வாழ்த்தினர். நீரொடு நெல்லும், மலரும் கலந்து கூந்தலில் தூவினர்.

மணத்தை அறிவிக்கும் மணமுழவுடன் பெரிய முரசம் முழங்க மங்கல மகளிர் தலைவிக்கு மண நீராட்டினர் என்பதை,

"படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விருப்புற்று"[128]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

"நீருடன் நெல்லுஞ்சேர்ந்து முளைவிடுதல் போல" மணமகளும் பிள்ளைப்பேறு அடைவாள் என ஒத்த மந்திரமாக நெல்லும் பூவும் தூவப்பட்டன.

---

127 அகம். 221: 2 - 4.
128 அகம். 136: 7 - 8.

இது மனித இன விருத்தியும், பயிர்ச்செழிப்பும் அக்காலத்தில் தொடர்பு கொண்டிருந்ததற்குச் சான்றாகும். பிள்ளைப் பேறுடையவர்கள் வாழ்த்தினால் பிள்ளைப் பேறுண்டாகும் என்பதனை தொத்து மந்திரமாகக் கொள்ளலாம்"[129] என கா. சுப்பிரமணியன் என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு திருமணச் சடங்குகள் நடந்தது. பின்பு உறவினர் பெருமகிழ்ச்சி ஆரவாரத்துடன் தலைவியை அணுகி 'பெருமைக்குரிய மனைக் கிழத்தியாகுக' என வாழ்த்தினர். இந்நிகழ்வினை,

"புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று
வால் இழை மகளிர் நால்வர் கூடி
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆக என"[130]

அகப்பாடல் குறிப்பிடுகிறது. இன்றைய திருமண விழாக்களிலும் இவை போன்ற வாழ்த்துதல், போற்றுதல் போன்ற நிகழ்வுகள் நடைபெறுவதைக் காணலாம்.

## இசைக் கருவி முழக்குதல்

திருமணத்திற்கு சுற்றமும், நட்பும் சூழ மணவினை தொடங்கப்பட்டு, முழவு, மேளம் முதலிய இன்னிசைக் கருவிகள் முழக்கினர். தாலி கட்டும் நேரத்தில் இன்றும் மத்தளம் முழக்குதல் காணப்படுகிறது. மேளம் விரைவாகவும் சத்தமாகவும் கொட்டப்படுவதால் தீயச் செய்திகள் மணமக்கள் காதில் விழாது என நம்பப்படுகிறது. முழவின் ஓசை இடைவிடாது ஒலித்ததை,

---

129 சுப்பிரமணியன், கா. சங்ககாலச் சமுதாயம், ப. 34.
130 அகம். 86: 11 - 14.

“முழவு முகம் புலரா விழவுடைவியல் நகர்

மணன் இடையாகக் கொள்ளான்”[131]

எனவும், “மணமனைத் ததும்பும் நின்மண முழவந்து எடுப்பும்” என்ற 70- வது கலித்தொகை பாடல் 10-வது அடியால் அறியலாம். பறையும், சங்கும் மங்கல நாளில் முழங்குவன. சங்கு ஒலிக்க மணநாளில் பலரும் விருந்துண்டுச் சென்றனர். இச்செய்தியை,

“பறைபட பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு

தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய”[132]

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. இவ்வாறு திருமணச் சடங்கில் இசைக்கருவிகள் முழங்குவது சங்க காலத்தின் நீட்சியாக இன்றும் தொடர்வதைக் காணமுடிகிறது.

இன்றைய தமிழர்த் திருமணங்களில் மணமகன், மணமகள் இல்லம் வரும்போதும், மணமகளுக்கு மணமகன் மங்கல நாண் அணிவிக்கும் போதும் மணமுரசு முழங்கும் வழக்கம் காணப்படுகிறது.

## விளக்கேற்றல்

“மனை விளக் குறுத்து” (அகம் 86:4) என்னும் பாடலடியால் பழந்தமிழர் மணப்பந்தலில் விளக்கேற்றும் வழக்கத்தினைக் கொண்டிருந்தமையை அறிய முடிகிறது. மேலும் விளக்கேற்றி வழிபாட்டினை ஆற்றிய பின்னரே மணவினைகளைத் தொடங்கும் மரபினைத் தமிழர் மேற்கொண்டனர்[133] என்பார்,

---

131 அகம். 397: 3 - 4.

132 குறுந். 15: 1-2.

133 காந்தி, க. தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் ப. 42

முனைவர் க. காந்தி. இன்றைய தமிழர்களிடையேயும் இந்நிகழ்வு குத்துவிளக்கேற்றுதல் என்னும் மரபாகப் பின்பற்றப்பட்டு வருவதை நாம் காண முடிகிறது.

## மலரணிதல்

மலரோடு நெருங்கிய தொடர்புடைய பண்பாடு தமிழர் பண்பாடாகும். தமிழர்தம் வாழ்வில் மரங்களும், பூக்களும் பிறப்புமுதல் இறப்புவரை சிறப்பாகப் பயன்பட்டதை இலக்கியங்களும், வாழ்வியலும் உணர்த்தி நிற்கின்றன. பண்டைய திருமண விழாவில் மலர் சிறப்பிடம் பெற்றது. மாலைகளைத் தொங்கவிட்டு மணப்பந்தலை அலங்கரித்தனர். என்பதை,

''மனை விளக்குறுத்து, மாலைதொடரி
கனை இருள் அகன்ற கவின்பெறுகாலை''[134]

என்ற அகப்பாடல் விளக்குகிறது.

இல்வாழ்க்கையில் உரிமை பெற்றமைக்கு அடையாளமாகத் திருமணத்திற்குப் பின்னர் தலைவன், தலைவியின் கூந்தலில் மலர் அணிவித்தலை ஐங்குறுநூற்றுப் பாடல்,

''நன்மனை வதுவை யயர இவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே''[135]

என்று மொழிவதால் அறிய முடிகிறது. திருமணமாகாத பெண்கள் தலையில் பூச்சூடிக்கொள்வதில்லை என்பதை குறுந்தொகை 312-வது பாடல் குறிப்பிடுகிறது.

---

[134] அகம். 86: 4 - 5.
[135] ஐங். 294.

### மங்கல அணிகலன்

"திருமணத்தில் மங்கல அணியாகத் தாலியைக் கருதி, பயன் கொண்ட நிலை கி.பி. 10-ஆம் நூற்றாண்டு தமிழகத்துக்கு வந்ததாக கி.பி. 958-ம் ஆண்டு கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது"[136].

பழந்தமிழரின் மணமுறையில் திருமணச்சடங்கின் முக்கிய அம்சமாக பெண்ணைக் கையால் பற்றி தமர் தருதலே சிறப்பானதாகக் கருதப்பட்டது. இதனை,

> "பேர் இற்கிழத்தி ஆக, எனத்தமர்தர"[137]

எனவும்,

> "தமர் நமக்கு ஈந்த தலை நாள் இரவின்"[138]

என்ற பாடலடிகளால் அறியலாம்.

இன்றைய தமிழகக் கிராமப்புறங்களில் பெண்ணின் திருமணத்தைக் குறித்துப் பேசும் போது "கைப்பிடித்துக் கொடுத்துவிட வேண்டும்" எனக் குறிப்பிடுவது பழந்தமிழரின் மணமுறையில் கைப்பற்றி தருவதை உணர்த்துவதோடு இன்றளவும் இந்நிகழ்வு மரபாகப் பின்பற்றப்பட்டு வருவதையும் உணர்த்துகின்றது.

### காப்பு கட்டுதல்

திருமணம் வழியாக இணையும் புதிய தம்பதியர்க்கு எவ்வித துன்பமும் வாழ்வில் ஏற்படாதிருக்கவும், நன்மை நடைபெறவும் காப்பு கட்டப்படுவதுண்டு. மணமக்கள் கையினை மஞ்சள் அல்லது சிகப்புத் துண்டினால் கட்டி அவர்களை இணைக்கின்றனர்.

---

136 திணை ஆய்வுச்சிறப்பிதழ், ப. 41.
137 அகம். 86: 19.
138 அகம். 136: 18.

வாகையிலையை அறுகின் முகையோடு சேர்த்து கட்டிய வெண்மையான காப்பு நூலை தலைவிக்குக் கட்டியதை,

"பண்ணுமணி அன்ன மா இதழ்ப் பாவை
தன்நறு முகையோடு வெண்நூல் சூட்டி"[139]

என அகநானூறு குறிப்பிடுகிறது. இந்த நிகழ்வு இன்றும் தமிழர் சமூகத் திருமணத்தில் நடைபெற்று வருகின்றது. திருமணத்தன்று வருகை புரிந்து வாழ்த்தியவர்களுக்கு உழுந்தம் சோற்றுடன், வயிராற உணவு படைத்தமையும் கூறப்படுகின்றது.

## மணப்பெண் உணவு சமைக்கும் சடங்கு

புதுமணப்பெண் தலைவன் வீடு சென்றபின் நல்ல நறுஞ்சுவை உணவுகளைச் சமைத்து கணவனை உண்பிக்கிறாள். முதன் முதலாக மணப் பெண் உலையாக வைத்து சோறு சமைத்தல் வழக்கமாகும். அவள் சமைத்துப் படைக்கும் பாலுணவைத் தொட்டு உண்கிறதான முதற்போனகமும் ஒரு சடங்கேயாகும். இதனை,

"துவரப்புலர்ந்து தூமலர் கஞலி
தகரம் நாறும் தண் நறுங்கதுப்பின்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டு அடுப்பில் பால் உலைஇரீஇ
கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்கு கதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும்"[140]

---

[139] அகம், 136: 13 - 14.
[140] அகம். 141: 12 - 18.

என்ற அகப்பாடல் விளக்குகிறது. இதன் மூலம் தலைவன் மணப்பெண் படைக்கும் உணவினைத் தொட்டு உண்ணும் சடங்கினை அறிய முடிகிறது. இந்நிகழ்வினைத் தொல்காப்பியர்,

"சொல் என ஏனது சுவைப்பினும் நீ கைதொட்டது
வானோர் அமுதம் புரையுமால் எமக்குஎன"[141]

என்ற நூற்பாவில், தலைவியினது கையினால் சமைத்த உணவானது வானோர் அமிழ்தம் போன்றது என தலைவன் குறிப்பிடுவதால் உணரலாம்.

## ஐம்படைத்தாலி

திருமணம் நிறைவு பெற்று, இல்லறவாழ்வு வாழ்ந்ததன் பயனாக குழந்தைப் பேறு கிடைக்கப்பெற்று, குழந்தை பிறந்த ஐந்தாம் நாளில் குழந்தைக்கு ஐம்படைத் தாலி அணிவித்தல் ஒரு சடங்காகப் போற்றப்படுகிறது. இத்தாலி தீய சக்திகளிடமிருந்து குழந்தைகளைப் பாதுகாக்கும் என்ற நம்பிக்கை காணப்பட்டது. இதனை,

"பொன்னுடைத்தாலி என் மகன்"[142]

என்ற அகப்பாடல் சுட்டுவதைக் காணலாம்.

தற்காலத்தில் தாலி எனப்படுவது பெண்களுக்கு திருமணத்தின் போது மணமகனால் அணிவிக்கப்படும் மங்கல நாண் ஆகும். தாலி என்றால் பெண்களுக்குரியது என்ற கருத்து நிலவுகிறது. ஆனால் பண்டைய நாட்களில் தமிழர்கள் பல்வேறு அணிகலன்களைத் தாலி என்றே குறிப்பிட்டுள்ளனர். அதில்

[141] இளம்பூரணனார் உரை, தொல். பொருள் 144: 12 - 14.
[142] அகம். 54: 18.

ஒன்றுதான் ஐம்படைத்தாலி. இந்த தாலியில் குழந்தைகளுக்குக் காத்தல் கடவுளான திருமாலின் சங்கு, சக்கரம், கதை, வில், வாள் என்னும் ஐந்தின் வடிவமாக அமைத்து அணிவிக்கும் அணிகலன் ஆகும். இந்த ஐம்படைத்தாலி குழந்தையின் பாதுகாப்பிற்காக அணிவிப்பது தமிழரின் மரபாகும்.

இக்காலத்தில் குழந்தைகளின் பாதுகாப்பிற்காக அரைஞாண் கயிறு கட்டும் வழக்கமாக இது மருவிவிட்டது. தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் மிகச்சிறு வயதிலேயே போர்க்களம் புகுந்தான் என்பதை இடைக்குன்றூர் கிழார் பாடிய,

> “ஐம்படைத்தாலி களைந்தன்றும் இலனே”[143]

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

ஐம்படைத்தாலி தவிர அச்சுத்தாலி, முளைத்தாலி, புலிப்பல்தாலி என்பவையும் பண்டைய தமிழரின் வாழ்வியல் முறையில் இருந்துள்ளது. அச்சுத்தாலி என்பது காசுமாலை, முளைத்தாலி என்பது சிறுமியர் கழுத்தில் அணியும் சிறுமணி மாலை, புலிப்பல்தாலி என்பது குறிஞ்சி நிலச்சிறார்கள் கழுத்தில் அணியும் புலிப்பல் மாலை ஆகும்.

புலிப்பல்லைக் கோத்து சிறுவர்களுக்கும், அதனோடு பொன்னைச் சேர்த்து சிறுமியர்க்கும் தாலி என்னும் அணியை அணிந்தனர். என்பதை,

> “புலிப்பற்தாலிப் புதற்வற் புல்லி
> அன்னா! என்னும் அன்னையும்”[144]

---

[143] புறம். 77: 7.
[144] குறுந். 161: 3 - 4.

எனவும்

> "புலிப்பற் தாலிப் புன்தலைச் சிறாஅர்"[145]

எனவும்

> "புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி
> ..................................
> நல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே"[146]

என்ற பாடல்கள் ஐம்படைத்தாலி அணியும் மரபினைக் குறித்து சுட்டுகிறது.

## குழந்தைப் பேற்றுச் சடங்கு

மகப்பேறடைந்த மகளிர் அணங்கு முதலியன அண்டாமலிருக்க காப்பாக நெய்யுடன், சிறுவெண் கடுகை மாளிகையிடத்தில் பூசி வைத்தனர் என்பதை

> "கடும்புடைக் கடுஞ்சூல் நல்குடிக்கு உதவி
> நெய்யொடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்
> விளங்குநகர் விளங்கக் கிடந்தோள்"[147]

என்ற பாடலடிகளால் உணரலாம்.

மகவீன்ற மகளிர் நெய், ஐயவி, நறும்புகை முதலியன கொண்டு அமைதலை உணர்த்தும். இதனை,

> "நெய்யும் குய்யும் ஆடி மெய்யொடு
> மாசுபட்ட டன்றே கலிங்கமும் தோளும்
> திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்ற
> புதற்வற் புல்லிப் புனிறு நாறும் மே"[148]

என்ற பாடலடிகளால் அறியலாம்.

---

[145] புறம். 377: 9.
[146] அகம் 7: 17 - 22.
[147] நற்றி. 370: 2 - 4.
[148] நற். 380: 1 - 4.

மகளிர் மகவீற்றுக்குப் பின்னர் குளத்து நீரில் சென்று உறவினருடன் நீராடினர் என்பதை,

> ''புலவும் புனிறு தீர்ந்து, பொலிந்த சுற்றமொடு
> வளமனை மகளிர் குளநீர் அயர''[149]

என்ற மதுரைக்காஞ்சி பாடலால் உறுதிபடுத்தப்படுகிறது.

## விழாக்கள்

மக்கள் பலர் கூடித் தெய்வங்களின் பொருட்டும் தலைவர்களின் பொருட்டும், தியாகங்களின் பொருட்டும் மற்றும் பல்வேறு சிறப்புகளுக்காகவும் செய்யும் சிறப்பே விழா ஆகும்

விழா என்பதை விழவு என்றும், சாறு என்றும் குறிப்பர். பேரூர்களிலும், சிற்றூர்களிலும் பெருவிழா கொண்டாடி மக்கள் மகிழ்ந்தனர். இவ்வாறு ''மக்களின் அன்றாட வாழ்க்கையோடு ஒட்டிச் செய்யப்படும் சிறப்புகளை விழா என்பதை விட சடங்குகள் என்று கொள்ளலாம்''[150] என மு. சண்முகம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். சங்ககால விழாக்களில் நடைபெற்ற சடங்குகள் ஒவ்வொரு சாதியினருக்குமிடையே மாறுபட்டு காணப்பட்டது. ஒரு தலைமுறையிலிருந்து, இன்னொரு தலைமுறைக்கு வரும்பொழுது இச்சடங்குகள் அனைத்தும் அப்படியே கடைபிடிக்கப் படுகின்றன என்று கூறமுடியாது. சில விழாக்கள் பொலிவிழந்து போய் விடுகிறது. விழாக்கள் என்றால், புதுமணல் பரப்புதல் என்பது அன்றுமுதல் இன்றுவரை பின்பற்றப்படுகிறது. தென்னிந்திய மக்கள் நம் முன்னோரின் சடங்குகளை அர்த்தமுள்ளதாக கருதுகின்றனர்.

---

[149] மதுரைக்காஞ்சி, 600-603.
[150] சண்முகம் பிள்ளை, மு. சங்கத்தமிழர் வழிபாடும், சடங்குகளும், ப. 231.

ஊர்களில் திருவிழா நடைபெற்றதை “சாறுகொள் ஊர்” என்ற குறுந்தொகை 41-வது பாடல் 2-வது அடி சுட்டுகிறது. இதில் விழாக் கொண்ட பேரூர் போல தலைவி மகிழ்வதாக அணிலாடு முன்றிலார் என்ற புலவர் குறிப்பிட்டுள்ளார்.

இடைவிடாமல் தோற்கருவியாகிய முழவொலி முழங்க முரசு ஒலிக்க என்றும் விழாக்கள் நடைபெறும் ஆவண வீதிகளைக் கொண்டது புகார் நகரம் ஆகும். இதனை,

“விழவு அறாவியல் ஆவணம்”[151]

என்ற பாடலடி புலப்படுத்துகிறது. இதில் முருகப் பெருமானுக்கும், பிறதெய்வங்களுக்கும் இசைக்கருவிகள் முழங்க விழா நடைபெற்றதை குறிப்பிடுகிறது.

“விழவு தலைக் கொண்ட பழவிறல் மூதூர்” என்ற நற்றிணை 293-வது பாடல் அகன்ற இடத்தையுடைய மன்றத்தில் விழா கொண்டாடியதைப் புலப்படுத்துகிறது.

மிகவும் பழமையான ஊர்களில் எல்லா நாட்களும் விழாக்கள் நடைபெற்றதை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. இதனை,

‘அழியா விழவின் அஞ்சு வரு மூதூர்’[152]

என்ற அகப்பாடலில் தோழி தலைவிக்குக் கூறுவதாக அமைந்துள்ளதை காணமுடிகிறது.

---

[151] பட். பாலை 158.
[152] அகம். 115: 1.

## கார்த்திகைத் திருவிழா

கார்த்திகைத் திருவிழா குறித்து சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவ்விழாவினை அகநானூற்றுப் பாடல் ‘பெருவிழா விளக்கம்’ எனக் குறிப்பிடுகின்றது. மதிநிறைந்த கார்த்திகை நன்னாளில், இருள் அகன்ற நள்ளிரவில் வீதிகளில் திருவிளக்குகள் ஏற்றப்பட்டு மாலைகள் தொங்கவிடப்பட்டு, ஊர்மக்கள் பலரும் ஒன்று சேர்ந்து கார்த்திகை விழா கொண்டாடினர். இவ்விழாவில் தலைவன், நம்முடன் கூடி, களித்து விளையாட விரைந்து வருவாராக என தலைவி வேண்டினாள். இதனை,

“அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்
மறுகு விளக்குறத்து, மாலை தூக்கி,
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவு உடன் அயர வருகதில் அம்ம”[153]

என்ற அகப்பாடலால் அறியலாம். கார்த்திகை மாதம் அறம் செய்வதற்குரிய மாதம் என்ற நம்பிக்கை இருந்ததை நற்றிணை 202-வது பாடல் குறிப்பிடுகிறது.

## பங்குனி உத்திரவிழா

உத்திரமும், நிறைமதியும் கூடிய நன்னாளில் பங்குனி உத்திரவிழா நடைபெற்றது. அங்கு மக்கள் ஒன்றுகூடி விடியுமளவும் விழாக்கோலம் பூண்டு விழாவினை சிறப்பாகக் கொண்டாடினர். அடுப்புகள் அமைத்து உணவு சமைத்து உண்டு களிப்பர் என்பதை,

“பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்”[154]

என்ற அகப்பாடல் வெளிப்படுத்துகிறது.

---

[153] அகம். 141: 8 - 11.
[154] அகம். 137: 9.

## பூந்தொடை விழா

சங்க இலக்கியத்தில் மக்கள் நிகழ்த்திய பல்வேறு விழாக்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவ்விழாக்களுள் ஒன்று பூந்தொடை விழாவாகும். "மறவர் குடிமக்கள் முதன்முதலாக அம்பு தொடுத்து எய்யும் விழா" என்று இதனை குறிப்பிடுவர். இதனை,

> "தெம் முனை சிதைந்த, கடும்பரிப் புரவி
> வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
> பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன,
> தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்"[155]

என்னும் பாடலடிகளால் முதல் நாளன்று அம்பு விடும் களமானது புதுமணல் பரப்பப்பட்டு காட்சி தரும் என்று விளக்கப்பட்டுள்ளது.

## விழாக்கள் கொண்டாடப்படும் காலம்

விழாக்கள் சந்திரன் நிலவொளியை மேல் பரப்பி வளரும் வளர்பிறைக் காலத்தில் கொண்டாடப்பட்டன என்பதை நற்றிணைப் பாடல் வழியாக உணரலாம். இதனை,

> "நிலவே நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பி,
> பால் மலி கடலின், பரந்து பட்டன்றே
> ஊரே, ஒலிவரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டி
> கலிகெழு மறுகின், விழவு அயரும்மே"[156]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் விளக்குகிறது. இந்நிலவொளியில் ஊரினர் பெருகும் ஆரவாரத்துடன் மிகுதியாகக் கூடி விழாக் கொண்டாடினர்.

---

[155] அகம். 187: 6 - 9.
[156] நற். 348: 1 - 4.

விழாக்காலத்தில் மக்கள் தூக்கத்தையும் விடுத்து விழா நிகழ்ச்சிகளில் ஈடுபட்டனர். இதனை,

> “இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்
> விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்”[157]

என்பதால் மக்கள் தூக்கத்தை விடுத்து விழா நிகழ்வுகளில் ஈடுபட்டது புனலாகிறது.

## பலியிடுதல்

சங்க காலத்தில் பலியிடுதல் ஒரு மரபாக பின்பற்றப்பட்டு வந்தது. தலைவியின் உடல் மெலிவிற்கான காரணத்தை அறிய வேண்டிய தாய் தினை முதலிய நிவேதனப் பொருள்களைப் பலியாக வைத்து வேலனை அழைத்து அவனைப் புகழ்ந்து ஆட்டுக் குட்டியைப் பலியாகக் கொடுத்தாள். இதனை,

> “வெறிஅயர் வியன்களம் பொலிய ஏத்தி
> மறி உயிர் வழங்கா அளவை சென்றுயாம்”[158]

என்பதால் அறியலாம்.

நடுகல்லிற்கு நீராட்டி தூப தீபங்களுடன் பலி முதலியன இட்டு வணங்குதலை, புறநானூற்றுப் பாடல் 50: 1 - 5; 329: 1 - 5வது வரிகள் விளக்குகின்றன.

மன்றங்களிலும், வெறியாடும் களங்களிலும் வழிபட்ட தெய்வங்களுக்கு குருதிப்பலியும் கொடுக்கின்றனர். ஆட்டு மறியை அறுத்து, மறியின் குருதியைச் சோற்றுடன் கலந்து திரளையாகப் பலி தூவினர்.

---

[157] அகம். 122: 1 - 2.
[158] அகம். 242: 11 - 12.

இச்செய்தியை,

“மறிக்குரல் அறுத்து தினைப் பிரப்பு இரீஇ”[159]

என்பதால் அறியலாம்.

வெட்சி வீரர்கள் கவர்ந்து கொண்டு வந்த பசுவை தெய்வம் வாழும் வேப்பமரத்தடியில் கொன்று, அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்து பலியிட்டச் செய்தியை,

“தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து, குருதிதூஉய்”[160]

என்ற பகுதிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கடற்கரையில் உள்ள மக்கள் தெய்வத்திற்கு மீனையும், இறைச்சியையும் அறுத்து பலி கொடுத்தனர். இதனை,

“நறவு நொடைக்கொடியோடு
பிற பிறவும் நனி விரைஇ
பல்வேறு உருவின் பதாகை நீழல்”[161]

என்பதால் அறியலாம்.

விழாக்காலங்களில் குயவன் கள்ளுடன், பலிகளும் சேர்த்து மன்றத்துத் தெய்வத்திற்கு இட்டு வணங்கும் வழக்கம் இருந்தது என்பதை,

---

159 குறுந். 263: 4.
160 அகம். 309: 4 - 6.
161 பட். பா. 180 - 182.

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடி
பலிக்கள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்தலை மன்றத்து
விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர்"[162]

என்னும் நற்றிணைப் பாடலடிகளால் உணரலாம்.

நெல்லால் செய்த கள்ளினை முதலில் தெய்வம் வாழ்கின்ற மலைக்குப் படைத்தச் செய்தியை,

"பாப்புக் கடுப்புஅன்ன தோப்பி வான்கோட்டுக்
கடவுள் ஓங்கு வரைக்கு ஓக்கி"[163]

என்ற அகப்பாடலில் தலைவி கூற்றிலிருந்து அறியலாம்.

இவ்வாறு இறைவனிடமிருந்து நன்மைபெற வேண்டியும், தெய்வம் வருத்துதல் போன்ற பல்வேறு காரணங்களுக்காக தெய்வத்திற்கு பலியிடுதல் என்ற சடங்கினையும் சங்ககாலத் தமிழர்கள் மேற்கொண்டனர். இக்காலத்திலும் பலியிடும் வழக்கம் நடைமுறையிலுள்ளதை நாம் காணலாம்.

## நிறைவுரை

சங்க காலம் முதற்கொண்டு தமிழர்கள் கடைப்பிடித்து வரும் பல்வேறு நம்பிக்கைகளையும், சடங்குகளையும் நாம் இலக்கியங்கள் வாயிலாக கண்டு கொள்ள முடிகிறது. நம்பிக்கை என்பது மனிதனின் மூன்றாவது கை என்பர். இந்த நம்பிக்கைகளும், சடங்குகளும் மனித வாழ்வை வழிநடத்திச் செல்பவையாக காணப்படுகின்றன. பண்டையத் தமிழர்களின் பழக்க

[162] நற்றி. 293: 1- 4.
[163] அகம். 343: 7 - 8.

வழக்கங்களும், நம்பிக்கைகளும், சடங்குகளும் இன்றைய சமுதாயத்திலும் இருப்பதை நாம் உணரமுடிகிறது. மேலும் திருமணச்சடங்கில் இக்காலத்தைப் போன்றே அக்காலத்திலும் அழகு செய்தலும், விருந்தும் சிறந்த இடத்தைப் பெற்றிருந்த நிலையை அறியமுடிகிறது. பிற சடங்குகள் அனைத்துமே வேறுபடுகின்றன. காலத்திற்கேற்ப சடங்குகள் மிகுந்தும், குறைந்தும் இடம் பெற்றிருக்கலாம் என கருத முடிகிறது. மணமான பெண்களுக்கும், மணமாகாத பெண்களுக்கும் உள்ள வேறுபாட்டைக் காட்டவே சிலம்புகழி நோன்பும், பூச்சூடல் சடங்கும் இடம் பெற்றதாக கருத முடிகிறது.

திருமணங்கள் நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றி வளர்ந்திருக்க வேண்டும். பூவும், மணமும் போன்று பொலிந்து வாழ வேண்டுமென்பதும், நெல்லைப் போன்று பெருகி குடும்பத்தை வளர்க்க வேண்டுமென்பதும் வாழ்த்துவோரது நம்பிக்கையாக இருக்கலாம். பூச்சொரிந்து வாழ்த்துதல் இரண்டறக் கலக்கும் தன்மையையும், நெற்சொரிதல் குடும்ப வளர்ச்சி விருப்பத்தையும் காட்டுவதாகக் கொள்ளலாம். இவ்வாறு பல்வேறு நம்பிக்கையின் அடிப்படையில் சடங்குகள் தோற்றம் பெற்று வளர்ந்திருப்பதை இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

முன்னுரை

குடும்பம்

குடும்பம் உருவாகக் காரணங்கள்

குடும்ப உறவு முறைகள்

தந்தைவழி குடும்ப முறை

தாய்வழித் தலைமை உறவுகள்

தனிக்குடும்பம்

கூட்டுக் குடும்பம்

களவு வாழ்க்கை

இயற்கைப் புணர்ச்சி

அம்பல், அலர்

இற்செறித்தல்

அறத்தொடு நிற்றல்

அறத்தொடு நிற்கும் பண்பாடு

தோழியின் இலக்கணம்

தோழியின் அறிவாற்றல்

தோழியின் அன்பு

தோழி தலைவனுக்குக் கூறும் அறிவுரை

பகல், இரவுக் குறிகள்

நொதுமலர் வரைவு

உடன்போக்கு

உடன்போக்கிற்கான காரணங்கள்

உடன்போக்கினால் அறியலாகும் செய்திகள்

கற்பு-விளக்கம்

தலைவியின் பெற்றோர் வரைவு மறுத்தல்

பெற்றோர் வரைவு மறுக்கக் காரணங்கள்

களவுக்காதல் திருமணம்

ஒரே குடிக்குள் மணத்தல்

வேறுகுடிகளுக்குள் மணத்தல்

ஏறுதழுவல் மணம்

பொருள்கொடுத்து மணத்தல்

உடனிருந்து உழைத்து மணத்தல்

தலைவியால் தலைவன் சிறப்படைதல்

கற்புடைய மனைவியால் செல்வவளமடைதல்

கற்புடைய மகளால் தந்தை போற்றப்படல்

மனைவாழ்க்கை

சமையற்கலை

களிமண் தேய்த்து நீராடுதல்

முல்லைப்பூ சூடும் மரபு

தாய்மைப் பேறு

தலைவியின் தாயுள்ளம்

தொகுப்புரை

## முன்னுரை

இலக்கியம் வாழ்விலிருந்து எழுவதும், வாழ்க்கைக்கான சாதனைகளும் ஆகும். சமூக வாழ்க்கையின் மையமாகக் காணப்படுவது குடும்பம் என்று கொள்ளலாம். குடும்பம் என்பது சமூகத்தின் ஒரு சிறிய அலகாகும். மனிதனின் அடிப்படைப் பண்புகளாகிய அன்பு, காதல், நட்பு, தோழமை, பாதுகாப்பு போன்றவற்றை வளர்க்கவும், நெறிப்படுத்தவும் குடும்பம் காரணமாக அமைகின்றது. குடும்ப வாழ்வின் தோற்றத்திலிருந்து தான் சமூக வாழ்வு நெறியின் அடித்தளம் அமைகிறது. சமூகம் அழகியல் தன்மையுடன் அமைவதற்கு குடும்பம் காரணமாகிறது. இவ்வாறு சமூகத்தின் அடிப்படை அலகாகிய குடும்பத்திற்கு உறவுமுறைகள் முக்கியமான ஒன்றாகும். தமிழிலக்கியம் கூறும் அகத்திணைச் செய்திகள் குடும்ப வாழ்விற்கு அடித்தளம் எனலாம். அகவாழ்வாகிய குடும்பவாழ்வானது களவு, கற்பு, திருமணம் போன்ற செயல்களின் மூலம் உறவு முறைகள் வலுவடைகின்றன. மக்களைப் பேணல், விருந்தோம்புதல், ஈகை, ஒப்புரவறிதல் போன்ற செயல்கள் குடும்ப உறவுகளை வலுப்படுத்துகின்றன. குடும்பம் எல்லாச் சமூகங்களிலும் உள்ள அடிப்படையான அமைப்பு. குடும்பத்தினின்று உறவு ஏற்படுகிறது. சமூகத்தின் பல்வேறு பிரிவுகட்கும் குடும்பம் அடிப்படையானது. இக்குடும்பம் சமூக வழக்காலும், சமயத்தாலும் கட்டுப்படுத்தப்படுகிறது என குடும்ப அமைப்பிற்கு “தமிழ்க் கலைக் களஞ்சியம்” விளக்கமளித்துள்ளது.

## குடும்பம்

குடும்பம் என்பது இயக்கமுள்ள சித்தாந்தத்தைக் குறிக்கிறது. அது என்றைக்கும் இயங்காதிருப்பதில்லை. குடும்பம் என்பது தொன்மையானதும்,

எல்லாக் கால சமுதாயங்கள் சார்ந்ததும் ஆகும். பல்வேறு வகைப்பட்ட பரிணாமங்களையும், பெற்று வளர்ந்து வருவதை குடும்பம் என்கிறோம். பல குடும்பங்களைக் கொண்டது ஒரு சமுதாயம். சமுதாயத்தில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டவர்களைக் கொண்ட சிறிய அலகு குடும்பம் எனக் கருதப்படுகிறது. குடும்ப உறுப்பினர்களைக் கொண்டு உறவுமுறைகள் பகுக்கப்பட்டுள்ளன. அப்படி பகுக்கப்பட்டவர்களின் வாழ்க்கை நெறி முறைகளிலிருந்து நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு ஆகியவை தோன்றி வளர்ந்து வந்துள்ளன.

"குடும்பம் காலந்தோறுமான மாற்றங்களைக் கொண்டதாக, சமுதாயச் சூழலுக்கேற்ற வடிவைப் பெற்று வளர்ந்து வந்துள்ள ஒரு சமுதாயப் பிரிவாக தொடர்ந்து இயங்கி வருகின்றது"[1].

சங்க இலக்கியங்களில் குடி என்னும் சொல்லே குடும்பத்தைக் குறிக்கும் சொல்லாக இடம் பெற்றுள்ளது. இந்தச் சொல்லானது குலம், குடிமக்கள், ஊர், குடிமகன், குடியிருப்பு என்ற பொருட்களுடன் 'குடும்பம்' எனும் பொருளிலும் ஆட்சி பெற்றுள்ளது. இதனை,

> ''கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய
> புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்''[2]

என்ற அகப்பாடல் வரியிலுள்ள 'குடி' என்ற சொல் குலத்தைக் குறிப்பதற்காக பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும்,

---

[1] மாதையன், பெ, சங்க இலக்கியத்தில் குடும்பம், பக். 50.
[2] அகம். 184: 1 - 2.

“தொல் இசை நட்ட குடியொடு தோன்றிய”[3]

“வீவு இல் குடிப்பின் இருங்குடி ஆயரும்”[4]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் இக்கருத்தைச் சுட்டிக்காட்டுகின்றன.

குடிமக்கள் என்ற பெயரில் இடம் பெற்றுள்ளதை,

“குடி பதிப்பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்”[5]

என்ற அகப்பாடல் குறிப்பிடுகிறது. இக்கருத்தினை கலித்தொகை [34; 78] போன்ற பாடல்களும் எடுத்தியம்புகின்றன.

குடியிருப்பு என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளதை நற்றிணை [108; 135; 285] போன்ற பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

“திணை என்பது நிலம், இடம், பகுதி, மனை, வீடு, இனம், சாதி, குலம், குடும்பம், நடத்தை என்ற பொருள்களையும் உடையது”[6] என ஆசிரியர் மாதையன் குறிப்பிட்டுள்ளார். திணை என்பது பின்னாளில் ஒழுக்கம் எனும் பொருளுக்கு மாறி வந்தாலும், ஆரம்ப காலத்தில் குடும்பம் எனும் பொருளோடு தொடர்புடையதாக இருந்ததாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

## குடும்பம் உருவாகக் காரணங்கள்

ஆரம்ப கால மனித சமுதாயம் வரையறைகளற்ற சமுதாயமாக இருந்துள்ளது. “யார் யாருக்கு யார்” என்ற உறவு நிலையற்றதாகவும், தெரியாததாகவும் இருந்துள்ளது. இதற்கான அடிப்படைக் காரணம் புணர்ச்சி

---

[3] கலித். 104: 5.
[4] மேலது, 105: 7.
[5] அகம். 77: 6.
[6] மாதையன், பெ. சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 62.

உறவிலிருந்த வரையறையின்மையே ஆகும். இதனால் தாய், தந்தை, உடன்பிறந்தோர், மாமன், மாமி, பெரியப்பா, சித்தப்பா, பெரியம்மா, சின்னம்மா, பாட்டன், பாட்டி, கணவன், மனைவி, மகன், மகள் என்பன போன்ற உறவுகளற்றதாகவே இருந்துள்ளது. இந்நிலைக்குக் காரணமாக இருந்தது வரையறையற்ற புணர்ச்சிச் சுதந்திரமேயாகும்.

இந்த புணர்ச்சி சுதந்திரம் சுருங்கிக் கொண்டு வந்ததன் விளைவாக ஏற்பட்ட கடைசி உறவு நிலையே 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற நிலையாகும். இவ்வாறு சுருங்கிக் கொண்டே வந்த புணர்ச்சிச் சுதந்திரம் ஒருவனும், ஒருத்தியுமாக அமைந்த குடும்பம் தோன்ற காரணமாக இருந்துள்ளது.

## குடும்ப உறவு முறைகள்

அடிப்படையில் குடும்பம் என்பது கணவன், மனைவி என்ற இரு உறவுகளில் அமைவதாகும். இது காலப்போக்கில் இரத்த உறவுடைய உறுப்பினர்களான மகன், மகள், உடன்பிறந்தோர், பேரன், பேத்தி எனும் நிலைகளில் விரிவடைந்துச் செல்வதாகும். சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவன் மற்றும் தலைவியே முதன்மை உறுப்பினர்களாக குறிப்பிடப்பட்டுள்ளனர். தலைவன், தலைவி எனும் இருவர் சார்ந்த இரண்டு குடும்பங்களின் இரு அலகுகளாகத் தந்தை, தாய், மகள், மகன் எனும் உறவுகளைக் காணலாம். இதனை,

> ''ஞாயும், ஞாயும் யாராகியரோ
> எந்தையும் நுந்தையும் எம்முறைக்கேளிர்''[7]

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.

---

[7] குறுந். 40: 1 - 2.

**மகன் - உறவு முறை**

மகன் என்ற உறவு முறை குறித்த சொற்கள் சங்க இலக்கியத்தில் அதிக இடங்களில் இடம் பெற்றுள்ளன. தமையன்மார் எனப் பொருள்படும் தன்னைமார், தன்னையர் என்ற உறவுமுறைச் சொற்கள் அகத்திணைப் பாடல்களிலும், புறத்திணைப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளன. இந்த உறவுமுறைச் சொற்களுடன் மகன் பற்றிய குறிப்புகளும் இடம்பெற்றுள்ளன. இதனை [குறுந்தொகை 272; ஐங்குறுநூறு 365; புறநானூறு 337; 350] போன்ற பாடல்கள் விளக்குகின்றன. மகன் பற்றியதான குறிப்பினை,

> ‘‘புதல்வன் நடுவணனாக நன்றும்
> இனிது மன்றவர் கிடக்கை’’

எனவும்,

> ‘‘புதல்வன் கவைஇய தாய் புறம் முயங்கி’’

என்ற பாடலும்

> ‘‘வாணுதலரிவை மகன் முலையூட்ட
> தானவள் சிறுபுறம் கவையினள்’’

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் [401; 402; 404] சுட்டுவதால் மகன் பற்றிய குறிப்பினை அறிய முடிகிறது. பகைவரும் விரும்பும் புதல்வரைப் பெறுதல் இவ்வுலகத்தில் புகழையும், இறப்புக்குப் பின் மறுமையுலக வாழ்வையும் தரவல்லது என அகநானூற்றின் 66 வது பாடல் விளக்குகின்றது.

இவ்வாறு மகன் பிறப்பினைக் குறித்து முதன்மையாகப் பேசப்பட்ட சங்ககால வாழ்க்கையில் பெண் குழந்தை பற்றிய குறிப்பு மிகுதியாக இடம் பெறவில்லை.

**மகள் - உறவு முறை**

சங்க இலக்கியத்தில் பெண் மகவு பிறப்பு பற்றிய குறிப்பு மிக அரிதாகவே இடம் பெற்றுள்ளது. ஐங்குறுநூற்றுப் பாடலொன்றில் குறவன் வரம் வேண்டி மகள் பெற்றதைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இதனை,

> ''குன்றக் குறவன் கடவுட் பேணி
> இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்''[8]

எனக் குறிப்பிடுகிறது.

பெண் குழந்தையைத் தலைவி ஈன்றதாக எங்கும் குறிப்பிடவில்லை. நற்றிணைப் பாடலில்,

> ''பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்த''[9]

என்ற குறிப்பு உள்ளது. தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவி இடைச்சுரத்தின்கண் தங்கினாள். அப்போது ''மகளிர்ப் பயந்த மனைகெழு பெண்டிர்'' அவளைக் கண்டு வருந்தியமை சுட்டப்பட்டுள்ளது. இதனை,

> ''எல்லிடை அசைந்த கல்லென் சீறூர்ப்
> புனை இழை மகளிர்ப் பயந்த
> மனைகெழு பெண்டிர்க்கு நோவுமார் பெரிதே''[10]

என்ற பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. பொதுவாக பெண் மக்களைப் பெற்ற பெண்டிர் சுட்டப்படுகின்றனர். தலைவி பெண் குழந்தைப் பெற்றதாக குறிப்பிடவில்லை.

''பெண் குழந்தைகளைப் பெற வேண்டுமென்று சிலர் விரும்பினர் என்பதற்குரிய சான்றுகள் மகாபாரதத்தில் கிடைக்கின்றன. முழுநிலவின்

---

[8] ஐங். 257: 1 - 2.
[9] நற். 330: 9.
[10] ஐங். 382.

இரண்டாம் நாளில் கடவுள் வழிபாடு செய்தால் பெண் குழந்தைகளைப் பெறலாம் என அக்காலத்தவர் நம்பினர். அவ்வழிபாட்டின் பயனாக புகழ்மிக்க பெண் குழந்தைகள் பிறந்தனர்''[11] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**தங்கை உறவு முறை**

தங்கை என்ற சொல் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் இடம் பெற்றுள்ளது. தங்கை என்பதை கானவர் தங்கை என குறிப்பிட்டுள்ளமையை,

"வால்நிணப் புகவின் கானவர் தங்கை''[12]

என்ற அகப்பாடல் சுட்டுகிறது. இதில் வேடர்களின் தங்கையும், கொடிச்சியுமாகிய தலைவியை மணந்து கொள்ள தோழி தலைவனை வேண்டுவதாக அமைந்துள்ளது.

குறுந்தொகைப் பாடல் 392: 5 "களைஞர் தங்கை'' என குறிப்பிடுகிறது. இப்பகுதியில் தலைவி தன்னுடைய தமையன்மார்களால் பாதுகாக்கப்படுவதால் அவளை குறியிடத்தில் காணமுடியாது என தோழி குறிப்பிடுகிறாள்.

தங்கையர் எனும் சொல் "செல்வத்தங்கையர்'' என அகநானூற்றுப் பாடல் 320-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. தழையாடை அணிந்த தங்கையர், தமையன்மார்கள் பிடித்து வந்த மீன்களை தெருவில் சென்று விற்றனர் என்பதற்கு இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும், தங்கை எனும் சொல்லுக்கு எயினர் தங்கை என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. இதனை,

---

[11] பாஸ்கரதாஸ், ஈ. கோ, அகப்பொருள் பாடல்களில் தலைவி, பக். 157.

[12] அகம். 132: 5.

"கொலை வில்எயினர் தங்கை"[13]

எனவும்,

"முளவுமா வல்சி எயினர் தங்கை"[14]

என்ற பாடலடிகளால் உணரலாம். தோழியானவள் எயினருக்குத் தங்கையும், எயிற்றியாகிய என் தோழியும் என குறிப்பிடுகிறாள். நுங்கை எனும் சொல்லுக்கு அகநானூறு 386: 12-வது அடி தங்கை எனப் பொருள் கூறுகிறது. இவ்வாறு தங்கை என்ற உறவுமுறைச் சொல் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் பதிவாகியுள்ளன.

## தந்தை வழி குடும்ப முறை

சங்க இலக்கியத்தில் தந்தை வழி குடும்ப உறவு முறையே மிகுதியாக பேசப்பட்டுள்ளது. இதனை,

"நள்ளென் கங்குற் கள்வன்போல
அகன்றுறை யூரனும் வந்தனன்
சிறுந்தோன் பெயரன் பிறந்தமாறே"[15]

என்ற நற்றிணைப் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

'அகன்பெருஞ் சிறப்பின் தந்தை' பெயரன் என ஐங்குறுநூற்றின் (403: 3) வது பாடலடி குறிப்பிடுகிறது.

"வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"[16]

---

13 ஐங். 363: 2.
14 மேலது, 364: 1.
15 நற். 40: 10 - 12.
16 குறுந். 135.

என்ற பாடல் வழியாக மகளிர் மனையுறை மகளிரான நிலையில் ஆண்கள் வினைஞர்களாக, தொழில் வழியாக வந்த பொருட்செல்வத்தால் உடைமையாளர்களாக மாறினர். இந்நிலையில் தாய்வழி உரிமைகள் மாறி, ஆண்வழிச் சமுதாயம் கட்டமைக்கப்பட்டுள்ளது. இக்கருத்தினை ஐங்குறுநூற்றுப் பாடல்,

> "ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர்போல
> மனைக்கு விளக்கு ஆயினள் மன்ற கனைப்பெயர்
> பூப்பல அணிந்த வைப்பின் புறவு அணிநாடன் புதல்வன் தாயே"[17]

என்பதன் மூலம் அறியலாம். தலைவன் குடி வளர்வதற்கு ஏதுவான மகனைப் பெற்றவளாதலின் புதல்வன் தாய் என மகனை முன்னிறுத்தி மகன் வழியாகவே குறிப்பிடப்பட்டுள்ளனர். இக்கருத்தினை (ஐங் 90: 4; 442: 5; அகம் 6: 13) என்ற பாடல்களும் சுட்டிக்காட்டுகின்றன.

இவ்வாறு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நிலப்பெண்களும் தந்தையை முன்னிறுத்தியே குறிப்பிடப்பட்டுள்ளனர். பெண்களும் தம்மை ஆண்களை முன்னிலைப் படுத்தியே கூறும் நிலையினையும் காணலாம்.

குறிஞ்சி நிலப்பெண்களை குறவர் மடமகள் என குறிப்பிட்டுள்ளனர். இதனை,

> "குறவர் மடமகள்"[18]

என்ற கலித்தொகைப் பாடல் சுட்டுகிறது. இக்கருத்தினை நற்றிணைப் பாடல் 44: 12 வது அடி "நன்மலை நாடன் காதல் மகள்" என குறிப்பிடுகிறது.

---

[17] ஐங். 405.
[18] கலி. 39: 16.

முல்லை நிலப் பெண்களை ஐங்குறுநூற்றுப் பாடல் 430: 13 “கான்கெழு நாடன் மகள்” என குறிப்பிடுகிறது. மேலும் இத்தகவலை “புன்புலநாடன் மடமகள்” என ஐங்குறுநூற்றுப் பாடல் 421: 3 சுட்டுகிறது.

மருதநில மகளிர் கழனியூரன் மகள் எனவும், யாணன் ஊரன் மகள் எனவும் அழைக்கப்பட்டனர்.

நெய்தல் நில மகளிரை மீனெறி பரதவர் மகள், நுண்வலைப் பரதவர் மடமகள் எனவும் ஆண்களை முன்னிலைப் படுத்தி சுட்டப்பட்டுள்ளதை சங்க இலக்கியங்களால் உணரமுடிகிறது.

குழந்தைகளை ஈன்று பாதுகாத்ததைத் தவிர வேறு எதுவும் தாய்க்கு இல்லாத சூழலும், சான்றோனாக்கும் உரிமை தந்தைக்கு இருந்ததையும் புறப்பாடல் எடுத்தியம்புகிறது.

இதனை,

“ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே”[19]

என்ற குறிப்பினால் அறியலாம். இவ்வாறு ஆண்வழியும், தந்தைவழியும் எல்லா சமுதாயச் செயல்பாடுகளும் நிகழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

## தாய்வழித்தலைமை உறவுகள்

தந்தைவழிச் சமுதாயம் மேலாதிக்கம் பெறத் தொடங்கிய சங்ககாலத்தில் தாய் தலைமை சமுதாய எச்சங்களும் இருந்துள்ளதைக் காணமுடிகிறது. குறிப்பாக, சொத்துரிமை தாய்வழிப்பட்டதாக இருந்துள்ளது.

---

[19] புறம். 312.

அகப்பாடலில் குறிப்பிடப்படுகின்ற 'தித்தன்', உறந்தையை ஆண்ட முற்காலச் சோழ மன்னன். இவனது மகளே ஐயை. இம்மன்னன் ஐயை தந்தை, என மகளை முன்னிறுத்தியே அழைக்கப்பட்டுள்ளான். இதனை,

> "இழைஅணி பணைத்தோள், ஐயை தந்தை
> மழைவளந் தரூஉ மாவன் தித்தன்
> பிண்ட நெல்லின் உறந்தை"[20]

என்ற அகப்பாடல் எடுத்தியம்புகிறது.

அஃதை தந்தை என மகள் வழிச்சுட்டப்பட்டுள்ளதை,

> "அம்கலுழ்மாமை, அஃதை தந்தை,
> அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்"[21]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இதில் அஃதை என்பவளுடைய தந்தை தலைமை பொருந்திய யானையையும், வெல்லும் போரினையும் உடைய சோழன். இங்கு சோழ மன்னன் மகளை முன்னிறுத்தியே குறிப்பிடப்பட்டுள்ளான்.

> "விண்டுப் புரையும் புணர்நிலை நெருங்கூட்டுப்
> பிண்ட நெல்லின் தாய்மனை"[22]

என்ற நற்றிணைப் பாடல் தாயினை முதன்மையாகக் கொண்டு தாய்மனை எனக் குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம்.

அகநானூற்றுப் பாடல் (310: 7 - 8) தலைவியின் வீடு தாய்மனை, தாயுடை நெடுநகர் என்று அழைக்கப்படுவதால் தாய்வழிச் சமுதாயத்தின் எச்ச வெளிப்பாடாகவே கருதமுடிகிறது.

---

[20] அகம். 6: 3 - 5.
[21] மேலது, 96: 12.
[22] நற். 26: 3 4.

உடன்போக்கில் சென்ற தன் மகளின் வரவை எதிர்பார்த்திருக்கும் நற்றாய்,

> ‘‘ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்
> எம்மனை முந்துறத் தருமோ
> தன்மனை உய்க்குமோ? யாது என்பன குறிப்பே’’[23]

என்ற பாடலில் கயமனார் வெளிப்படுத்தியுள்ளார். இதில் எம்மனை என்று குறிப்பிடுவதால் தாய்வழிச் சமுதாயம் புலப்படுகிறது.

வரலாற்றுக்கு முற்பட்ட திராவிடர்கள் தாய்வழிக் குடும்பம் என்ற முறைப்படி வாழ்ந்தனர் என்பது மானுடவியல் அறிஞர்களின் கருத்தாகும். தாய்வழி முறை இருந்தமைக்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் வெளிப்படையாகக் குறிப்பிடப்படவில்லை. எனினும் தாய் வழி சமூக அமைப்பிற்குத் துணைச் சான்றாக தாய், செவிலித்தாய், தோழி முதலியோர் கூற்றுக்குரியவர்களாகக் கூறப்பட்டுள்ளனர். தந்தைக்கும், தனயனுக்கும் கூற்றுகள் இல்லை என்பது சிந்திக்கத்தக்கதாகும்.

### தனிக்குடும்பம்

தாய், தந்தை, மகன் மகள் எனும் உறுப்பினர்களைக் கொண்டது தனிக்குடும்பம். இதனைச் சங்க இலக்கிய அகப்புறப் பாடல்கள் மூலம் அறியலாம். கணவன், மனைவி எனும் இருவரில் தொடங்கும் குடும்பம் மகன், மகள் என விரிந்து, தனிக்குடும்பமாய் இருந்ததைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. ஐங்குறுநூற்றின் முல்லைத் திணைப் பாடல்களில் தலைவன், தலைவி இருவரும் மகனுடன் இருந்த நிலையை மட்டும் காண முடிகிறது.

---

[23] அகம். 195: 17 - 19.

கணவனும், மனைவியும் கருத்தொருமித்தும், ஒத்தஅன்புடனும் உலகம் போற்ற வாழ்வது இல்லறத்துக்கு அடிப்படையாகும். எனவே தன் மகளும், மருமகனும் அவ்வாறு வாழ்வதைக் கண்ட செவிலித்தாய் மகிழ்ந்து கூறியதை,

''மறிஇடைப் படுத்த மான் பிணைபோல
புதல்வன் நடுவணன் ஆக, நன்றும்
இனிது மன்ற அவர் கிடக்கை''[24]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலால் அறிய முடிகிறது.

ஐங்குறுநூற்றின் செவிலிக் கூற்று பத்தில் இடம் பெற்றுள்ள கடிமனை சென்று வந்த செவிலி மகிழ்ச்சி பொங்க நற்றாய்க்கு உரைத்த கூற்றில் அமைந்துள்ள பத்துப் பாடல்களும் தாய், தந்தை, மகன் எனும் மூவரின் மகிழ்வான நிலையைச் சுட்டுவதாகவே அமைந்துள்ளன. இதனை,

''மாலை முன்றில் குறுங்காற் கட்டில்
மனையோள் துணைவி ஆக, புதல்வன்
மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்
பொழுதிற்கு ஒத்தன்று மன்னே
மென் பிணித்து அம்ம பாணனது யாழே''[25]

என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

மகள் வீட்டிற்குச் சென்ற செவிலித்தாய் தலைவியும், அவள் கணவனும் தன் மகனோடு கூடியிருந்து பாடல் கேட்டு இன்புற்றிருந்த நிலையை விளக்குகிறது. தாய், தந்தை, தலைவி, தமையன்மார் இவர்கள் சேர்ந்து தனிக்குடும்பமாக வாழ்ந்த நிலையினைக் குறுந்தொகைப் பாடல் எடுத்தியம்புகிறது.

---

[24] ஐங். 401: 1 - 3.
[25] ஐங். 410: 1 - 5.

கரிய கிளைகளையுடைய புன்னைமரங்கள் அடர்ந்த அழகிய சோலையில் யாருமின்றி தலைவி தனிமைப்பட்டிருக்கத் தலைவர் இன்னும் வரவில்லை. பல மீன்களை வேட்டையாடுதலையுடைய தன்னுடைய தமையன்மார்கள் ஏறிச்சென்ற மீன்பிடிபடகுகள் மீண்டு வந்தன என தலைவி கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

"கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில்புலம்ப
இன்றும் வரார், வரூஉம்
பல்மீன் வேட்டத்து என்னையர் திமிலே"[26]

என குறுந்தொகை சுட்டுகிறது. இவ்வாறு உறுப்பினர் அடிப்படையிலும், உடைமைகள் அடிப்படையிலும் பல்வேறு தனிக்குடும்ப காட்சிகளைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

## செல்வ தனிக்குடும்பம்

நல்ல செல்வ வளமிக்க குடும்பங்கள் காணப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. நல்ல செல்வக் குடும்பத்தில் பிறந்த தலைவனின் பெரிய வீடு காவலரையுடையது. காவல் மணி ஒலிக்கிறது. வீட்டின் முன் தென்னங்கீற்றால் வேய்ந்த பந்தல். பந்தலில் மணல் பரப்பப்பட்டிருக்கிறது. அங்கு மெல்லிய அணையின் மீது புதல்வன் செவிலியுடன் தூங்குகிறான். எண்ணெய் நீராட்டப்பெற்ற மனைவி ஈரிமையும் பொருந்த உறங்குகிறாள். தலைவனும், தன் தந்தையின் பெயரனாகிய மகன் பிறந்ததால் இடை யாமத்தில் வருகிறான். என்பதை,

---

[26] குறுந் 123: 3 - 5.

"நெடுநர் ஒள் மணிகடி மனை இரட்ட
குரை இலைப்போகிய விரவு மணற்பந்தர்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே"[27]

என குறிப்பிடுகிறது.

இத்தனிக் குடும்பக்காட்சியில் தலைவனின் செல்வவளமும், மகப்பேற்றை மகிழ்வாகக் கொள்ளும் சிறப்பும் புலப்படுகிறது. பரத்தையற் பிரிந்த தலைவன் தன் செயலுக்கு நாணி கள்வன் போல புகுகின்ற காட்சி அவனது நாணுடமையைப் புலப்படுத்துகிறது. மேலும் இக்காட்சியினின்று மகப்பேறெய்தியவுடன் மகவை வளர்க்கும் பொறுப்பை செவிலி ஏற்றுக்கொள்வதும், தந்தையின் பெயரை மகனுக்கு இடும் பழக்கமுள்ளதையும் அறியலாம்.

செல்வ வளமிக்க குடும்பங்களில் மக்களைச் செல்வச் செழிப்புடன் வளர்த்துவதைக் காணலாம். செல்வப் பிறப்பில் பிறந்த தலைவி சிறுபொழுது பந்தாடினாலும் சோர்ந்து போவாள் என்று செவிலித்தாய் கூறுவதிலிருந்து மகளைச் செல்லமாக வளர்த்ததை அறியலாம்.

தலைவியினது வீடு அழகியவேலைப்பாடுகள் கொண்ட செல்வ வளம் பொருந்திய மாளிகை ஆகும். இதனை,

"ஏதிலன் பொய்ம்மொழி நம்பி, ஏர் வினை
வளம் கெழு திருநகர் புலம்பப் போகி
வெருவரு கவலை ஆங்கன், அருள்வர"[28]

என அகப்பாடல் குறிப்பிடுகிறது.

---

[27] நற். 40.
[28] அகம். 117: 3 - 5.

இதன் மூலம் சங்க காலத்தில் செல்வ வளமிக்க குடும்பங்கள் இருந்ததை நாம் அறியமுடிகிறது.

### கூட்டுக்குடும்பம்

பாட்டன், பாட்டி ஆகிய உறவின் முறைகளும், மாமன், மாமி அத்தை ஆகிய குடிவழி உறவுகளும் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. இதனால் கூட்டுக் குடும்ப முறையை விட தனிக்குடும்ப முறை போற்றப்பட்டதை அறியலாம்.

ஒக்கூர் மாசாத்தியார் பாடிய சங்க புறப்பாடலில் தன் தந்தை, கணவன், இளமகன் எனும் மூவரையும் ஒரு தாய் போருக்கு அனுப்பிய சூழல் பாடப்பட்டுள்ளது. முதல் நாள் போரில் தந்தை இறக்கிறார்; அடுத்தநாள் போரில் கணவன் இறக்கிறான்; மூன்றாம் நாள் போரில் தனது மகனை அனுப்பி மூவரும் இறந்து விடுகின்றனர். இச்செய்தியைப் புறம் 279-வது பாடல் விளக்குகின்றது. மேலும்

> ‘‘வாள்தக வைகலு முழக்கும்
> மாட்சி யவரிவள் தன்னை மாரே’’[29]

என்ற புறப்பாடல்கள் சுட்டுகின்றன. இந்நிகழ்வு தமையன்மார், தாய் தந்தையருடன் இருந்த இருப்பு நிலையினை வெளிப்படுத்துகிறது. இவை கூட்டுக் குடும்ப அமைப்பின் வெளிப்பாடுகளாகத் திகழ்கிறது. இருப்பினும் சங்ககால இலக்கியங்களில் கூட்டுக்குடும்பம் குறித்த செய்திகள் விரிவாக காணப்படவில்லை.

---

[29] புறம். 342: 14 - 15.

## செல்வவளமிக்க பெருங்குடும்பம்

சங்க இலக்கியத்தில் செல்வ வளத்துடன் கூடியபெருங்குடும்பங்கள் இருந்த செய்தியையும் அறிய முடிகிறது. பகல் முழுவதும் அடையா வாயிலையுடைய இல்லத்தில் விருந்தினர் வந்து விருந்துண்டுச் செல்வர். அவ்வேளையில் தலைவனும் விருந்தினர் போல், பலருடன் வந்து தலைவியை நுகர்ந்து செல்வான். ஒருநாள் மாலைக் காலத்தில் விருந்தினரை வெளியில் இருக்கின்றீர்களோ? எனக்கேட்டு வாயிலை அடைக்க முற்படுகின்றாள். அப்போதும் தலைவன் வரவில்லையே என வருந்தும் தலைவியின் ஏக்கப் பெருமூச்சு பெருங்குடும்பத்தினின்று எழும் ஏக்கப் பெருமூச்சாகக் கொள்ளலாம். இதனை,

> “நள்ளென வந்த நார்இல் மாலை,
> பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
> வருவீர் உளீரோ? எனவும்
> வாரார் - தோழி - நம் காதலோரே”[30]

என்ற குறுந்தொகைப் பாடல் புலப்படுத்துகிறது.

இவ்வாறு விருந்தினர்களுடன் தலைவனும் வருவான் என்பதால் பெருங்குடும்ப பெருமை அறியப்படுகிறது.

## விரிந்த குடும்பம்

ஒரே இல்லத்தில் தங்காமல் அண்மையில் தங்கிப் பொதுவான பணியில் அனைவரும் ஒன்றாக ஈடுபடும் உறுப்பினர்களைக் கொண்டது விரிந்த குடும்பம்.

[30] குறுந். 118.

இக்காலத்திலும் சிற்றூர்களில் உறவு முறையில் அமைந்த தனிக்குடும்பங்களின் தொகுதியைக் காணலாம். அறுவடை, நீர் பாய்ச்சுதல் போன்ற பணிகளைச் சேர்ந்து முடிப்பர். இவர்களை 'கொத்து' என்ற பொதுப் பெயரால் அழைப்பர்.

உமணர்களின் கணநிலை (மிக்கக் கூட்டம்) வாழ்க்கையை விரிந்த குடும்ப வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாக கூறலாம். இச்செய்தியை,

''உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி
அதர்படு பூழிய சேண்புலம் படரும்
ததர்கோல் உமணர் பதிபோகுநெடுநெறிக்
கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ''[31]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

வணிகத்தின் பொருட்டு சேர்ந்து செல்லும் குடும்ப வாழ்க்கை விரிந்த குடும்ப வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாகும். மகளிர் வண்டியோட்டுவர். வலியவர் எருதுகளைக் சேர்த்துக் கொள்வர். வண்டி சேற்றில் அழுந்தினால் பகடு பற்றி கரை சேர்ப்பர் என்பதை,

''எழு உப் புணர்ந்தன்ன பரூஉக்கை நோன்பின்
மாரிக் குன்றம் மழை சுமந்தன்ன
ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்
..........................................................................
மகவுடை பகடூஉப் பகடுபுறம் துரப்ப''[32]

என பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

---

[31] அகம். 390: 1 - 4.
[32] பெரும். 48: 55 வரி.

## களவு வாழ்க்கை

களவு என்பது ஓர் ஆணோ, பெண்ணோ தங்கள் இயல்பான பருவத்தில் எழுகின்ற இன்ப நுகர்ச்சிக்குரிய எண்ணங்களை எத்தனை இடர்பாடு நேர்ந்த காலத்தும், எக்காரணத்தினாலும் வெளிப்படுத்தாது மறைப்பதாகும். ஆதலால் இது களவு எனப்பட்டது.

ஒரு நிலத்தின் கண்ணும், வெவ்வேறுபட்ட நிலத்தின் கண்ணும் உள்ள தலைவனும், தலைவியும் பால்வரை தெய்வத்தின் ஆணையால் எதிர்ப்பட்டு காணுதலே காதல், களவு எனத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார். இதனை,

> ‘‘ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
> மிக்கோனாயினுங் கடிவரை இன்றே’’[33]

என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

சமுதாயத்தில் ஏற்பட்ட மாற்றம் காரணமாகப் பெற்றோர் ஏற்பாடு செய்யும் திருமண முறையில் உடன்பாடு இல்லாத ஆணும், பெண்ணும் தமக்கான துணையைத் தாமே தெரிந்து கொள்ளும் இந்நிலையை ஊழ்வழிப்பட்டது என்கிறார் தொல்காப்பியர். ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் எதிர்ப்பட்டவழித் தோன்றும் இந்த காதல் வழிப்பட்டதான களவை,

> ‘‘வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல்
> ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
> நோக்குவ எல்லாம் அவையே போதல்
> மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்
> சிறப்புடை மரபினவை களவெனமொழிப’’[34]

---

[33] இளம்பூரணர் உரை, தொல். பொருள், நூற் 90.
[34] மேலது, நூற்: 97.

என வரையறைப் படுத்தியுள்ளார் தொல்காப்பியர்.

இடைவிடாது ஒருவரையொருவர் எண்ணுதல், மெலிதல் போன்றவற்றைக் களவொழுக்க வெளிப்பாடுகள் என்கிறார் தொல்காப்பியர். இந்தக் காதல் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியர் கூட்டம் என பல்வேறு நிலைகளில் நிகழும் நிலையும் தொல்காப்பியரால் கூறப்பட்டுள்ளது.

சமுதாயத்தில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து பழகும் வாய்ப்பு எப்போதும் ஏற்படும். இவ்வாறு சேர்ந்து பழகும் போது ஏற்படும் காமக் கூட்டமே களவு ஆகும். சங்க இலக்கியத்தில் தினைப்புனம் காத்தல், கடல் நீராடல், சோலையில் தங்குதல், சிற்றில் இழைத்து விளையாடுதல், குரவைக் கூத்தாடல் போன்ற நிகழ்ச்சிகள் களவுக்கு காரணமாக அமைகின்றதை அறியலாம்.

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் ஒருமனப்பட்டு தமரும், பிறரும் அறியா வண்ணம் மறைவிடத்தில் கூடிக்கலந்து இன்பம் நுகர்வது பற்றிய செய்திகள் களவு வாழ்க்கை எனப்படும். இக்களவின் போது தோழி அறத்தொடு நிற்கும் செயலில் ஈடுபடுகிறாள்.

### இயற்கைப் புணர்ச்சி

காதல் வயப்பட்ட தலைவியும், தலைவனும் உள்ளத்தால் இணைந்தது போல உடலால் இணையும் மெய்யுறு புணர்ச்சியையும் மேற்கொண்டுள்ளனர். இது இயற்கைப் புணர்ச்சி எனப்படும். இயற்கைப் புணர்ச்சியாகிய மெய்யுறுபுணர்ச்சி சங்ககால காதற் சமுதாயத்தில் இயல்பாக இருந்ததைச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

“கரந்த காமம் கைந்நிறுக்கல்லாது
நயந்து நாம் விட்ட நல்மொழி நம்பி
..............................................................................
சூர் மகள் மாதோ என்னும் என் நெஞ்சே”[35]

இக்கருத்தினை (குறுந்தொகை 40; 116; 119 நற்றிணை 8; 13; 39) போன்ற பாடல்கள் புலப்படுத்துகின்றன.

**அம்பல், அலர்**

அம்பல், அலர் எனும் இருசொற்களும் அகவாழ்வோடு மிக நெருங்கிய தொடர்புடையவை. சங்க இலக்கியங்களில் அம்பல், அலர் குறித்து பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றோடு தொடர்புடைய கௌவை, கவ்வை என்பதும் இடம் பெற்றுள்ளன.

‘அம்பல்’ என்பது முகிழ்த்தல். ஒருவரோடு ஒருவர் முகக்குறிப்பினால் தோற்றுவித்தல்.

‘அலர்’ என்பது சொல்லுதல் ஆகும். இந்நிலைக்குக் காரணமானவன் தலைவன். என்பதை,

“அம்பலும் அலருங் களவுவெளிப்படுதலின்
அங்கதன் முதல்வன் கிழவனாகும்”[36]

என தொல்காப்பியர் வரையறுத்துள்ளார்.

இந்த சொற்களனைத்துமே காதலில் ஈடுபட்ட அல்லது கற்பில் ஈடுபட்ட ஆண் பெண் உறவு குறித்து ஊரார் கூறும் பழிப்புரையைச் சுட்டுவனவாகவே உள்ளது. இச்சொற்கள் காதல் என்பது ஊரிலுள்ள மக்களால் எவ்வாறு எதிர்

---

[35] அகம். 198
[36] இளம்பூரணர் உரை. தொல். பொருள், நூற். 137.

முகமாக அணுகப்பட்டது என்பதை வெளிப்படுத்துவதாக உள்ளன. களவு வெளிப்பாட்டிற்குக் காரணமாக இருக்கும் அம்பல், அலர் இரண்டுமே காதல் வாழ்விலும், கற்பு வாழ்விலும் முக்கிய இடம் பெறுகின்றன. எனவே தொல்காப்பியர்

''களவும் கற்பும் அலர் வரைவின்றே''[37]

என்று குறிப்பிட்டுள்ளார்.

வயது வந்த ஆணும் பெண்ணும் நெருங்கி உறவாடுவதற்கு சங்ககால சமுதாயம் உடன்படவில்லை. களவுகாலத்தில் ஊர்ப்பெண்கள் கூறும் அலர், சமூகத்தின் எதிர்ப்பைக் காட்டுகிறது. அலர் மொழிந்த ஊரார் தலைவியை மணந்தவுடன் அமைதியடைந்தனர் என்பதை இலக்கியங்களால் அறிய முடிகிறது.

காதலுக்குத் தடை ஏற்படக் காரணமாக அம்பல் விளங்கினும், அதுவே திருமணத்திற்கு முதற்காரணமாக அமைகிறது. மேலும் அலர் மிகுதியாக அதிகரிக்க இருவர் உள்ளத்திலும் காதல் மிகுதியாகும் தன்மையும் உண்டு என்பதை

''அலரில் தோன்றும் காமத்து மிகுதி''[38]

என்று காம மிகுதி வெளிப்பாட்டிற்கு அலரே அடிப்படை என்கிறார் தொல்காப்பியர்.

ஊரார் கூறும் அலர் தலைவியின் துயர் மிகுதிக்குக் காரணமாக அமைகிறது. தலைவன் களவின்பத்தில் ஈடுபடும்போதும், வரைந்து கொள்ளாமல் காலம் நீட்டிக்கும் போதும் அலர் எழுகிறது. இவ்வாறு ஊரார் கூறும் அலரால் தலைவி இற்செறிக்கப்படுகிறாள். இதனை,

---

[37] மேலது, நுற் 160.

[38] இளம்பூரணார் உரை, தொல். பொருள். நூற் - 161.

“கவ்வை நல்லணங்கு உற்ற இவ்வூரிக்
கொடிதறி பெண்டிர் சொற் கொண்டன்னை
கடிகொண்ட னளனே”[39]

என்ற அகப்பாடல் புலப்படுத்துகிறது.

களவில் தலைவன் தலைவியைச் சந்திக்க பகற்குறி, இரவுக்குறி வருவான். இவ்வாறு பகலில் சந்திக்கும் இடம் பகற்குறி எனவும், இரவில் சந்திக்கும் இடம் இரவுக்குறி எனவும் வழங்கப்படும்.

தலைவன் வருவதை ஊரார் பார்த்து அவன் வந்து செல்லும் நோக்கத்தினை உய்த்துணர்வர். பின்பு அச்செய்தியினை தமக்குள் மறைத்து உரையாடுவர். இதனை,

“சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டு விரல் சேர்த்தி
மறுகின் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப”[40]

என்ற நற்றிணைப் பாடல் அம்பல் தூற்றலை நயம்பட எடுத்துரைக்கின்றது. அதுபோன்று தலைவன் களவில் பெற்ற இன்பம் தலைவியின் உடல் மெலிவிற்கும், ஊர் அலர் உரைப்பதற்கும் காரணமாகியது. இச்செயல் மரத்திலிருந்த பலாப்பழமானது குரங்குதொட கீழே விழுந்து அதன் மணம் எங்கும் பரவியது போன்று இருந்தது.

“கலைதொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரைஇழி அருவி உண்துறைத் தரூஉம்
குன்றநாடன் கேண்மை
மென்தோள் சாய்த்தும் சால்பு ஈன்றன்றே”[41]

என குறுந்தொகை புலப்படுத்துகிறது.

---

[39] அகம். 20: 11 - 13.
[40] நற். 149.
[41] குறுந். 90.

இக்கருத்தினை [அகம் 347: 6 - 8; 118: 6 நற் 133: 6 - 7 கலித்தொகை 132: 23 - 24] என்ற பாடல்களும் வெளிப்படுத்துகின்றன. இவ்வாறு அயற்பெண்டிர் கூறுகின்ற அம்பல், அலர், கௌவை எனப்படும் பழிச்சொற்கள் சங்க இலக்கியங்களில் பரவலாக இடம் பெற்றிருப்பது காதல் பெற்றிருந்த செல்வாக்கின் வெளிப்பாடாகவே அமைந்துள்ளது.

## இற்செறித்தல்

ஒருவனுக்கு ஒருத்தி எனும் ஒருதார மணமுறை பின்பற்றப்பட்ட சமுதாயத்தில் காதலானது பெண்களின் உரிமையாக இருந்துள்ளது. இதனால் காதல் வயப்பட்ட மகளிர்க்கு காவல் மிகுதியும் இருந்துள்ளது. வயதுவந்த மகளிரை இல்லத்திலேயே அடைத்து வைத்துக் காக்கும் இற்செறிப்பும் சங்கப் பாடல்களில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

காதல் வயப்பட்ட தலைவியின் உடல் வேறுபாட்டை கண்ட தாய், செவிலித்தாய் முதலியோர் அவளை வெளியில் செல்லவிடாமல் வீட்டில் அடைத்து வைத்து காப்பது 'இற்செறிப்பு' எனப்படும்.

தலைவியின் உடல் மெலிவு இற்செறிப்புக்கான காரணமாக கூறப்பட்டுள்ளது. என்பதை,

"பின்னுவிட நெறிந்த கூந்தலும் பொன்னென
ஆகத் தரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையும் நோக்கி
எல்லினை பெரிதெனப் பல்மாண் கூறி
பெருந்தோளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள் யாயே"[42]

[42] அகம். 150: 1 - 6

என்னும் இப்பாடல் தலைவியின் உடல் வேறுபாடுகளைக் கண்ட தாய், அவளை அரிய காவலில் வைத்த நிலையினைச் சுட்டுகிறது. மேலும் இச்செய்தியை [நற்றிணை 27; 63; 6 - 7; 258 ஐங்குறுநூறு 28] போன்ற பாடல்களும் விளக்குகின்றன.

களவு வாழ்வில் தலைவிக்கு பல்வேறு இடையூறுகள் தோன்றும். அறுவடைக்குப் பின்னர் தலைவி பெரும்பாலும் வெளியில் செல்வதில்லை. அதனால் தலைவனை சந்திக்க இயலாத சூழல் ஏற்படும். அவ்வருத்தத்தால் தலைவியின் உடல்மெலியும். மேலும் தலைவியின் பெற்றோரால் இற்செறிக்கப்பட்டு துயிலாமல் தலைவி வருந்துவாள்.

இவ்வாறு இற்செறிக்கப்படுங்காலத்தில் தோழியிடம் தலைவி தன் உள்ளத்தை வெளியிடுவாள். இதனை,

> ‘‘மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித்தோழிக்கு
> நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்’’[43]

என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு மகளைக் காவலில் வைத்து காத்தவள் தாயாகவே உள்ளாள். இச்செய்தியை [அகம் 122: 3 - 4; 150: 6; ஐங் 115: 4; குறுந் 294: 8; 351: 1 – 2] என்ற பாடல்கள் சுட்டுகின்றன.

தலைவியைத் தன் மரபுப்படி ஏற்பாட்டுத் திருமணத்திற்கு உட்படுத்த எண்ணிய தாய், தன் மகள் காதலிலிருந்து விடுபட வேண்டி இற்செறித்துள்ளதை அறியலாம்.

---

[43] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற் 109: 12 - 13.

அகப்பாடல் மூலம் தலைவியின் உடல் வேறுபாடு கண்டு அதைச் சரிவர அறிந்து கொள்ளாததால் அவளை என் அறியாமை காரணமாக அடைத்து வைக்காமல் விட்டு விட்டேனே என வருந்தும் தாயையும் காணமுடிகிறது. இவை தலைவியின் உடல் வேறுபாட்டையும், மனவேறுபாட்டையும் அறிந்து, இது காதலால் வந்த வேறுபாடு என்பதை அறியாதவராக தாயார் இருந்ததை சுட்டிக்காட்டுகிறது. இதனை,

"............................................ மயிலியற்
சேயிழை மகளிராயமும் அயரா
..................................................................
பாவையும் பலியெனப் பெறாஅ, நோய்பொர
இவை கண்டு இனைவதன் தலையும் நினைவிலேன்
கொடியோள் முன்னிய துணரேன்"[44]

என்ற அகப்பாடல் தலைவியின் உடன்போக்கிற்குப் பின்னர் வருந்தும் தாயின் மனநிலையைப் புலப்படுத்துகிறது.

## அறத்தொடு நிற்றல்

அறத்தொடு நிற்றல் என்பது உண்மையை வெளிப்படுத்துவதாகும். களவு, கற்பாக மாறவேண்டியது அறமாதலின் அதனை உரியவரிடம், உரியநேரத்தில், உரிய வகையில் வெளிப்படுத்தும் செயல் அறத்தொடு நிற்றல் எனப்பட்டது. தலைவன், தலைவியரிடையே தோன்றிய களவொழுக்கம் பிழையாது, மணப்பதனால் கற்பொழுக்கமாக மாறும். அதற்கு உதவும் வகையில் அக்களவினைத் தலைவி தோழியிடமும், தோழி செவிலியிடமும், செவிலி

[44] அகம். 369: 4 - 10

நற்றாயிடமும், நற்றாய் தந்தை, தன்னையரிடமும் முறையாக வெளிப்படுத்துவதாகும். தலைவியின் பெற்றோருக்குத் தோழி நேரடியாக எதையும் கூறுவதில்லை. அதற்கென தமிழ் மக்கள் வகுத்த முறையே 'அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

அறத்தொடு நிற்றல் என்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி ''களவினைத் தமர்க்கு முறையே அறிவுறுத்துகை'' என விளக்கமளித்துள்ளது.

## அறத்தொடு நிற்கும் பண்பாடு

தமிழர் அகவாழ்வின் உயர்ந்த பண்பாக அறத்தொடு நிற்றல் திகழ்கிறது. அறம் எனப்படுவது பல பண்புகளையும் தழுவிய பொதுச் சொல்லாயினும், பெண்ணுக்குரிய முதற்பண்பான கற்பையே குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடிப்பில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்துதல் என்பது இத்துறையின் பொருள். பெற்றோருக்கு அறிவித்தல் தோழியின் நோக்கமன்று. தலைவி கற்பு நெறிப் பட்டுவிட்டாள் என்பதனை, முதன்மையாக வலியுறுத்துவதே அவள் நோக்கமாகும்.

களவொழுக்கத்தில் ஒழுகும் தலைவியின் அக வாழ்வைக் கற்பொழுக்கமாக மாற்றி, சமுதாயத்தில் அவளுக்கு நன்மதிப்பைப் பெற்றுத் தருவதில் தோழி மிகுந்த அக்கறையுடையவளாக செயல்பட்டாள்.

அதனாலேயே தலைவியின் உடல்மெலிவு கண்டு தாய் வினவியதும், தலைவியொருத்தி தோழியிடம் அறத்தொடு நிற்கிறாள். இதனை,

"மலர் தார் மார்பன், நின்றோற் கண்டோர்
பலர் தில், வாழி - தோழி! அவருள்
ஆர் இருட்கங்குல் அணையொடு பொருந்தி
ஓர் யான் ஆகுவது எவன்கொள்
நீர்வார் கண்ணொடு, நெகிழ் தோளேனே"[45]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகிறது. மலைநாட்டையுடைய தலைவன் யானை சென்ற வழியினைக் கேட்டான். பின்பு தினைப்புனத்தின் சிறுவாயிலின் பக்கத்தில் வந்து நின்றான். அவ்வாறு நின்றவனைக் கண்டோர் பலர் ஆனாலும், நான் ஒருத்தியே மெலிந்த தோள்களை உடையவளானேன். அதற்கு காரணம் யாதோ என்று தலைவி தோழியிடம் அறத்தொடு நின்றதைக் காணமுடிகிறது. இவ்வாறு தலைவி தோழியிடம் அறத்தொடு நின்றதை அகப்பாடல் 31 சுட்டுகிறது.

## தோழியின் இலக்கணம்

சங்க அகஇலக்கியங்களில் அதிகமாகக் குறிப்பிடப்படும் பாத்திரம் தோழி. தலைவிக்கு மிக நெருக்கமான உறவாக விளங்கக் கூடியவளும் தோழியே ஆவாள். தலைவிக்காக எதையும் செய்யத் துணிந்தவளாகவும், தன்னலமற்றவளாகவும் விளங்கியதை அக இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

சங்க இலக்கியத்தில் வரும் துணைப் பாத்திரங்களில் தோழியானவள் தலைவன், தலைவிக்கு இணையான இடத்தைப் பெற்றுள்ளாள். இவள் தலைவனுக்கும், தலைவிக்கும் அறிவுரை கூறுமளவிற்கு அறிவில் மேம்பட்டவளாக விளங்கினாள். தலைவியை வளர்த்த செவிலியின் மகளாகி,

[45] அகம். 82: 14 - 18.

தானும் தலைவியும் வேறல்ல என்பதற்கிணங்க ஒன்றுபட்ட வாழ்வினை மேற்கொண்டதை அறியமுடிகிறது. தொல்காப்பியர் தோழியை,

> ‘‘தோழிதானே செவிலி மகளே’’[46]

என செவிலியின் மகளே தோழி என்று குறிப்பிட்டுள்ளார்.

அக இலக்கியத்தில் தோழி எல்லையற்ற உரிமையுடையவள். தலைவியின் உரிமையையும், செயலையும் தன் உரிமையாகக் கொள்ளும் உறவுடையவள் எனினும் தலைவியின் விருப்பமின்றி அறத்தொடு நிற்கும் உரிமை மட்டும் தோழிக்கு இல்லை. இதனை,

> ‘‘அறத்தொடு நிற்கும் காலத்தன்றி
> அறத்தியல் மரபிலள் தோழி என்ப’’[47]

என்று தொல்காப்பியர் சுட்டுகிறார்.

### தோழியின் அறிவாற்றல்

தோழி ஏறத்தாழ தலைவியின் வயதுடையவளாக இருப்பினும் முதிர்ந்த அறிவுடையவளாக விளங்கினாள். தலைவியின் திருமணம் நடப்பதற்கு முன்பு அவள் மணமாகாதவளே. ஆயினும் அவளே தலைவியின் திருமணத்தை முன்னின்று நடத்தி வைக்கிறாள். தோழி நடுவுநிலைமையும், உரனும், அருளும் உடையவளாகத் திகழ்கிறாள். தலைவனுக்கு நிலையாமைத் தன்மையை உணர்த்தி பொருள் மட்டுமே வாழ்க்கையன்று என்பதை உணர்த்துகிறாள். இச்செய்தியை,

---

46 இளம்பூரணனார் உரை, தொல். பொருள், நூற். 123.
47 மேலது, நூற். 203.

''வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்களை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்
காணீர் என்றலோ அரிதே யது நனி
பேணீர் ஆகுவீர் ஐய''[48]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

## தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

தலைவி தலைவனைக் காணாது உடல் வேறுபட்டு ஆற்றாது வருந்தியிருந்தாள். அது கண்ட செவிலித்தாய் தலைவியின் உடல் வேறுபாட்டிற்கான காரணத்தைத் தோழியிடம் வினவினாள். அதற்குத் தோழி நாங்கள் ஒருநாள் மலைச்சாரலில் வேங்கைப் பூக்களைப் பறிக்கச் சென்றோம். அவ்வேளையில் அங்கு ''புலி, புலி'' என்ற ஆரவாரம் கேட்டது. அப்பொழுது அங்கு கையில் வில்லுடன் தலைவனொருவன் தோன்றி அப்புலி போகிய வழியாதோ? என்று வினவி நின்றான். நாங்கள் நாணி ஒருவரையொருவர் மறைந்து நின்றோம். அவன் மெதுவாக, வந்த வழியாகத் தேரைச் செலுத்தி சென்றான். அவ்வாறு செல்லும் வேளையில் உன்னுடைய மகளையே பலமுறை நோக்கிச் சென்றான். அவளும் அவன் சென்று மறைந்த திசையை நோக்கி ''இவன் ஓர் ஆடவனே'' என்றாள். இதையன்றி வேறு ஏதும் காரணம் அறியேன் என்று தோழி செவிலிக்கு தலைவியின் காதலைக் குறிப்பின் மூலமாக உணர்த்தி அறத்தொடு நிற்கின்றாள். இதனை,

''சென்றோன் மன்ற, அக்குன்று கிழவோனே
பகல் மாய் அந்திப் படுசுடர் அமையத்து,
அவன் மறை தேஎம் நோக்கி, மற்று இவன்
மகனே, தோழிஎன்றனள்
அதன் அளவு உண்டு கோள், மதிவல்லோர்க்கே''[49]

---

48 நற். 46: 1 - 1.
49 அகம். 48: 22 - 26.

என்னும் வரிகள் இக்கருத்தினை மெய்ப்பிக்கின்றன. மேலும் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றதை, அகப்பாடல் சுட்டுகிறது. தலைவன் கடற்கரையில் வந்ததையும், தோழியர் கூட்டம் செய்து வைத்த சிற்றில், சிற்றுணவு முதலியவற்றைக் காலால் சிதைத்துவிட்டு தலைவியைக் குறித்துப் பார்க்கும் பார்வையோடு சென்றான் என தோழி செவிலிக்கு குறிப்பால் உணர்த்தி அறத்தொடு நிற்கிறாள். இதனை அகநானூற்றுப் பாடல் 110 புலப்படுத்துகிறது.

### தோழியின் அன்பு

தோழி தலைவியின்பால் மிகுந்த அன்பும், உறவும் கொண்டவளாக திகழ்ந்தாள். தலைவி சிறிது கலக்கமடைந்தால் கூட அவளால் பொறுத்துக் கொள்ள இயலாது. உடனே தலைவனிடம் சென்று தலைவிக்காக பேசுவாள். தலைவியிடம் பல்வேறு அறிவுரைகள் கூறி தலைவியைத் தேற்றுவாள். தலைவன் தலைவியைக் காண பகற்பொழுதில் அடிக்கடி வந்து செல்வான். ஆனால் சிலநாள்கள் வராமையால் தலைவி வருந்தினாள். தன் வருத்தத்தைப் பிறர் அறியா வண்ணம் மறைப்பாள். ஆகவே தோழி தலைவனிடம் கூறும் படியாக பாணணை அனுப்புகிறாள். இதனை,

> "மல்லர் மூதூர் மறையினை சென்று
> சொல்லின் எவனோ பாண"[50]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

---

[50] அகம். 50: 9 - 10.

“உற்ற நேரத்தில் உதவும் நண்பனே உண்மையான நண்பன்” என்பது போல தோழி, தலைவியின் நிலையறிந்து உடனுக்குடன் செயலாற்றுகிறாள். இதன்மூலம் தோழி தலைவி மீது கொண்டிருக்கும் அன்பு வெளிப்படுகிறது.

### தலைவியை ஆற்றுவித்தல்

தலைவன் போரின் காரணமாகவும், பொருள் தேடும் காரணமாகவும், பரத்தையின் பொருட்டாகவும் அடிக்கடி தலைவியைப் பிரிந்து செல்வான். அச்சமயம் தலைவி தலைவனின் பிரிவைத் தாங்காமல், கவலைப்பட்டு உடல் மெலிந்து காணப்படுவாள். இந்நிலையில் தோழி, தலைவிக்கு ஆறுதல் மொழிகளைக் கூறி அவளை ஆற்றுவதாக சங்க இலக்கியத்தில் பல பாடல்கள் உள்ளன.

தலைவன் பிரிவால் வருந்திய தலைவியிடம் தோழி நம் தலைவர் உன்னிடம் மிகுந்த அன்புடையவர். ஆகவே வளமிக்க ஆமூரையே பரிசாகப் பெறினும் சென்றவிடத்து தங்குவதில்லை. எனவே அவர் வரும் வரை ஆற்றியிருக்கக் கூறினாள். எனவே

> “சேண்விளக்கு சிறப்பின் ஆமூர் எய்தினும்,
> ஆண்டு அமைந்து உறையுநர் அல்லர், நின்
> பூண்தாங்கு ஆகம் பொருந்துதல் மறந்தே”[51]

என்ற அகப்பாடல் மூலம் அறியலாம்.

தலைவன் பரத்தையிடம் தொடர்பு கொண்டிருந்தான். அதனால் தலைவி வருத்தமுற்றாள். அப்போது தோழி புள்ளிகளையுடைய நண்டானது நீரிலுள்ள ஆம்பல் தண்டினை அறுக்கும். அதுபோல தலைவனும், பரத்தையிடம்

---

[51] அகம். 159: 19 - 21.

கொண்டிருக்கும் தொடர்பை அறுத்து உன்னைப் பிரியாமல் எப்போதும் உன்னுடனேயே இருப்பான் எனக்கூறி தலைவியை ஆற்றுவித்தாள் என்பதை,

"புள்ளிக் கள்வன் ஆம்பல் அறுக்கும்"[52]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் விளக்குகின்றன. கார்காலம் வந்தவுடன் தலைவன் வருவான் என தலைவியைத் தோழி ஆற்றுவித்தச் செய்தியை ஐங்குறுநூற்றின், தோழிவற்புறுத்த பத்து என்ற பகுதியிலுள்ள 461 முதல் 470 வரையிலான பாடல்களும் விளக்குகின்றன. மேலும் இக்கருத்தினை கலித்தொகை 150: 22 - 23 குறுந்தொகை 22: 328 பாடல்களும் குறிப்பிடுகின்றன.

## தோழி தலைவனுக்குக் கூறும் அறிவுரை

தலைவன் தவறு செய்யும் நேரங்களில் அந்தத் தவற்றைச் சுட்டிக்காட்டி தலைவனுக்கு அறிவுரை கூறி அவனை நல்வழிப்படுத்துபவளாகவும் தோழி விளங்கினாள். அவள் தலைவனிடம் அறத்தினை எடுத்துக்கூறி தலைவியை வரைந்து கொள்ள கூறினாள். தலைவனிடம் ஆற்றுதல் என்பது இல்லறவாழ்க்கையில் வறுமையுற்றவர்க்கு உதவுதல், போற்றுதல் என்பது நட்பு கொண்டவரைப் பிரியாதிருத்தல். பண்பு எனப்படுவது உலக ஒழுக்கமறிந்து ஒழுகுதல், அன்பு எனப்படுவது தன் சுற்றத்தாரை சினவாதிருத்தல். அறிவு என்பது அறியாதார் தன்னைப் பார்த்துச் சொல்லும் சொல்லைப் பொறுத்துக் கொள்ளுதல். செறிவு என்பது கூறிய ஒன்றை மறவாதிருத்தல். நிறைவு எனப்படுவது மறைவான ஒன்றை பிறர் அறியாது காத்தல், முறை எனப்படுவது தீங்கு செய்தார் நம்மவராயினும் அவர் குற்றத்திற்கேற்ப தண்டனை கொடுத்தல். பொறை எனப்படுவது தன்னைப் போற்றாதவரிடம் பகை கொள்ளாமல்

---

[52] ஐங். 21- 2.

பொறுமையோடிருத்தல். அவ்வாறு அக்குணத்தை அறிந்து ஒழுகுபவராக இருந்தால் தலைவியின் வருத்தம் நீங்க அவளைத் திருமணம் செய்து ஒழுக வேண்டும். மாறாக அவளைத் துறத்தல் என்பது சுவை மிகுந்த பாலை உண்பவர் பாலினை உண்ட பின்னர் பாலிருந்த கலத்தைக் கவிழ்த்து விடுதல் போன்றதாகும் என வாழ்க்கையில் யாவரும் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இதனை,

"'ஆற்றுதல்' என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
'போற்றுதல்' என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
..........................................................................
சென்றனை களைமோ: பூண்கநின்தேரே"[53]

என்ற நெய்தற்கலிப் பாடலடிகள் விளக்குகின்றன.

இவ்வாறு தோழி தலைவனுக்கு இளமை நிலையாமை, சான்றோரின் இயல்புகள் எத்தகையது என்பன போன்ற பல்வேறு அறிவுரைகளைக் கூறி அவனை நல்வழிப் படுத்துபவளாகக் காணப்பட்டதை அக இலக்கியங்களின் வழியாக அறிந்துகொள்ள முடிகிறது.

## பகல், இரவுக்குறிகள்

தலைவனும், தலைவியும் தம்முள் ஒத்த அன்புடையவர்களாக, பெற்றோர், உற்றார், உறவினர் யாரும் அறியாமல் பகல், இரவு நேரங்களில் சந்தித்து மகிழ்வர். தொல்காப்பியர் இதனை,

"இரவுக்குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே
மனையகம் புகாக் காலை யான"[54]

[53] கலி. 133: 6 - 19.
[54] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 129.

எனவும்,

> "பகற்புணர்களனே புறனென மொழிப
> அவளறி வுணர வருவழியான"[55]

என்ற பாடல் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார்.

பகல் சந்திப்பானது இல்லத்தை விட்டு வெகு தொலைவில், தினைப்புனம் காத்தல் அல்லது புனலாடல் போன்ற இடங்களில் நிகழும்.

இரவு சந்திப்பு தலைவியின் இல்லத்தின் அருகில் மற்றவர் உரைக்கும் உரையாடல் கேட்கும் தொலைவில் நிகழும் என்று குறிப்பிட்டுள்ளார்.

## பகற்குறி, இரவுக்குறி மறுத்து வரைவு வேண்டுதல்

களவு வாழ்க்கையை நீட்டிக்க விரும்பிய தலைவன் தினந்தோறும் இரவில் தலைவியைச் சந்தித்து செல்கிறான். ஆகவே தோழி அவனிடம் சென்று அவன் வரக்கூடிய வழியின் இடையூறுகளை எடுத்துக் கூறி தலைவியை மணந்து கொள்ளுமாறு வலியுறுத்துகிறாள். இச்செய்தியை,

> "உறுபுலி யுருவேப்ப பூத்த வேங்கையைக்
> கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
> நீடு இருவிடர் அகம் சிலம்பக்கூய், தன்
> கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட கேள்"[56]

என கலித்தொகை எடுத்தியம்புகிறது.

களவொழுக்கத்தில் தலைவன் பகற்குறியில் தலைவியைச் சந்தித்துச் சென்றான். இதனால் இரவு நேரத்தில் அவனது பிரிவாற்றாது தலைவி அழத் தொடங்கினாள். ஆகவே தலைவியின் வருத்தத்தைத் தீர்ப்பதற்காக தோழி

---

[55] மேலது, நூற். 130.
[56] கலி. 38: 6 - 10

தலைவனிடம் அன்றில் பறவையானது துணை பிரிந்தால் வாழாது இறக்கும். அதுபோல தலைவி உன்னைப் பிரிந்தால் உயிர் வாழமாட்டாள் என்று தலைவியின் மனநிலையை எடுத்துக்கூறி, தலைவியின் உயிரைக் காக்க வேண்டிய கடமை தலைவனுக்குள்ளதை உணர்த்துகிறாள். இத்தகவலை,

> ''கல்சேர்ந்தன்றே, பல்கதிர் ஞாயிறு
> மதர் எழில் மழைக்கண் கலுழ, இவளே
> பெருநாண் அணிந்த, சிறுமென் சாயல்
> மாண்நலம் சிதைய ஏங்கி, ஆனாது
> அழல் தொடங்கினளே பெரும''[57]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

## இரவுக்குறியால் தோழி அஞ்சுதல்

தலைவன் இரவுக்குறிக்கண் வந்து தலைவியைச் சந்தித்து சென்றான். அவனிடம் தோழி நீ கடற்கரைச் சோலையின் கரிய வழியை நீந்திக் கடந்து இவளிடம் விருப்பமுடைமையால் வருகின்றாய். ஆனால் தலைவி இளமையின் அறியாமையால் உன் வருகையை உவந்து ஏற்பவளாக உள்ளாள். அதனால் நான் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளுள் ஒரு குழந்தை நஞ்சு உண்ண, அந்நஞ்சு மற்றொரு குழந்தைக்கும் பரவிக்கொல்லும் எனத் தாய் அஞ்சுவது போல நீ இரவில் வருவதை எண்ணி அஞ்சுகிறேன் என தோழி கூறினாள். இதனை,

> ''கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை
> வழிவழக்கு அறுக்கும் கானல் அம்பெருந்துறை
> ..............................................................
> கவை மக நஞ்சு உண்டா அங்கு
> அஞ்சுவல் பெரும என் நெஞ்சத்தானே''[58]

---

[57] அகம். 120: 5 - 9.
[58] குறுந். 324.

என குறுந்தொகை விளக்குகின்றது. இத்தகவலை அகம் 12; 220; குறுந்தொகை 355; நற். 67; 188; 223 போன்ற பாடல்களும் எடுத்தியம்புகின்றன.

## இரவுக்குறியின் இன்னல்களைக் கூறி வரைந்துகொள்ள வேண்டுதல்

தலைவன் இரவு நேரத்தில் வருவதால் சிறு குடியிலுள்ளோர் அணங்கு என அஞ்சுவர். தினைப்புனம் காப்போர் யானை வந்ததென்று அஞ்சுவர். ஊரிலுள்ளோர் புலி என கருதுவர். இவ்வாறு இரவில் நீ வருவதை ஊரார் அறிந்து பழி தூற்றுவதால் தலைவி வருந்துவாள். ஆகவே இரவுக்குறியின் குற்றத்தையும், துன்பத்தையும் எடுத்துக்கூறி தலைவியை விரைந்து திருமணம் செய்து கொள்ள தோழி வற்புறுத்துகிறாள். இதனை,

> “தாமரைக் கண்ணகியை தண்நறு மஞ்சாந்தினை
> நேர்இதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
> மணங்கமழ் நாற்றத்த மலைநின்று படுபெறூஉம்
> அணங்கு என அஞ்சுவர், சிறுகுடியோரே”[59]

என்ற பாடல் வரியின் மூலம் இரவுக்குறியின் துன்பத்தை தோழி தலைவனுக்கு எடுத்தியம்புகிறாள்.

புலியானது பசியால் உயிர் வருந்துவதாயினும், வீழ்த்தும் விலங்கு இடப்பக்கம் விழுந்தால் அதனை உண்ணாது வலப்பக்கம் வீழ்ந்ததையே உண்ணும் இயல்புடையது. இத்தகைய நாட்டையுடைய தலைவனே, நீ இவ்வாறு இருவகைக் குறியின் கண்ணும் வந்து செல்கின்றாய். ஆனால் தலைவியைப் பிரிந்து சென்றால் தலைவி ஒரு நாள் இறந்து படுதல் உறுதி. ஆதலால் தலைவி இறவாமல் காப்பதற்கு மருந்தினைப் பெற்றிருக்கின்றாயோ, இல்லையாயின் அவளை

[59] கலித். 52: 7 - 10.

மணந்துசெல்க என தோழி இரவுக்குறி வந்த தலைவனிடம் எடுத்துரைக்கின்றாள். இச்செய்தியை அகநானூறு 238 வது பாடல் எடுத்துரைக்கின்றது. மேலும் இத்தகவலானது [புறம் 190; அகம் 29: 1 - 3; நற்றிணை 154] போன்ற பகுதிகளில் பதிவாகியுள்ளதைக் காணமுடிகிறது.

## நொதுமலர் வரைவு

நொதுமல் எனும் சொல் சங்க இலக்கியத்தில் இடம் பெறும் முக்கிய சொல்லாக உள்ளது. சங்க கால சமுதாயத்தில் நொதுமல், நொதுமலர், நொதுமலாட்டி, நொதுமலாளர், நொதுமலாளன், நொதுமலாளனை என்ற பலசொற்கள் பயின்று வந்துள்ளன. இச்சொல்லிற்கு அயலவர், அயலவன், அயலார் என்பது பொருள்.

இற்செறிப்பு வேளையில் வேற்று வரைவு நேர்தலும் உண்டு. காதல் வயப்பட்ட பெண்டிர்க்கு காதல் மணம் நிகழ வேண்டியச் சூழலில் வேற்றார் பெண்கேட்டு வருதலுண்டு. வேற்றுவரைவுச் சூழலில் அறத்தொடு நிற்றல் நடைபெற்றுள்ளதை, நொதுமலர் வரைவின் கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் 110 மற்றும் 220-வது பாடல்கள் விளக்குகின்றன. மேலும் இச்செய்தியினைக் குறுந்தொகை 165; 379 நற்றிணை - 165; 207 போன்ற பாடல்களும் சுட்டிக் காட்டுகின்றன.

வேற்றுவரைவு நேர்ந்த வேளையில், தோழி தலைவனிடம் வரைவு கடாவும் நிகழ்ச்சியையும் காணமுடிகிறது. இதனை ஐங்குறுநூறு 266-வது பாடல் குறிப்பிடுகிறது. தலைமகள் ஒருவனை விரும்பி கற்புக்கடம் பூண்டதை அறியாத சிலர் அவளது பெற்றோரிடம் வரைவு குறித்து பேச வந்தனர். இதனையறிந்த

தலைவி கண்ணீர் வடித்தாள். ஆகவே தோழி தலைவனிடம் கூறி மணந்து கொள்ள வற்புறுத்தினாள்.

இவ்வாறு நொதுமலர் எனும் அயலார் பெண் கேட்டு மணமுடிக்க வரும் சூழல்கள் குடிக்குள் நடந்த மணமுறைக்கு வெளியே ஏற்பட்ட மணமுறையாக அமைந்துள்ளது. தலைவி அயலவர் மணம் செய்ய விரும்புவதை மறுத்துக் கூறி தலைவனுடனான தன் காதலை வெளிப்படுத்தும் நோக்கில் ஆயமகளிர்க்கு இருமணம் நடைபெறுதல் இயல்பான முறையன்று என்கிறாள். இதன் மூலம் தலைவனுடன் தனக்குண்டான இயற்கைப் புணர்ச்சியை மணமாக தலைவி கருதுவதும், வேற்று வரைவை மறுதலிப்பதும், காதல் களவு கற்பில் முடிய வேண்டியதும் சங்ககால காதலறம் என்பதை உணர்த்துகிறது.

களவுக் காலத்தில் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான். அவன் வரவை எதிர் நோக்கி தலைவி காத்திருந்தாள். அப்போது அவளைத் திருமணம் பேச புதியோர் சிலர் வந்தனர். இதையறிந்த தலைவி தன் தோழியிடம் ‘‘புதியோரின் முயற்சியால் என்ன பயன் ஏற்படும்? மீன்பிடிக்க வீசிய வலையில் மீன் சிக்காமல் விலங்கு சிக்கியது. அதை விடுவிக்கும் வருத்தத்தைப் போல, தலைவன் வரைந்து கொள்ளாத வருத்தத்துடன் இருக்க வேற்றார், வரைவு வேண்டி வந்ததால் அவர்களை விலக்குவதற்கும் வருந்த வேண்டியதாயிற்று என்று தலைவி தோழியிடம் கூறினாள். இதனை

> ‘‘காண்இனி வாழி - தோழி யாணர்க்
> கடும்புனல், அடைகரை நெடுங்கயத்து இட்ட
> மீன்வலை மாப்பட்டா அங்கு,
> இதுமற்று எவனோ, நொதுமலர் தலையே’’[60]

---

[60] குறுந். 171.

என குறுந்தொகைப் பாடல் நவில்கிறது. இவ்வாறு தலைவியின் இற்செறிப்பின் போதும், காதல் மணம் நிகழ வேண்டிய சூழல்களிலும் அயலார் மணம்பேச வந்த நிகழ்வை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

**உடன்போக்கு**

கொடுக்கக் கொள்ளும் முறையிலிருந்து வேறுபட்டு பெற்றோரின் கட்டுப்பாட்டையும் மீறி பெண் தனது துணையைத் தானே தேடிக் கொள்ளும் முறை சங்ககாலத்தில் இருந்துள்ளதை நாம் அறியலாம். காதலித்த நிலையில் அக்காதலுக்கு பெற்றோர் உடன்படாத நிலையில் காதலர் வீட்டைவிட்டு வெளியேறும் உடன் போக்குத் திருமணத்தைத் தொல்காப்பியர்,

> "கொடுப்போ ரின்றியுங் கரணமுண்டே
> புணர்ந்துடன் போகிய காலையான"[61]

என வரையறுத்துள்ளார்.

பெற்றோர் தலைவியின் காதலை சில நேரங்களில் ஏற்க மறுக்கும் சூழல் உண்டு. இந்நிலையில் தலைவி கொண்ட அறத்திற்கு ஊறு நிகழாமல் தோழி அவளைத் தலைவனுடன் அனுப்பி வைக்க ஏற்பாடு செய்வதால் தலைவி உடன்போக்கு மேற்கொள்வாள். இது உடன்போக்கு எனப்படும். இதனை நற்றிணை 149-வது பாடல் புலப்படுத்துகிறது. ஊர்ப் பெண்டிர் அலர் கூற அதனை உண்மையென்று கருதி அன்னை தலைவியை சிறிய கோலால் வீசி அடித்தாள். அதனால் தோழி வருந்தினாள். எனவே தலைவியிடம் தோழி நீ

---

[61] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 141.

உடன்போக்கு மேற்கொள்வாயாக. அவ்வாறு நீ சென்ற பின்பு இவ்வூர் அலர் கூறி ஒழியட்டும் என்று கூறுவதைக் காணமுடிகிறது.

## உடன்போக்கிற்கான காரணங்கள்

தலைவி, தலைவனுடன் சேர்வதற்குத் தடையாக இற்செறிப்பு நிகழும் போதும், அறத்தொடு நிற்றலின் போதும் வேற்று வரைவு நேரும் போதும், அலர், பெற்றோர் உடன்பாடு கிடைக்காமை போன்ற காரணங்களால் உடன்போக்கு மேற்கொள்கின்றனர்.

தலைவி அன்னையின் கடுஞ்சொல்லிலிருந்து தப்பும் படியாகவும், அலைத்தலிலிருந்து விடுதலை பெறவும் உடன்போக்கு மேற்கொள்வதை அகம் 65: 1 - 2 மற்றும் நற்றிணை 149: 3 - 5 பாடல்கள் விளக்குகின்றன.

உயிரைக் காட்டிலும் நாணம் சிறந்தது. நாணத்தைக் காட்டிலும் குற்றமற்ற காட்சியினையுடைய கற்பு சிறந்தது. கற்பைப் பேணுவதற்கு உயிர், நாணம் இவற்றை விட வேண்டியிருந்தால் தயங்குதல் கூடாது என்பதை தொல்காப்பியர்,

> "உயரினும் சிறந்தன்று நாணே நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்த தன்றெனத்
> தொல்லோர் கிளவி புல்லியநெஞ்சமொடு
> காமக் கிழவன் உள்வழிப் படினும்"[62]

என்ற பாடல் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார்.

---

[62] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 111.

உயிர், நாணம், கற்பு ஆகிய மூன்றில் கற்பே உயர்ந்தது என்பதை அறிவிப்பதற்குத் துணை செய்யும் நிகழ்ச்சியே உடன்போக்கு எனலாம். கற்பினைத் தலையாகப் போற்றியொழுக வேண்டுமென்பது தமிழர் கண்ட மனையியல் கோட்பாடாகும்.

இக்கருத்தினைத் தோழி தலைவியிடம் எடுத்துக் கூறி உடன்போக்கிற்கு உடன்படுத்துகிறாள். தலைவியின் உயிர், அவளை உடன்போக்கிற்கு உட்படுத்த அவளுடைய நாணம், தீ உறுதளிர்போல் நடுங்கி அதனைத் தவிர்க்க முற்பட்டது.

இந்நிலையில் தோழி, நாணினும் சிறந்த கற்பினைப் போற்றுவதற்காக, நாணம் கெட உடன் செல்லுதல் சிறந்ததேயன்றி, மறுத்தமை கூறுதல் தக்கதன்று என எடுத்துரைக்கிறாள். இச்செய்தியைக் குறுந்தொகை - 383 வது பாடல் புலப்படுத்துகிறது.

> "நனைவிளை நறவிளை நறவின் தேறல் மாந்தி
> புனைவினை நல்இல் தருமணல் குவைஇ
> 'பொம்மல் ஓதி எம்மகள் மணன்' என
> வதுவை அயர்ந்தினர் நமரே அதனால்
> ..........................................................................................
> அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென், யானே"[63]

என்ற அகநானூற்றுப் பாடல் வேறு ஒருவருக்குத் திருமண ஏற்பாட்டினைச் செய்த தம் சுற்றத்தாரின் செயற்பாட்டை மீறி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்ட தலைவியின் நிலை தோழியால் குறிப்பிடப்படுகிறது.

---

[63] அகம். 221.

இவ்வாறு தலைவன் பிரிந்து செல்வான் என்ற அச்சமும், அம்பல், அலர் இவை களவை வெளிப்படுத்தும் என்ற அச்சத்தாலும், தன்னிடம் நேர்ந்த வேறுபாட்டைப் பிறர் உற்றுநோக்குவதால் வந்த இடையூறு போன்றவை உடன்போக்கு நேர்வதற்கான காரணங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

## உடன்போக்கினால் அறியலாகும் செய்திகள்

- ❖ உடன்போக்கினால் பெற்றோர் தலைவியிடம் கொண்ட ஆழ்ந்த அன்பினை அறிய முடிகிறது.

நற்றிணை 184-வது பாடல் தாயின் அன்பினை படம் பிடித்துக் காட்டுகிறது. தலைவனுடன் உடன்போக்கு சென்ற பின்பு தாயானவள் புலம்புகிறாள். அதனால் அயலார் அவளைத் தேற்ற அவர்களிடம் நான் தாங்களைப் போல பல புதல்வியரைப் பெறவில்லை. ஒரு மகளையே பெற்றேன். அவள் பிரிவை எவ்வாறு தாங்குவேன். அவள் விளையாடிய இடம் காணும் போதெல்லாம் என் உள்ளம் வருந்துகின்றதே எனக் கூறுவதால் தாயின் அன்பு புலப்படுகிறது.

- ❖ உடன்போக்கிற்கு உதவும் தோழியின் அறிவு நுட்பத்தை உணரமுடிகிறது.

தோழி தலைவனிடம் பகல், இரவுக்குறியின் ஏதங்களை எடுத்துக்கூறி, களவில் ஏற்படும் அலர், தமர் வரைவு மறுத்தல் மற்றும் வேற்று வரைவு இவற்றால் தலைவியை உடன் கொண்டு போதலே சிறந்தது என தலைவனிடம் உடன்போக்கு வேண்டுகிறாள்.

கொடுப்போரில்லா வழியும் மணம் முடித்துக் கொள்ளுதல் அறத்தொடு பட்ட அறிவுடைமையாதலின், தலைவன் உடன்போக்கிற்கு இசையுமாறு தோழி வேண்டுகிறாள். இதனை, குறுந்தொகை (217) விளக்குகிறது.

தலைவி தன்னுடைய நாணத்தினால் உடன்போக்குக்கு உடன்படாமல் இன்றைய பொழுது கழிவதாகுக எனக் கூறி தவிர்த்தாள். அதற்கு தோழி கற்பினைப் போற்ற, நாணினைக் கை விடுக என்று கூறி தன்னுடைய அறிவு நுட்பத்தைப் புலப்படுத்துகிறாள். இதனை குறுந்தொகை,

> "நீ உடம்படுதலின், யான்தர, வந்து
> குறி நின்றனனே, குன்ற நாடன்
> இன்றை அளவைச் சென்றைக்க என்றி
> கையும் காலும் ஓய்வன நடுங்கத்
> தீஉறு தளிரின் நடுங்கி
> யாவதும் இலையான் செயற்கு உரியதுவே"[64]

என விளக்குகிறது. எத்தகைய துன்பம் நேர்ந்தாலும் தலைவனுடன் செல்லும் தலைவியின் உள்ளத்து உறுதியும், துன்பங்களை ஏற்று அவற்றை இன்பமாக்கிக் கொள்ளும் உள்ளச்சிறப்பினையும் அறிய முடிகிறது.

"வழியிலே இருந்த அழுக்கடைந்த சுனை நீரை எப்படி உன்னால் குடிக்க முடிந்தது" எனத் தோழி கேட்டாள். அதற்கு,

> "அன்னாய், வாழி! வேண்டு அன்னை! நம் படப் பைத்
> தேன் மயங்கு பாலினும் இனிய - அவர் நாட்டு
> உவலைக் கூவற் கீழ
> மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே"[65]

---

[64] குறுந். 383.
[65] ஐங். 203.

என தலைவி அளித்த விடை சூழ்நிலைக்கு ஏற்ப மனத்தைப் பண்படுத்தி அதனால் அன்பை மிகுதியாக்கிய திறத்தை வெளிப்படுத்துகிறது. நம் காதலர் நாட்டிலுள்ள உதிர்ந்த தழையால் மூடப்பட்ட கிணறுகளின் அடியில் விலங்குகளால் உண்ணப்பட்டு எஞ்சி நிற்கும் கலங்கிய நீரும், நம்முடைய வீட்டின் புறத்தேயுள்ள தோட்டத்தில் கிடைக்கும் இனிய தேனொடு கலந்த ஆவின் பாலினும் மிக்க இனிமையுடையதாகும் எனக் கூறினாள். மேலும் இக்கருத்தினை குறுந்தொகை 356-வது பாடல் சுட்டுகின்றது.

## உடன்போக்கு அறநெறி என தாய் கூறுதல்

தன் மகள் காதலனுடன் சென்று கற்பைக் காத்துக் கொள்வதே அறநெறி என்று தாய் மகிழ்ந்து கூறுகிறாள். ஆகவே பிறை போன்ற நெற்றியுடைய இளமைத் தன்மை கொண்ட மகள் சென்ற வழியானது மழை பெய்யப் பெற்று வெம்மை நீங்கி இனியதாகுக என வாழ்த்துகிறாள்.

> ''உயர் நெடுங்குன்றம் படுமழை தலைஇச்
> சுரம் நனி இனிய ஆகுகதில்ல
> அறநெறி இது எனத் தெளிந்த என்
> பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே''[66]

என ஐங்குறுநூறு எடுத்தியம்புகிறது.

இவ்வாறு உடன்போக்கு அறநெறியென்று தாய் மகிழ்ந்தாலும் உடன்போக்கின் மூலம் தாயின் உள்ளம் எவ்வாறெல்லாம் துன்புறுகிறது என்றும், தன் மகள் மீது கொண்டிருந்த கற்பனைகள் அனைத்தும் ஒரே வினாடியில் இழந்து விடுகிறதையும், தாயின் உள் மனதின் வருத்தத்தையும் சங்க இலக்கியம் சிறப்பாக எடுத்தியம்புகிறது.

---

[66] மேலது, 371.

## தாயின் ஏக்கம்

தலைவியைப் பிரிந்த தாயின் உள்ளமானது பலநிலைகளில் ஏங்குகிறது, வேதனையுறுகிறது. மணப்பருவம் வந்தவுடனே மகளுக்குச் சிறப்பாகத் திருமணம் செய்ய வேண்டுமென்று தாய் திட்டமிடுகிறாள். ஆனால் தலைவி தன் தாயின் அன்பை நினைக்காமல் பிரிந்ததாலும், தன் காவலை மீறி ஏமாற்றியதாலும், அவள் பிரிவைத் தாங்க முடியாத வேதனையாலும், தாயானவள் தலைவியைச் சிறுவன் கண்ணி என கூறுகிறாள். இதனை,

"சிறுவன் கண்ணி சிலம்புகழீஇ"[67]

என்பதால் உணரலாம்,

கொடியோள் என்று தூற்றவும் செய்கிறாள், இதனை 'கொடியோள் முன்னியது உணரேன்' என்ற அகப்பாடல் 369: 10 சுட்டுகிறது.

பிறளாயினள் என்று வேறுபடுத்திப் பேசவும் செய்கிறாள். இதனை, அகநானூறு 35-வது பாடல் 11-வது வரி விளக்குகிறது.

சிலம்பு கழி நோன்பானது மணவினைச் சடங்கிற்கு முன்னர் நடத்தப் பெறும் இன்றியமையாத சடங்காகும்.

அதனைத் தான் செய்யும் பேறு பெறவில்லையே என்று தாயுள்ளம் வேதனையுறுகிறது. இதனை,

"சிலம்புகழீய இய செல்வம்
பிறருணக் கழிந்த என் ஆயிழை அடியே"[68]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

---

[67] அகம். 385: 17.
[68] நற். 279: 9 - 11.

அவள் தலைவனை விரும்பியதை என்னிடம் கூறியிருந்தால் திருமணம் முடித்திருப்பேன் என்று தாயானவள் ஏங்குகிறாள். இக்கருத்தினை அகநானூறு 203: 10 - 15வது பாடலடிகள் சுட்டுகிறது.

மடநல்லாளைத் தான் ஈன்றதற்காக இல்லையென்றாலும், அவளைப் பலநாள் கூந்தல் வாரி, இடுப்பில் அமர்த்தி வளர்த்ததற்காவது தலைவன் தன் இல்லத்திற்கு திருப்பி அழைத்து வரமாட்டானா என்று ஏங்குகிறாள். இச்செய்தியை,

''மாண்பினை நோக்கின் மடநல் லாளை
ஈன்ற நட்பிற்கு அருளாண் ஆயினும்
இன்நகை முறுவல் ஏழையைப் பல்நாள்
கூந்தல் வாரி, நுசுப்பு இவர்ந்து, ஓம்பிய
நலம்புனை உதவியும் உடையவன் மன்னே''[69]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

காகத்திடம் வேண்டுவதை ஐங்குறுநூறு,

''மறுஇல் தூவிச் சிறு கருங்காக்கை!
அன்புடை மரபின் நின் கிளையோடு ஆரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல் வேற்காளையொடு
அஞ்சில் லோதியை வரக் கரைந்தீமே''[70]

என இவ்வாறு பெற்று வளர்த்த தாங்கள் மணவினைக் காட்சி காண முடிய வில்லையே என்ற தாயுள்ளத்தின் ஏக்கம் புலப்படுத்தப்படுகிறது. இத்தகவலை அகம் 17; 153; 195; 379; 385 போன்ற பாடல்களும் விளக்குகின்றன.

---

[69] அகம். 195: 6 - 10.
[70] ஐங். 391: 1-6.

## தாயின் புலம்பல்

மகளின் ஒவ்வொரு செயல்களையும் கண்காணித்த தாயானவள் அவள் வளர்ச்சியடைந்த பின்னர் அவளது உடம்பில் ஏற்படும் மாற்றங்களைக் கூறி, அவளை எச்சரித்ததால் ஏற்பட்ட இழப்பினை நினைத்துப் புலம்புகிறாள்.

கிளியும், பந்தும், கழங்கும் விரும்புபவளாகிய தலைவி முன்னைப் போல் இல்லையே என்று ஐயுற்ற பின்னரும், இற்செறிக்காத தன்னை நொந்து புலம்புகிறாள். இதனை,

> ‘‘கிளியும், பந்தும், கழங்கும், வெய்யோள்
> அளியும், அன்பும், சாயலும், இயல்பும்
> முன்நாள் போலாள் இறீஇயல், என்உயிர்’’[71]

என தனது உயிரையே வெறுக்கிறாள்.

தலைவியிடம் தாய் நீ பேதை பருவத்தினள் அல்ல. பெதும்பைப் பருவத்தை அடைந்து விட்டாய். மேலும் உடலில் ஏற்படும் மாற்றங்களைக் கூறி வெளியே செல்ல விடாமல் இற்செறித்த தன் செயலை நினைத்து புலம்புகிறாள். இதனை அகநானூறு 7-வது பாடல் சுட்டுகிறது.

தலைவியை அடித்ததற்காக தாயானவள் தன்னையே நோகிறாள். அன்னிக்கும், திதியனுக்கும் நடந்த போரில் காவல் மரமான புன்னை மரம் பட்ட துன்பத்தைப் போன்று, களவு அறிந்து, தலைவியை அடித்த என் கைகளும் அடையட்டும் என்று தாய் புலம்புவதை, அகப்பாடல் 144 புலப்படுத்துகிறது. இவ்வாறு தாயின் உள்ளம் தன் மகளின் செயலுக்குக் காரணம் கற்பித்து வருந்துகிறது.

---

[71] அகம். 49: 1 - 3.

## சாவையும் விரும்பும் தாயுள்ளம்

மகளுக்காகவே வாழ்ந்த தாயுள்ளம் பிரிவைத் தாங்காமல் இறக்கவும் முடியவில்லையே என்று ஏங்குகிறது. தன்னை மகள் மறந்து சென்ற போதும், அவளை மறக்க முடியாமல் துடிக்கிறது.

தலைவியைப் பிரிந்த தாய் உலையில் ஊதும் துருத்தி போல உள்ளம் மெலிந்து பெருமூச்சு விட்டாள். தீயில் வெந்து போவது போன்ற வெம்மையுடைய நெஞ்சத்துடன் கண்ணுறக்கமில்லாமல் புலம்பினாள்.

வெண்ணிப் போர்க்களத்தில் சோழன் எறிந்த வேல் சேரனின் மார்பில் பட்டு முதுகுப்புறமாக ஊடுருவிப் புண் செய்தது. மார்பில் தைத்து உருவின புண்ணும் புறப்புண்ணுக்கு சமம் எனக் கருதி நாணி புறப்புண்பட்ட பழிதீரச் சேரலாதன் வாளொடு வடக்கிருந்து உயிர் துறந்தான். துன்பம் தருகின்ற இச்செய்தியைக் கேட்ட சான்றோர் பலரும் தாமும் வடக்கிருந்து உயிர் துறந்தனர்.

அதுபோன்று தலைவி சென்றவுடன் தனது உடலை விட்டுச் செல்லாத உயிரை நினைத்து தாய் வருந்துவதை அகப்பாடல் சுட்டுகிறது. இதனை,

''ஊது உலைக் குருகின் உள் உயிர்த்து, அசை இ,
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு
கண்பகை பெடூறன், கனவ ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருது புண் நாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென,
இன்னா இன் உரை கேட்ட சான்றோர்
..............................................................................
போதல் செல்லா என் உயிரோடு புலந்தே''[72]

[72] அகம். 55: 6 - 17.

என்று உயிர் துறக்க விரும்பும் தாயுள்ளம் படம் பிடித்துக் காட்டப்படுகிறது.

### தாயின் இரக்கம்

தன் மகள் பாலை வழியாக உடன்போக்கு சென்றதை அறிந்த தாய் மகளுடைய எதிர்கால வாழ்வை நினைத்து இரக்கம் கொள்கிறாள். இதனை,

> "செம்பொற் புனைகலத்து அம்பொரிக் கலந்த
> பாலும் பல என உண்ணாள்
> கோல் அமைக் குறுந்தொடித்தளிர் அன்னோளே"[73]

என்ற குறுந்தொகைப் பாடலில் சுட்டப்படுகிறது. தண்மையையும், பாலையின் வெம்மையையும் நினைத்து தாய் வருந்துகிறாள். இதனைக் குறுந்தொகை 396-வது பாடல் வரிகள் புலப்படுத்துகின்றது.

மகள் அன்போடு பேணி வளர்த்த வயலைக் கொடியைப் பார்த்து, தாயானவள் இரக்கம் கொள்கிறாள். அவள் போன்று நிறைய நீரினை ஊற்றி நின்னைப் பாதுகாப்பார் யார் இருக்கிறார்கள் என தாய் இரங்கியதை,

> "......................... வைகலும்
> ஆரநீர் ஊட்டிப்புரப்போர்
> யார் மற்றுப் பெறுகுவை"[74]

என்ற பாடல் மூலம் தாயின் இரக்கம் தெளிவுபடுத்தப்படுகிறது.

### தாயின் பழிச்சொல்

உடன்போக்கு சென்ற தன்னுடைய மகள் தனக்கு செய்த வஞ்சனையையும், அவளுடைய சதித்திட்டங்களையும் எண்ணி அவளைப் பழித்துக் கூறுகிறாள். இதனை,

---

[73] குறுந். 356: 6 - 8.
[74] அகம். 383: 12 - 14.

"வயலை அம் பிணையல் வார்ந்த கவர்வுற
திதலை அல்குல் குறுமகள் அவனொடு
சென்று பிறள் ஆகிய அளவை"[75]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

### தாயின் வெகுளி

தலைவி உடன்போக்கு மேற்கொண்டமை அறச்செயல் என்று தாய் உணர்ந்தாலும், தலைவியின் பிரிவைத் தாங்க முடியாதவளாகிறாள். அதற்குக் காரணம் தலைவன் தானே என்ற சினமும் எழுகிறது. அன்பு காரணமாக, தன் மகளைத் திட்ட முடியாத தாயுள்ளம் தலைவனைத் தூற்றுகிறது.

தன் மகளுக்கு அறமில்லாத ஒருவனோடு செல்வதற்குரியத் துணிச்சல் இருந்திருக்காது. இந்த துணிச்சலை ஏற்படுத்தியவன் தலைவன் தான். ஆகவே தலைவனையும் அவனைப் பெற்ற தாயையும் கோபத்துடன் பேசுகிறாள் தாய். இதனை,

"பெருவிதுப்பு உறுக மாதோ எம்இல்
பொம்மல் ஓதியைத் தன் மொழிக் கொளீஇ,
கொண்டு உடன் போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே"[76]

என்ற பாடலில் தாயின் வெகுளி தலைவன் மேலும், தலைவனின் தாயின் மேலும் பாய்கிறது. தலைவனை நொதுமலாளன், அறனிலாளன், ஏதிலாளன் என்று இழிவாகப் பேசுவதை அகம் 17: 8: 207: 12 - 13; 117: 3 போன்ற பாடல்கள் சுட்டுகின்றன. இத்தகைய கொடியப் புதல்வனைப் பெற்ற தாய் பெரிய நடுக்கமுற்று துன்புறுவாளாக என்று தலைவனது தாயை கடிந்துரைக்கிறாள்.

---

[75] அகம், 189.
[76] நற். 293: 6 - 9.

### தாயின் வாழ்த்துரை

தலைவி, தன்னை மறந்து தலைவனுடன் சென்றாலும் அவள் தன்னுடைய மகள் என்ற காரணத்தால் அவளை வாழ்த்தி அனுப்புகிறாள். தொடர்ந்து அவள் செல்லும் வழியில் பருவமழை பெய்து சுரம் நனி இனியவாக அமையட்டும் என வாழ்த்துவதை,

> ‘‘சுரம் நனி இனிய ஆகுகதில்ல -
> அறநெறி இது எனத் தெளிந்த என்
> பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே’’[77]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இத்தகவலை குறுந்தொகை 378வது பாடலும் எடுத்தியம்புகிறது.

தனது மகள் தங்குமிடத்தில் விருந்தினர்களை ஓம்புகின்ற துளுநாட்டினர் போன்று பண்பில் சிறந்த விருந்தோம்புபவர் இருந்து என் மகளை விருந்தோம்ப வேண்டும் என விரும்புகிறாள். இதனை,

> ‘‘தோகைக் காவின் துளுநாட்டு அன்ன
> வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்
> செறிந்த சேரிச் செம்மல் மூதூர்,
> அறிந்த மாக்கட்டு ஆகுகதில்ல’’[78]

என்ற அகப்பாடலில் மாமூலனார் குறிப்பிட்டுள்ளார்.

இதே போன்று தானே சென்று அவர்கள் செல்கின்ற வழியில் விருந்தோம்ப வேண்டும் என விரும்புகிறாள். இச்செய்தியை அகம் – 263 வது பாடல் தெளிபுபடுத்துகிறது. இவ்வாறு தாயானவள் தன் மகள் தன்னை வெறுத்தாலும், தான்

---

[77] ஐங். 371: 3 - 5.
[78] அகம். 15: 5 - 8.

வெறுக்காமல் தன் புதல்வியை நினைத்து வாடுகிறாள். இச்செயல்கள் பெற்ற மனம் பித்து என்பதற்கு இலக்கணமாக அமைகிறது.

### மகளின் மனநிலை

மகளுக்காகவே வாழ்ந்த தாயுள்ளம் பிரிவைத் தாங்காமல் ஏங்குகிறது. ஆனால் மகளோ, தலைவனைக் காணும் வரை தான் 'தாயில்லாமல் நானில்லை' என்ற உணர்வு கொண்டவளாக இருக்கிறாள். தலைவனைக் கண்ட பிறகோ பெற்ற அன்னை 'அறனில் அன்னை' - யாக மாறுகிறாள். இதனை,

> "கல்லென் சேரப் புலவற் புன்னை
> விழவு நாறு விளங்கு இணர் அவிழ்ந்து உடன் கமழும்
> அழுங்கல் ஊரோ அறன் இன்று"[79]

என கடல் சேர்ப்பனோடு நமக்கு உண்டான உறவின் தொடர்ச்சியானது அறமற்ற அன்னை இற்செறிப்பால் பசலை ஏற்பட்டு அழிவதற்குத் தானோ என்று கூறுவதால் அறியலாம்.

இத்தகவலை குறுந்தொகை (244: 6; 262: 2; ஐங்குறுநூறு 385: 6 அகம் 60: 15: 302: 16) போன்ற பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

தாயானவள் தலைவியின் உடல் மெலிவைக் கண்டும் அம்பல், அலர் முதலிய காரணங்களால் மகளைக் காவல் புரிகிறாள். இதனால் மகளுக்கு அன்னை அறனில் அன்னையாகிறாள். தாயின் அன்புத் தழுவலில் உறங்கிய மகளுக்கு தலைவனைக் கண்ட பின்பு அவ்வன்பு குறைந்து விடுகிறது. இதனை

---

[79] நற். 63: 3 - 5.

"...... செஞ்சுடர் நல்லிற்

பின்னும் வீழ் சிறுபுறந் தழீஇ

அன்னை முயங்கத் துயிலின் னாததாகிறது"[80]

என எடுத்தியம்புகிறது. மேலும் இச்செய்தியை குறுந்தொகை 244: 4 - 6-வது அடிகளிலும் காண முடிகிறது.

ஒருநாள் நகைமுக விருந்தினன் (தலைவன்) வருகிறான். அதனால் தாய் பகை முக ஊரில் இருப்பவர்களைப் போலத் துஞ்சாமல் இருக்கிறாள். எனவே,

"பெண் கொலை புரிந்த நன்னன் போ

வரையா நிரையத்தும் செலீஇயரோ"[81]

என்று சபிக்கிறாள் மகள். இவ்வாறு அன்னையைத் தாங்கள் வெறுப்பதையும், அவள் பிடியிலிருந்து விடுபட விரும்புவதையும், தாய் அலைப்பதால் தாங்கள் அடையும் துன்பத்தையும் தலைவனுக்கு மறைமுகமாக உணர்த்தி தலைவியும், தோழியும் வரைவு கடாவுகின்றனர். தலைவியின் களவிற்கு அன்னை தடையாக இருப்பதால் அவளை இளைய நெஞ்சங்கள் வெறுக்கும் நிலையை இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. இந்நிலையினை இன்றும் சமுதாயங்களில் நாம் காணமுடிகிறது.

## கற்பு-விளக்கம்

'கற்பு' என்பதற்கு பல்வேறு விளக்கங்கள் உள்ளன. 'கற்பு' கல் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது. கல் என்பதற்கு 'கற்றல்', 'தோண்டுதல்', 'கல்' என்ற பொருள்களைக் கூறலாம். கற்றலாவது வாழ்வுக் கலையைக் கற்றலாகும். இது புத்தகப் படிப்பினால் மட்டும் அமையாமல் அனுபவத்தால் அமைவதாகும்.

---

80 குறுந். 353: 5 - 7.

81 மேலது. 292: 5 - 8.

தோண்டுதலாவது, உள்ளத்து உணர்வுகளைப் பண்பட்ட நிலையில் வெளிக் கொணர்வதாகும். கல்லாவது உறுதியை, ஊசலாடா நிலையைக் குறிப்பதாகும். இந்த மூன்று நிலைகளுக்கும் மக்களை வழிப்படுத்த வல்லது திருமணமாகும்.

திருமண வாழ்வின் அனுபவங்களைப் பெறப்பெற மக்கள், வாழ்க்கைக் கலையின் நுட்பத்தை அறிந்து, அதைத் தம் இல்லத்திற்கு வழிகாட்டியாக அமைத்துக் கொள்கின்றனர். இதனை, தொல்காப்பியர்,

> ''ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
> கற்பும் ஏரும் எழிலும் என்றா
> சாயலும், நாம் மடனும் என்றா
> ..........................................................
> காட்ட லாகாப் பொருள என்ப''[82]

என குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் கற்பினைப் பற்றி கூறும் போது கற்பெனப்படுவது கரணத்தொடு பொருந்தி கொள்ளுதற்குரிய மரபினையுடைய கிழவன், கிழத்தியைக் கொடுப்பக் கொள்வதாகும் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

> ''கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
> கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே''[83]

என்கிறார். களவுவழி நடைபெற்ற மணங்களன்றி, பெற்றோர் நடத்தி வைத்த மணங்களும் நிகழ்ந்தன என்பதை இலக்கியங்களால் அறியலாம். களவுவழி மணமாயினும், கற்பு வழி மணமாயினும் கரணத்துடன் நடைபெற வேண்டுமென தொல்காப்பியம் வலியுறுத்துகிறது.

---

[82] இளம்பூரணனார் உரை, தொல். பொருள். நூற். 243.
[83] மேலது, நூற். 140.

## திருமணம்

மனித வாழ்வில் நடைபெறும் ஒரு மங்கல நிகழ்ச்சியே திருமணமாகும். இது ஆணும், பெண்ணும் சேர்ந்து வாழ சமுதாயம் ஏற்படுத்தும் அமைப்பு முறையாகும். தமிழரின் அகவாழ்வு களவு, கற்பு என இரு பாகுபாடுகளையுடையது. கற்பு வாழ்வில் இருமனங்கள் இணைய வழிவகுப்பது திருமணம் ஆகும். திருமணத்தைத் தொல்காப்பியர் ‘கரணம்’ என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியரால் குறிப்பிடப்பெறும் திருமணம் இருவகைப்பட்டதாக உள்ளது.

1. பெற்றோர் கொடுக்க ஏற்றத் தகுதியுடையவர் கொள்ளும் மணமுறை.
2. காதலித்துத் தேடிக்கொண்ட துணையுடன் பெற்றோரை விட்டுப் பிரிந்து உடன்போக்கில் செய்து கொள்ளும் உடன்போக்கு மணமுறை.

சங்க இலக்கியத்தின் மூலம் பழந்தமிழர் மேற்கொண்ட திருமண முறைகளைக் காணலாம். அம்முறையின்படி இன்றும் நிகழ்வதைக் காணமுடிகிறது.

## பெரியோர் மணம் பேசுதல்

சங்ககாலத் தமிழர்கள் வாழ்வில் பெரியோர் கூடிப் பேசி நடத்தும் திருமணங்களும் நிகழ்ந்துள்ளன. தலைவன் - தலைவி ஆகியோரது காதல் ஒழுக்கம் பிறரால் ஏற்றுக் கொள்ளப்பட்டவுடன் திருமணப் பேச்சும், ஏற்பாடுகளும் தொடங்கும். பெரும்பாலும் தலைவனே, தலைவியின் பெற்றோரிடம் திருமணம் குறித்து பேசுதல் உண்டு. இதனை “நன்று புரி கொள்கை” அதாவது நன்மையை விரும்பும் கோட்பாடு என்று போற்றினர். இதனை,

"எந்தையும் யாயும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்த பின்
மலைகெழு வெற்பன்தலைவந்து இரப்ப
நன்றுபுரி கொள்கையின் ஒன்றாகின்றே"[84]

என குறுந்தொகைப் பகிர்கிறது. தலைவனின் இச்செய்கையைத் தோழி பாராட்டிக் கூறினாள். மேலும் திருமணப் பேச்சுக்கென தலைவன் வருதலையறிந்த தோழி, செவிலிக்கு அறிவித்தாள். செவிலியே சில நேரங்களில் அறிவித்தலும் உண்டு. இத்தகவலை (ஐங்குறுநூறு 294; 300 குறுந்தொகை-83) போன்ற பாடல்களும் விளக்குகின்றன.

களவில் புணர்ந்து பிரிந்தவரைக் கற்பு நெறியில் சேர்ப்பிக்கின்றவர் சங்ககாலத்தில் இருந்தனர். கையில் ஊன்றுகோலும், தலையில் பாகையும் அணிந்த பெரியோர் மக்கள் சேரும் மன்றங்களில் கூடிப் பேசுகின்றனர். இந்த நாள் பெருமை மிக்கது. ஆம், எல்லாம் நன்றாய் முடிகின்றன என்று தோழி தலைவியிடம் கூறும் பாடலிலிருந்து பெரியோர் நடத்தும் திருமணப் பேச்சை அறியலாம். இச்செய்தியை,

"அம்மவாழி! தோழி - நம்ஊர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர், வெண்தலைச் சிதவலர்
நன்று, நன்று என்னும் மாக்களோடு
இன்று பெரிது என்னும், ஆங்கனது அவையே"[85]

என குறுந்தொகை எடுத்துரைக்கின்றது.

---

[84] குறுந். 374.
[85] மேலது, 146.

இதிலிருந்து திருமணம் குறித்த பல்வேறு செய்திகளும் கலந்துரையாடப்பட்டு அனைவராலும் ஒப்புக் கொள்ளப்படும் வழக்கத்தினையும், பெரியோரை மணம் பேச விடும் மரபினையும் அறிய முடிகிறது.

## தலைவியின் பெற்றோர் வரைவு மறுத்தல்

வரைவு வேண்டி தலைவனோ, தலைவன் சுற்றத்தாரோ வந்த போது அதைத் தலைவியின் பெற்றோர் மறுத்ததை வெளிப்படுத்தும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. இதனை,

> ''அம்மவாழி தோழி நம்மூர்
> நிரந்திலங் கருவிய நெடுமலைநாடன்
> இரந்து குறையுறா அன் பெயரின்
> என்னாவது கொல்நம் இன்னுயிர் நிலையே''[86]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. தலைவன், தலைவியின் பெற்றோரிடம் இரந்து வேண்டிக் கொள்ளாது சென்றுவிட்டால் தலைவி என்ன ஆவாளோ எனும் தோழி கூற்று தலைவியின் பெற்றோர் வரைவு மறுப்பர் என்பதை வெளிப்படுத்துகிறது. மேலும் வரைவு எதிர்கொள்ள தமர் மறுத்தவழி தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நிற்றலை ஐங்குறுநூறு - 212; 218; 228 - பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

## பெற்றோர் வரைவு மறுக்கக் காரணங்கள்

தலைவியின் செல்வ நிலைக்கு ஒத்தவனாகத் தலைவன் இல்லாத காரணத்தால் களவுக் காதலுக்கு பெற்றோர் உடன்பட மறுத்ததை சங்க இலக்கியங்கள் வாயிலாக உணரமுடிகிறது.

---

[86] ஐங். 228.

தலைவியின் செல்வ நிலையினைக் கூறும் செவிலித்தாய், தலைவி எண்ணியதை உணராமல் இருந்து விட்டேனே என தன்னை நொந்து கொள்வதையும், பொருளாதாரப் பின்னடைவுடைய தலைவனுடன் உடன் போக்கு சென்ற தலைவியின் எதிர்கால நிலையை எண்ணி வருந்துவதையும் காண முடிகிறது. இத்தகவலை,

> ''சிறியோற்கு ஒத்த என் பெருமடத் தகுவி,
> சிறப்பும் சீரும் இன்றி, சீறூர்
> நல்கூர் பெண்டின் புல்வேற் குரம்பை
> ஓர்ஆ யாத்த ஒருதூண் முன்றில்
> ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ
> மேயினள் கொல்? என நோவல் யானே''[87]

என்ற அகப்பாடல் சுட்டுகிறது.

உறையூர் போன்ற செல்வச் செழிப்புடைய வீட்டை நன்கு அலங்கரித்து, அவளது செல்வ நிலைக்கேற்ப மணம் செய்விக்கவும் அவளது உள்ளம் ஏற்கவில்லை என தாய் வருந்துகிறாள். மேலும் செல்வச் செழிப்புடன் வாழ வேண்டிய தலைவி ஒரு பசு மட்டுமே கட்டப்பட்டுள்ள புல்வேய்ந்த குடிசையான வறிய இல்லத்தில் சிலம்புகழி நோன்பினை செய்து மணம் செய்து கொண்டாளோ? என தாய் வருந்துவது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

தலைவி தனது இல்லத்தின் செல்வச் செழிப்பையும் மறந்து பொருளாதாரப் பின்னடைவுடைய தலைவனை திருமணம் செய்து கொண்டு வாழ்வதை நற்றினைப் பாடல் - 110 குறிப்பிடுகிறது.

---

[87] அகம். 369: 21 - 26.

உடன்போக்கில் சென்ற தனது மகளின் வெறுமனையை நினைத்து தாய் வருந்துகின்ற மனைமருட்சிக் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது. பொன்கிண்ணத்தில் தேன்கலந்த பாலை ஏந்திச் சென்று ஊட்ட, அதையும் உண்ண மறுத்து ஓடும் சிறு விளையாட்டுப் பெண். இவள் தன்னை மணந்து கொண்ட தலைவனது குடும்பம் வறுமையுற்ற நிலையிலும், தன் தந்தையின் செல்வ வளத்தை எண்ணாமல் உணவு கிடைக்கும் வேளையில் பொழுது மாறி உண்ணுமளவிற்கு அறிவும், ஒழுக்கமும் உடையவளாக மாறிப் போனதை எண்ணி நற்றாய் வருந்துகிறாள். இது தலைவியின் பிறந்த வீட்டின் செழிப்பையும், புகுந்த வீட்டின் ஏழ்மையையும் காட்டுகின்றது. இச்செய்திகள் பெற்றோர் வரைவு உடன்படாமைக்கான காரணத்தை உணர்த்துவதாக அமைந்துள்ளன.

## களவுக்காதல் திருமணம்

களவுக் காதல் திருமணத்தில் முடிந்தமை பற்றிய பலபாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. தலைவியை உடன்கொண்டு போகும் தலைவன் அவனது வீட்டில் சான்றோர்கள் முன்னிலையில் அவளை முறைப்படி திருமணம் செய்து கொள்வான். காதலில் தொடங்கி கற்பில் முடிவு பெறும் மணமாதலால் இதனை ‘காதல் மணம்’ என்பர்.

களவொழுக்கத்தில் ஒழுகிய தலைவன் தோழியின் உதவியுடன் தலைவியை இரவில் அழைத்துக்கொண்டு சென்றுவிட்டான். சென்றவுடன் தலைவனது வீட்டில் திருமணத்திற்கான ஏற்பாடுகள் நடந்து, தமிழ்ச்சான்றோரால் அவர்களுக்கு கற்பின் சிறப்பு (கற்பு நெறி) கற்பிக்கப்பட்டு, அவர்கள் கை பிணைத்து

வைத்து இவர்கள் ‘‘கற்பு நெறியினராயினர்’’ என உரைத்தனர். அவர்கள் கணவன், மனைவியாக மணப்பந்தலில் காட்சியளித்தனர்.

இச்செய்தியை அறிந்த செவிலி நற்றாயிடம் நம் மகளை எல்லா உறவினரும் வந்து மணப்பந்தலில் நின்று மணச்சடங்கு செய்ய, காளை போன்ற மணவாளனுடன் இப்போது வருவாள் எனச் சொல்லி மகிழ்கிறாள். இக்காட்சியை,

‘‘மள்ளர் அன்ன மரவம் தழீஇ
மகளிர் அன்ன ஆடுகொடி நுடங்கும்
அரும்பதம் கொண்ட பெரும் பதவேனில்
காதல் புணர்ந்தனள் ஆகி, ஆய்கழல்
வெஞ்சின விறல் வேற்காளையொடு
இன்று புகுதரும் என வந்தன்று தூதே’’[88]

என ஐங்குறுநூறு விளக்குகிறது.

பரதவர் அயிலை மீனைக் கடலிலிருந்து நீக்கி அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்து மகிழ்வர். அதுபோன்று தலைவியைத் தலைவன் அவளது உறவினரிடமிருந்து நீக்கி தலைவனது ஊருக்குக் கொண்டு, அங்குள்ளவர்களை மகிழ்விப்பான். இதனால் ஊரின் அலர் அடங்கும் என்ற தோழி கூற்றிலிருந்து களவுக்காதல் மணத்தை அறியலாம். இதனை அகநானூறு 70 குறிப்பிடுகிறது. மேலும் இச்செய்தியை குறுந்தொகை 15; 51; 83; 351; நற்றிணை - 393; அகம் - 70; 282; 353 ஐங்குறுநூறு 103; 148; 230 போன்ற பகுதிகளும் விளக்குகின்றன.

---

[88] ஐங். 400.

## ஒரே குடிக்குள் மணத்தல்

சங்ககாலத் திருமணம் பெரும்பாலும் ஒரே குலத்திற்குள் நடந்த திருமண முறையாகவுள்ளது. ஒத்த குலத்தை விட்டு வெளி வட்டத்தில் திருமணம் செய்வது புதுமை திருமணங்களாகக் கருதப்பட்டிருக்கலாம். பெண்ணை இன்னாருக்குத்தான் கொடுப்பது என்ற வரையறை வலுவாகப் பின்பற்றப்பட்டுள்ளதை,

> ''ஆயர் மகன் ஆயின், ஆய மகள் நீ ஆயின்
> நின் வெய்யன் ஆயின், அவன் வெய்யை நீ ஆயின்
> நின்னை நோதக்கதோ இல்லைமன் நின் நெஞ்சம்
> அன்னை நெஞ்சு ஆகப்பெறின்''[89]

என முல்லைக்கலி சுட்டுகிறது.

காதல் மணமானாலும் ஒத்த குடிக்குள் நடக்கும் மணம் ஏற்கப்பட்டமை புலப்படுகிறது. ஐங்குறுநூற்றுப் பாடல் (230) குறவர் குலப் பெண்ணுக்கும், குறவர்குல ஆணுக்கும் நடந்த மணத்தைக் குறிப்பிடுகிறது. கலித்தொகை (39: 7 - 10) இக்கருத்தினை மெய்ப்பிக்கின்றன. இவ்வாறு சங்ககாலத் தமிழர் திருமணம் ஒரே குடிக்குள் நடந்ததை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

## வேறு குடிகளுக்குள் திருமணம் நடத்தல்

ஒரே குடிக்குள் மட்டுமின்றி இருவேறு குடிகளிலும் திருமணம் நடைபெற்றமையைச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. "யாயும் ஞாயும் யாராகி யரோ" என்ற குறுந்தொகை 40-வது பாடல் முன்பின் அறியாதவர்களிடையே மட்டுமன்றி, ஒருவேறு குடிகளுக்கிடையே நடைபெற்ற திருமணப் பதிவாக உள்ளது. "இது இரு இனக்குழுக்கள் தம்முள் கலந்த மணம் என்பர் ஆய்வாளர்"[90].

---

[89] கலித். 107: 19 - 22.

[90] மாதையன், பெ. சங்க இலக்கியத்தில் குடும்பம், பக். 96.

தலைவனது பிறப்பு நம் குடிப்பிறப்போடு ஒத்தது அன்று. உயர்ந்ததாக உள்ளதை அறிந்து கொண்டோம் என தோழி நற்றிணைப் பாடலில்,

> "கிழங்கு கீழ் வீழ்ந்து தேன் மேல் தூங்கி
> சிற்சில வித்திப் பற்பல விளைந்து
> தினைகிளி கடியும் பெருங்கல் நாடன்
> பிறப்போ ரன்மை யறிந்தனம்"[91]

என குறிப்பிடுவதைக் காணலாம். இதிலிருந்து காதலில் பிறப்பு, குடி, ஒப்புமை வேண்டப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. மணமாகாத நிலையில் பெண் இற்கடந்து மன்றம் செல்லுதலும், பிறர் ஊர் எங்குள்ளது எனக் கேட்டலும் இல்லை. இருப்பினும் ஊர் அறிந்து கொள்ளப்படாத தலைவனுடன் ஏற்பட்ட காதலால் அவனது ஊர் எங்குள்ளது என்று கேட்கச் செல்வோமா என தலைவியிடம் தோழி கேட்பதை நற்றிணை 365 வது பாடல் குறிப்பிடுகிறது.

## ஏறு தழுவல் மணம்

சங்கத் தொகை நூற்களுள் ஒன்றான கலித்தொகையின் முல்லைக்கலி, முல்லை நில மக்களின் வீர விளையாட்டான ஏறுதழுவலைப் பற்றிக் கூறுகிறது.

ஏறுதழுவல் என்பதை ஜல்லிக்கட்டு, காளைவிரட்டு, மஞ்சுவிரட்டு என வகைப் படுத்துவர். காளையை அடக்கி வெற்றி பெற்ற தலைவனுக்கு தலைவியை மணமுடித்துக் கொடுப்பது வழக்கமாக இருந்துள்ளது. முல்லைக்கலி மட்டுமே காட்டும் இந்த மணமுறையானது பின் பழந்தமிழ்க் கால மணமுறையாக இருந்துள்ளது. ஒருபுறம் களவுக்காதலும், மறுபுறம் ஏறுதழுவல் மணமுறையும் முல்லைக் கலியில் இருந்துள்ளன. இதனை,

---

[91] நற். 328: 1 - 6.

“ஓஓ இவள் பொருபுகல் நல்வேறு கொள்பவ ரல்லால்
திருமாமெய் தீண்டல ரென்று கருமமா
எல்லாருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதும்
சொல்லால் தரப்பட்டவள்”[92]

என ஏறுதழுவலுக்குரிய ஏற்பாட்டைச் செய்து, அதனைப் பலருக்கும் அறிவித்து ஏறு தழுவியவனுக்கே மணம் முடிக்கும் மரபை முல்லைக்கலி சமுதாயம் கொண்டிருந்தமையைக் காட்டுகிறது. கலித்தொகை 103: 69 - 73 வது பாடலடிகளும் அஞ்சாமல் ஏறுதழுவியவருக்கே ஆயமகளிரை மணம் முடித்துக் கொடுக்கும் மரபினைச் சுட்டுகிறது.

சங்ககாலப் பெண்களும் வீரமுடையவர்களாக இருந்தனர். கொல்லேற்றின் கொம்புக்கு அஞ்சுகின்ற ஆண்மகனை அல்லாமல், அடக்குகின்ற ஆண்மகனையே ஆயமகளிர் மறுமையிலும் மணப்பர் என்பதை,

“கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்”[93]

என்ற பாடலடிகள் புலப்படுத்துகிறது. இதன் மூலம் ஏறுதழுவல் மணமுறையை அறியலாம்.

## பொருள் கொடுத்து மணத்தல்

திருமணம் செய்யும் போது இக்காலத்தில் இருப்பது போலன்றி மணமகன், மணமகளுக்குப் பொன்னும், பொருளும் கொடுத்து மணந்ததை இலக்கியங்கள் மூலமாக அறியலாம். “பொன், பொருள், உரிமை, உழைப்பு இவையனைத்தும்

---

[92] கலித். 102: 9 - 11.
[93] மேலது, 103: 63 - 64.

ஒருங்கிணையக்கூடிய திருமணத்தில் பெண் ஒரு குழுவிலிருந்து இன்னொரு குழுவிற்கு மாற்றப்படும் நிகழ்வானது இருகுழுக்களிடையே திருமணப் பொருளியலை உருவாக்குகிறது''[94].

பெண் வீட்டாருக்கு மணமகன் வீட்டார் பொருள் கொடுத்து பெண் எடுக்கும் (பரிசத் திருமணம்) சங்ககாலத்தில் இடம் பெற்றுள்ளது. இதனை அகநானூறு,

> ''............................................ குறுமகள்
> நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
> பெற லருங் குரையள்''[95]

எனக் குறிப்பிடுகிறது. இதன் மூலம் பெண்ணை விரும்பியவன் சிறந்த பொருள்களையும், அணிகலன்களையும் கொடுத்தாலும் பெறுவதற்கரியவள் எனத் தலைவியைக் குறிப்பிடுவதையும், பெண்ணை விரும்பியவன் பொருள் கொடுத்து மணக்க விரும்புவதையும், தந்தை தரமறுப்பதையும் காட்டுகின்றது.

ஐங்குறுநூற்றுப் பாடல் 147-தலைவனின் உறவினர் தலைவியின் இல்லத்தாருக்கு வேண்டிய பொருட்களைக் கொடுத்து தலைவியை மணக்க முன்வந்த செய்தியைப் புலப்படுத்துகிறது.

பெண்ணின் தந்தைக்குப் பொருள் கொடுக்கும் மரபினை நற்றிணை 'சிறுவளை விலை' என்றும் கலித்தொகை 'விலை' என்றும் குறிப்பிடுகிறது. அகநானூற்றில் தலைவியின் அணிகலன்களுக்கு ஈடாக 'நியமம்' என்ற செல்வ வளமிக்க ஊரையே தந்தாலும் ஏற்கமாட்டார் என்ற செய்தியை,

---

[94] மாதையன், பெ. சங்க இலக்கியத்தில் குடும்பம், பக். 94.

[95] அகம். 280: 4 - 6.

“கருங்கட்கோசர் நியமம் ஆயினும்
‘உறும்’ எனக் கொள்குநர் அல்லர்
நறு நுதல் அரிவை பாசிழை விலையே”[96]

என சுட்டுகிறது. இதன் மூலம் பொருளோடு, வளமான ஊர்களையும் கொடுத்து மணம் புரியும் மரபிருந்ததை அறியலாம்.

இவ்வாறு பொருள் கொடுத்து மணத்தலை பாசிழை விலை, முலை விலை எனவும் அழைத்தனர். இதனை அகநானூறு 90: 12 - 14; 320: 3 - 4 கலித்தொகை 103: 71-73 என்ற பாடல்களும் உறுதிபடுத்துகின்றன.

மகளைக் கொடுக்க விரும்பாத தந்தையர், தமையன்மார் மனநிலைகளையும் சங்க இலக்கியம் சுட்டுகிறது. முதுகுடி மன்னனுடைய மகளை மணக்க விரும்பி வேந்தர் சிறந்த பொருட்களைக் கொடுத்தாலும் மணக்கவியலாது என கூறுவதை,

“முழங்குகடல் முழவின் முசிறியன்ன
நலம்சால் விழுப்பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவள்”[97]

என்ற புறப்பாடல் புலப்படுத்துகிறது.

பொருள் கொடுத்து மணப்பது சங்கச் சமுதாய நடவடிக்கைகளில் ஒன்றாக இருந்துள்ளதை இச்சான்றுகள் உறுதிபடுத்துகின்றன. பொருளைக் குறிப்பிட்டவர்கள் மட்டுமே கொடுக்க வேண்டுமெனவும், அதாவது

[96] அகம். 90: 11 - 13.
[97] புறம். 343: 10- 12.

மணத்திற்குரிய தகுதிப்பாடு உடையவர், குலமரபில் ஒத்தவர் மட்டுமே தரவேண்டும் என்பதைப் புறநானூறு வெளிப்படுத்துகிறது.

கிறிஸ்தவர்களின் திருமறையான வேதாகமத்திலும் சங்க காலத்திற்கு முன்பே பொருள் கொடுத்து மணக்கும் முறையினைக் காணலாம். ஆபிரகாம் என்பவன் தன் வயது முதிர்ந்த காலத்தில் தன் மகனுக்குப் பெண் பார்த்து திருமணம் செய்து வைக்க, தனக்கு உண்மையான ஒருவனை அனுப்பிப் பெண் பார்த்து வரச் செய்தான்.

அப்படியே அவன் சென்று பெண்பார்த்து அவளுக்கும், அவள் வீட்டாருக்கும் பொருட்களைப் பரிசாகக் கொடுத்து பெண்ணை அழைத்து வந்து திருமணம் நடைபெறச் செய்தான். இதனை ஆதியாகமம் 24: 3 - 4 பகுதிகளில் காணலாம். "அந்த ஊழியக்காரன் வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையும் எடுத்து (மணப்பெண்ணுக்கு) கொடுத்தது மன்றி, அவளுடைய சகோதரனுக்கும், தாய்க்கும் சில உச்சிதங்களையும் கொடுத்தான்"[98]. இதனால் வரதட்சணை வாங்கும் பழக்கமின்றி, பெண்ணுக்கும் அவள் வீட்டாருக்கும் கொடுத்து மணம் செய்த உயர்ந்த பண்பாட்டைக் காணமுடிகிறது.

இதற்கு 'முலைப்பாற்கூலி' எனும் மற்றொரு பெயரும் உண்டு என்பதை சென்னைப் பல்கலைக்கழக அகராதி எடுத்துக்காட்டியுள்ளது. இச்சொல்லிற்கு "பெண்ணின் தாய்க்குப் பெண்ணை வளர்த்ததன் பொருட்டு மணமகன் கொடுக்கும் பரிசப்பணம்" எனப் பொருள் கூறியுள்ளது. இது தனி மண

[98] ஆதி. 24: 53.

முறையாக இல்லையென்றாலும் மணந்துகொள்ளத் தகுதியுடையவர் திருமணத்தின் ஒரு அங்கமாக பொருளைக் கொடுத்து மணப்பதையே வெளிப்படுத்துகிறது.

### உடனிருந்து உழைத்து மணத்தல்

பெண் வீட்டில் தங்கியிருந்து அவர்களுக்காக உழைத்துப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதும் ஒரு மணமுறை. உரிய பெண்ணை மணக்க விரும்பும் ஆண் தான் விரும்பிய பெண் வீட்டில் தங்கி அவர்கள் செய்யும் வேலைகளில் தானும் ஈடுபட்டு உழைத்துப் பின் அவர்தம் பெண்ணை மணப்பதும் ஒரு சமுதாயச் செயற்பாடாக இருந்ததற்கு சங்கப்பாடலில் சான்றுள்ளது. இத்தகைய திருமணம் இருந்திருக்க வாய்ப்புள்ளமையை

> ‘‘நலம்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்
> பெறல் அருங் குரையல் ஆயின், அறம் தெரிந்து
> நாம் உறை தேஎம் மரூஉப் பெயர்ந்து, அவனொடு
> ..........................................................................................
> கானல் அம் பெருகுந் துறைப் பரதவன் எமக்கே’’[99]

என்ற அகப்பாடல் வெளிப்படுத்துகிறது. பெண்ணை விரும்பியவன் பொருள் கொடுத்து அவளை மணக்க இயலாது என்பதைத் தீர்மானித்துக் கொண்ட பின்னர், பெண்ணின் தந்தையுடன் இணைந்து அவன் செய்யும் எல்லா வேலைகளிலும் ஈடுபடவும் அவனுக்குப் பணிந்திருக்கவும் விரும்புகிறதை அறியமுடிகிறது.

சங்ககாலத்திற்கு முன்பே வேதாகமத்திலும் யாக்கோபு ராகேலுக்காக ஏழு வருடம் மாமனார் வீட்டில் வேலையாளாக இருந்து, வேலைக்குக் கூலியாக தன்

[99] அகம். 280: 5 - 11.

மகளை திருமணம் செய்து கொடுத்த நிகழ்வை ஆதியாகமம் 29: 15 - 20 பகுதிகளில் காணமுடிகிறது. இச்செய்திகளின் வழியாக உடனிருந்து உழைத்து மணக்கின்ற முறையும் பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில் இருந்திருக்க வாய்ப்புள்ளமையை அறியலாம்.

### தலைவியால் தலைவன் சிறப்படைதல்

சங்கக் காலத்தில் கற்புடைய மனைவியின் கணவன் என்று தலைவனை பாராட்டும் முறை இருந்தது. தலைமகன் ஒருவன் தன்னுடைய தேர்ப்பாகனிடம் உரையாடும் போது தன் தலைவியின் கற்பின் பெருமையையும், சிறப்பையும் கூறுகிறான். இதனை,

> "முல்லை சான்ற கற்பின்
> மெல் இயற் குறுமகள்"[100]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. "செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ" - என்று புறநானூறு எடுத்தியம்புகிறது.

அகவாழ்வில் ஒருவனது பெறற்கரிய பேறு கற்புடைய மனைவியைப் பெறுவது தான் என்பதை சங்க இலக்கியம் வெளிப்படுத்துகிறது. இதனை விவிலியத்தில் நீதிமொழிகள் 12: 4-ல் 'குணசாலியான பெண் தன் கணவனுக்குக் கிரீடமாயிருக்கிறாள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### கற்புடைய மனைவியால் செல்வவளமடைதல்

கற்புடைய மனைவியால் ஒருவனுடைய இல்லம் செல்வ வளம் வாய்க்கப் பெற்று சிறப்படையும். நல் மனைவி ஒருவருக்கு வாய்க்கப்பட்ட பின் அவருடைய

---

[100] அகம், 274: 13 - 14.

செல்வம் வளரும். ஓர் ஏர் உழவனாயிருந்த, ஒருவன் மனைவி வந்த பின் பெருஞ்செல்வனாக விளங்கியதை,

"ஓர் ஆன்வல்சிச் சீர் இல் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனி விழவு ஆயிற்று என்னும் இவ்ஊரே"[101]

என குறுந்தொகை விளக்குகிறது. ஒரு தலைவனின் மனைவியால் அவனுக்கு வாழ்வு வளம் பெருகிய நிலையை ஊரார் பேசிப் பாராட்டுவதைக் காணமுடிகிறது. இன்றையச் சூழலிலும் கற்புடைய மனைவியரால் செல்வ வளம் பெற்ற குடும்பங்களைக் காணமுடிகிறது.

## கற்புடைய மகளால் தந்தை போற்றப்படல்

கற்புடைய பெண்ணினது தந்தையென தந்தையர் பாராட்டப் பெற்றதை அகப்பாடல்,

"இழைஅணி பணைத் தோள் ஐயை தந்தை"[102]

என குறிப்பிடுகிறது. மனைவியின் கற்பால் கணவன் சிறப்பதும், மகளிரின் கற்பால் தந்தை சிறப்பதும் கற்பின் பெருமையை முன்வைத்துப் போற்றும் விதமாக அமைகிறது.

## மனைவாழ்க்கை

திருமணத்திற்குப் பின்னர் தலைவி நடத்தும் மனை வாழ்க்கையினைப் பல சங்கப் பாடல்கள் விளக்குகின்றன. இல்லத்தின் அரசியாகத் தலைவியை அவை குறிப்பிடுகின்றன. கற்பை மேன்மைப்படுத்துபவள் என்ற பொருள் தரும் வகையில் அகநானூறு 323 "கற்பு மேம்படுவி" என்று குறிப்பிடுகிறது.

---

[101] குறுந். 295: 4 - 6.
[102] அகம். 6: 3.

இல்லத்திற்கு ஒளியூட்டுபவள் என்ற முறையில் “மனைக்கு விளக்கு” என புறநானூறு 314 - கூறுகிறது. இல்லத்தில் பலர் இருப்பினும் தலைவியே முதன்மையானவள் என்பதை “மனைமுதல்” - என்று அகநானூறு 51-ல் சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம்.

தலைவி தலைவனுடன் மணம் நிறைந்த மனை வாழ்க்கை வாழத் தொடங்கிய பின்னர் அவள் அன்பு மேலும் வளரும். தலைவனின் மனநிலைக்கு ஏற்ப நடந்து கொண்டாள். தன் உணர்வுகளைப் பெருந்தன்மையுடனும், மென்மையுடனும் வெளியிட்டாள். இதனை,

“அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி
இன்றே இவணம் ஆகி”[103]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. மனை வாழ்க்கையில் தலைவி கொண்ட மனநிறைவும், மகிழ்ச்சியும் குறிப்பிடத்தக்கன. திருமணத்திற்குப் பின்பு தலைவியைக் காணத் தோழி வந்தாள். தலைவனின் பண்புகளை எடுத்துச் சொல்லித் தன்னைத் திருமணத்திற்கு உடன்படச் செய்த தோழிக்கு மகிழ்ச்சியுடன் தலைவி நன்றி தெரிவித்தாள்.

## சமையற்கலை

சமையற்கலையில் தலைவி சிறந்து விளங்கியமையைச் சங்கப்பாடல்களால் அறியலாம். கணவனுக்கு விருப்பமான சுவைமிக்க உணவுகளைத் தலைவி சமைத்தாள். காந்தள் மலர்போன்ற மெல்லிய விரல்களால்

[103] அகம். 225.

தலைவி கட்டித்தயிரைப் பிசைந்தாள். தன் மேலாடை நழுவி விழுந்த போது தயிர் பிசைந்த கையாலேயே அணிந்துகொண்டாள். தயிர்க் குழம்பைத் தாளிக்கும் போது 'குய்' என்ற ஒலியுடன் உண்டான புகை, அவள் குவளை போன்ற கண்களின் அழகைக் கெடுத்தது. இவ்வாறாகச் செய்த குழம்பு மிகச் சுவையாக உள்ளது எனத் தலைவன் உண்டான். அதைக் கேட்ட தலைவியின் முகம் நுண்ணிய மகிழ்ச்சியைப் புலப்படுத்தியதை,

> ''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
> கழுவுறு கலிங்கம், கழாஅது உடீஇ,
> குவளை உண்கண்குய்ப்புகை கழுமத்
> தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
> 'இனிது' எனக் கணவன் உண்டலின்
> நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே''[104]

என்று குறுந்தொகைப் பாடல் சுட்டுகிறது.

தலைவனுடன் கோபம் கொண்ட தலைவி சமையலறையில் இருந்தாள். அவள் வாழையிலையைக் கொய்து வந்து அதனைப் பிளந்து, பரிகலமாக அமைத்தாள். அடுப்பிலிருந்து வந்த புகை, கண்களை வருத்தவும் நெற்றியில் வியர்வைத் துளிகள் அரும்ப அதனை, முந்தானையால் துடைத்தாள். இச்செய்தியை,

> ''சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
> வாழை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
> புகையுண்டு அமர்த்த கண்ணள் தகை பெறப்
> பிறைநுதல் பொறித்த சிறு நுண் பல்வியர்
> அந்துகில் தலையின் துடையினள் நப்புலந்து
> அட்டி லோளே அம்மா அரிவை''[105]

---

[104] குறுந். 167.
[105] நற். 120.

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இச்செய்தியை திருவள்ளுவர்,

''மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை''[106]

என வாழ்க்கைத் துணையாகிய மனைவியாளவளின் சிறந்த பண்புகளைப் எடுத்துரைக்கிறார்.

இல்வாழ்வுக்குத் தகுந்த சிறந்த பண்புடையவளாகித் தன்னை மணந்தவனின் வளமைக்குத் தகுந்தபடி நடப்பவளே சிறந்த வாழ்க்கைத் துணை என குறிப்பிடுவதைக் காணலாம்.

## விருந்தெதிர் கோடல்

விருந்தினரைப் போற்றல் பழந்தமிழர்களின் சிறந்த பண்பாகும். விருந்தினர்களை வரவேற்பதற்காகத் தலைவி முயன்று சமையல் செய்த குறிப்புகளைப் பல நற்றிணைப் பாடல்களில் அறியலாம். இராப்பொழுதாயினும் வந்த விருந்தைக் கண்டு மகிழ்கின்ற இயல்பினையுடையவள் தலைவி. இதனை,

''அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள்''[107]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

இரவில் வந்த, விருந்தினர்க்குக் கொழுப்பு நிறைந்த தசையினை நெய் கலந்து சமைத்ததால் உண்டான புகைப்படிந்த நெற்றியில், வியர்வை தோன்றிய நிலையில் தலைவி திகழ்ந்தாள். என்பதை,

---

[106] குறள் - 51.
[107] நற். 142.

“எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்
கிளரிழை அரிவை நெய்துழந் திட்ட
விளரூன் அம்புகை எறிந்த நெற்றிச்
சிறுநுண் பல்லியர்”[108]

என்ற நற்றிணைப் பாடலடிகள் விளக்குகின்றன.

திருமணத்திற்கு முன்னரே விருந்தினரை வரவேற்கும் சிறப்பினைத் தலைவி பெற்றிருந்தாள். களவுக் காலத்தில் தலைவியைக் காண விரும்பிய தலைவன் விருந்தினன் என்ற தகுதியுடன் அவள் இல்லத்திற்கு வருதலுண்டு, என்பதை கலித்தொகை - 51வது பாடலடி குறிப்பிடுகின்றது. தலைவன் விருந்தினன் என்ற நிலையில் வந்திருத்தலால் அவனை எதிர்பார்த்தல் தலைவிக்கு இன்றியமையாததாகி விட்டது.

தொல்காப்பியரும் விருந்தோம்பலை சிறப்பித்துக் கூறியுள்ளார்,

“புகா அக்காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்”[109]

என குறிப்பிட்டுள்ளார். இதனால் இளமைக் காலத்திலிருந்தே விருந்தினரை வரவேற்பதில் தலைவி நன்கு பயிற்சி பெற்றிருந்தமையை உணரமுடிகிறது. இவ்வாறு விருந்தினரை வரவேற்றல் மற்றும் விருந்தோம்பல் மூலம் குடும்ப உறவுகள் வலுவடைகின்றன.

[108] மேலது - 41.
[109] இளம்பூரணனார் உரை, தொல். பொருள், நூற் - 105.

## களிமண் தேய்த்து நீராடுதல்

மகளிர் தம் கூந்தலில் களி மண் தேய்த்து நீராடும் வழக்கத்தை சங்க இலக்கியம் எடுத்தியம்புகிறது. சங்ககால மகளிர் கூந்தலின் எண்ணெய்ப் பசை, சிக்கு ஆகியவற்றை நீக்குவதற்காக களிமண்ணைத் தேய்த்து நீராடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். களிமண்ணை (எருவாகிய மண்) கூந்தலிலிட்டு பிசைந்து நீராடுவதற்காக தலைவியும், தோழியும் ஆற்றின் புறத்தே செல்லும் நிலையை,

> ''கூழைக்கு எருமணம் கொணர்கம் சேறும்
> ஆண்டும் வருகுவள் பெரும் பேதையே''[110]

என குறுந்தொகையில் உ.வே. சா விளக்கமளித்துள்ளார்.

## முல்லைப்பூ சூடும் மரபு

மகளிர் தங்கள் இல்லத்துத் தோட்டத்தில் முல்லையை நட்டு வைப்பர். தங்கள் கற்பு நெறிப்பட்ட வாழ்வின் அடையாளமாக முல்லை மலரைச் சூடுவர். தலைவியின் கூந்தல் முல்லை போன்று மணம் வீசுகிறது என கூந்தலின் இயற்கை மணத்தை தலைவன் பாராட்டுவதாக பரணர் பாடியுள்ளார். இதனை,

> ''எல்லுறும் மௌவல் நாறும்
> பல் இருங் கூந்தல் யாரளோ நமக்கே''[111]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இன்றைய நாட்களிலும் உறவினருடன் பெண் பார்க்கச் சென்று அவளைத் திருமணம் செய்வதற்கு அடையாளமாக தலைவியின் தலையில் முல்லைப் பூ சூடும் மரபு காணப்படுகிறது.

---

[110] குறுந். 113: 5 - 6.
[111] மேலது. 19: 4 - 5.

### தாய்மைப் பேறு

மக்கட்பேறு நற்பேறுகளில் ஒன்றாகும். அறிவறிந்த மக்களைப் பெறுவதைவிடச் சிறந்த பேறு வேறேதும் இல்லை என்கிறார் திருவள்ளுவர். இக்கருத்தை சங்கப்பாடல்களிலும் காணலாம். பகைவரும் விரும்பும் குற்றமற்ற தோற்றத்தினைக் கொண்ட மக்களைப் பெற்றோர் தலைமைப் பண்புடையோராவர். அவர் இந்த உலகத்தில் புகழோடும் விளங்குவர். மறுமை உலகத்தில் வாழும் பேற்றினையும் பெறுவர். இவ்வாறு பலர் கூறிய மொழிகளெல்லாம் உண்மையாதலைத் தலைவி கண்கூடாகக் கண்டு, மகிழ்ந்து தன் தோழியிடம் கூறினாள். இதனை,

> ''இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
> மறுமை உலகமும் மறுவின் நெய்துப
> செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
> சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
> பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
> வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி''[112]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

குழந்தைப் பேற்றால் தலைவியின் உடல் நலம் மெலியும், எண்ணெய் தேய்த்துக் குளிக்கையில் அவள் வெண்சிறு கடுகைப் பயன்படுத்தினாள் என்பதை

> ''ஐயவி யணிந்த நெய்யாட் டீரணிப்
> பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கை''[113]

[112] அகம். 66.
[113] நற். 40.

என்பதால் அறியலாம். தலைவி குழந்தையை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டினாள். பின்பு நறுமணம் கமழும் புகையுடன் மைகொண்டு கண்களை அழகு செய்தாள். அவற்றால் அவள் ஆடை அழுக்கடைந்தது.

குழந்தையைத் தழுவும்போது அவள் மார்பிலே பால் சுரந்தது. அதனால் ஆடை மேலும் மாசடைந்தது. அவள் தோள்களில், ஈன்று அணிமைத்தாய முடைநாற்றம் வீசியதை,

> ''நெய்யும் குய்யும் ஆடி மையொடு
> மாசுபட்டன்றே கலிங்கமும் தோளும்
> திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
> புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே''[114]

என தாய்மையின் இயல்பினை நற்றிணைப் பாடல் அழகுற எடுத்தியம்புகிறது. குழந்தைக்கும், தாய்க்குமுள்ள இனிய தொடர்பினை இப்பாடல் வழி அறியலாம்.

குடும்பத்திற்கும், உற்றார் உறவினர்க்கும் குழந்தை அளவற்ற இன்பத்தை நல்க வல்லது. குழந்தைப் பேற்றால் பெறும் இன்பங்களைத் திருவள்ளுவர் மக்கட்பேறு என்ற அதிகாரத்தில் அழகுற எடுத்தியம்புகிறார்.

பாண்டியன் அறிவுடை நம்பி பாடிய புறநானூற்று 188-வது பாடல், மக்கட் பேற்றால் பெறும் தூய இன்பத்தை எடுத்துச் சொல்கிறது. படைக்கப்படும் எல்லாச் செல்வங்களையும் பெற்றுப் பலரோடு கூடி உண்ணும் உடைமை நிரம்பிய செல்வம் உடையவர்களாயிருந்தாலும், தத்தித் தத்தி நடந்து, பிஞ்சுக்கையை நீட்டி தட்டிலே உள்ளதை தரையிலே இட்டும், உடம்பெல்லாம் சிதறியும், இவ்வாறு அறிவை

[114] நற். 380.

இன்பத்தால் மயக்கும் மக்கள் இல்லாதவர்க்கு தம் வாழ்நாளின் பயனாகிய முடிக்கப்படும் பொருள் இல்லை என குறிப்பிட்டுள்ளார்.

செவிலி கூற்றுப்பத்து ஐங்குறுநூறு 401-410 வரையுள்ள பகுதிகள், குழந்தையுடன் கூடிய தலைமக்களின் இன்பத்தை இனிய முறையில் விளக்குகிறது.

## தலைவியின் தாயுள்ளம்

தலைவன் சில சமயங்களில் தவறு செய்வதுண்டு. அதனைப் பொறுத்து மன்னிக்கும் தலைவியின் தாயுள்ளம் சங்க இலக்கியத்தின் மூலம் புலனாகின்றது. தலைவன் செய்கின்ற தவறை மறந்து ஒரு தாயாக இருந்து அதனை சகிக்கின்றாள். அதுமட்டுமன்று நீயே அடுத்த பிறவியிலும் என் கணவனாக வேண்டும் என்று கூறுகிறாள். இதனை,

> "இம்மை மாறி மறுமையாயினும்
> நீயாகியர் எம் கணவனை
> யானாகியர் நின் நெஞ்சுநேர்பவளே"[115]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இந்நிலையைப் பார்க்கும் போது தலைவியின் மன்னிப்போம், மறப்போம் என்ற பண்பு வெளிப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் மணமுறிவு பற்றிய செய்திகள் காணப்படவில்லை. அதற்கு அவர்களின் விட்டுக் கொடுக்கின்ற மனநிலையும், மன்னித்தல் என்ற தெய்வீகப் பண்பும் காரணமாகும்.

---

[115] குறுந். 49: 3 - 6.

விட்டுக் கொடுத்தல், மன்னித்தல் என்பது இன்றைய காலகட்டத்தில் வெறும் வாய்மொழி பேச்சாகவே காணப்படுகிறது எனலாம். ஆகவே எங்கு பார்த்தாலும் மணமுறிவு என்பது சர்வசாதாரணமாகி விட்டதைக் காண முடிகிறது. இயந்திரமயமான இக்காலத்தில் அன்பு என்பது மாயமாக காணப்படுவதே இந்நிலைகளுக்குக் காரணம் என்பதை உணரமுடிகிறது. மனைவி கணவனுக்கு எல்லா வகையிலும் உறுதுணையாக விளங்க வேண்டும். ஆகவே தான் அவளை வாழ்க்கைத் துணை என்றனர். கணவன் பொருள் தேடச் சென்ற போதும், போர் மேற்சென்ற போதும் பிரிவைத் தாங்கிக் கொண்டு ஆற்றியிருக்கும் தன்மையை,

> ‘‘முல்லை சான்ற கற்பு’’

என நற். 142: 10 குறிப்பிடுகிறது.

கற்பினால் தன்னைக் காத்து கணவனை உணவு முதலியவற்றால் பேணி இருவர் மாட்டும் அமைந்த புகழைக் காப்பவளே சிறந்த பெண் என்பார் வள்ளுவர். இதனை,

> ‘‘தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்’’[116]

என்ற குறட்பாவில் சுட்டிக்காட்டியுள்ளார்.

வறுமையிலும் செம்மைப் போற்றும் பண்புடையவளாக இருந்தாள். கணவன் வறுமையுற்றபோது தந்தை தந்த செல்வத்தைப் பெறாது அவனது வளத்திற்கேற்ப வாழ்ந்தாள். இதனை,

> ‘‘பொழுது மறுத்து உண்டனை’’[117]

---

[116] குறள் - 56.
[117] நற். 110: 3.

என்ற நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது. கணவனது கண்ணுக்கு இனிமையாகவும், அவன் விரும்பும் வகையில் தன்னைப் புனைந்து கொண்டு தீயவற்றின் பால் அச்சங்கொண்டு இடமறிந்து வாழ்ந்து வந்தாள் தலைவி.

அன்னை அலைத்த குழந்தையைத் தாங்குவதற்கு தந்தை, சுற்றம், நட்பு ஆகிய யாவும் இருப்பினும், அக்குழந்தையானது தாயின் அன்பினை நாடி ஓடுதலே இயல்பாகும். அதுபோல தலைவன் அருளின்றி பிரிந்தாலும், அவன் அன்பு ஒன்றையே பெற்று வாழும் இயல்புடையவளாக தலைவி விளங்கியதை சங்கப் பாடல்கள் வலியுறுத்துகின்றன.

## தொகுப்புரை

சங்க இலக்கியங்கள் மக்களின் வாழ்வியலை நெறிப்படுத்துவதாக அமைந்துள்ளன. சங்ககால இலக்கியங்கள் காலத்தாலும். பொருளமைப்பாலும் பழமையானவையாகும். படிப்படியாக வளர்ந்து வந்த மக்களின் குடும்ப உறவுமுறைகள், உயர்ந்த பண்பாடு, திருமணம், உடன்போக்கு மணம், விட்டுக் கொடுத்தல், மன்னிக்கும் பண்பு போன்றவற்றை இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

உடன் போக்கினை கற்பு எனக்கொள்ளும் பாங்கும், அவர்களைச் சான்றோர்களே திருமணம் செய்து வைத்த நிலையினையும் அறிய முடிகிறது. உடன் போக்கினை ஏற்றுக்கொள்ளும் பாங்கும், எதிர்க்கும் நிலையும் சங்க கால தமிழரிடையே காணப்பட்டதை சங்க இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம். பெண்கள் கற்பினைப் பேணுபவர்களாக இருந்தனர். தான் காதலித்த ஒருவனையே திருமணம் செய்தல் கற்பு என உறுதியாக இருந்தனர். உலகத்தையே பெறுவதாக

இருந்தாலும் சிறந்த குடியில் பிறந்த மகளிர் விரும்பியவனையன்றி வேறொருவனைத் திருமணம் செய்து கொள்ளார் என்பது கற்பின் சிறப்பைக் காட்டுவதாகும்.

பண்டைத் தமிழர் வாழ்வில் திருமணம் என்னும் அமைப்பு ஒழுக்க நெறியைப் புகட்டுவதாகவும், மரபு முறைகளைப் பின்பற்றத் தூண்டுவதாகவும், ஒற்றுமையை நிலைநாட்டும் களமாகவும் இருந்துள்ளது.

தலைவியின் உடன் போக்கில் தாய் புலம்பும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் அவலச்சுவை மிகுந்த பாடல்களாகும். தலைவியின் ஆற்றாமைப் பாடல்களும் அவலச் சுவையுடையவை, ஆயினும் தாய் கூற்றுப் பாடல்களே நெஞ்சை உருக்கும் தன்மையுடையனவாகும்.

சங்க இலக்கியத்தில் மணமுறிவு பற்றிய செய்திகள் இல்லாமைக்கு அவர்களின் விட்டுக்கொடுத்தல், மன்னித்தல் போன்ற உயர்ந்த பண்புகள் காரணமாகும். இவற்றால் சங்க இலக்கியம் நல்லதோர் குடும்ப உறவினைக் காட்டும் பேழையாக அமைந்துள்ளது.

முன்னுரை

சமூகம் - விளக்கம்

சமுதாய அமைப்பு

உயர்ந்த நாகரிகச் சமூகம்

விருந்தோம்புதல்

ஈதல் பண்பு

விழாக்கள் உணர்த்தும் சமூக உறவுகள்

மன்றம்

சங்க காலப் பொருளாதார நிலை

வேளாண்மையில் பெண்கள்

தினை காத்தலில் பெண்கள்

பெண்கள் பயன்படுத்திய ஒலிக்கருவி

தினை - உலர வைத்து குற்றுதல்

முல்லை நில - பொருளாதாரத்தில் பெண்கள்

மருத நில வேளாண்மையில் பெண்கள்

விதைத்தலும், நாற்று நடுதலும்

களையெடுத்தல்

அறுவடைச் செய்தல்

கதிரடித்தல்

வள்ளைப்பாட்டு

நெய்தல் நிலப்பொருளாதாரத்தில் பெண்கள்

பாலைநில மக்களின் நிலை

பண்டமாற்றில் பெண்கள்

கைவினைக் கலைகள்

பாசறைப் பணிப்பெண்கள்

சிறுதொழு மகளிர்

பெரு முது பெண்டிர்

பெண்கள் மலர் விற்றல்

பரத்தையர்

தொகுப்புரை

## முன்னுரை

சங்க இலக்கியங்கள் காலத்தாலும், பொருளமைப்பாலும் பழமையானவை. சங்க கால நாகரிகமும், பண்பாடும் மிகச் சிறந்தவை என்பதற்கு சங்க இலக்கியம் சான்றாகும். படிப்படியாக வளர்ந்து வந்த தமிழர்களின் உயர்ந்த பண்பாட்டைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். அகவாழ்விலும், புறவாழ்விலும் சங்கத் தமிழர்கள் சிறந்து விளங்கினர் என்பதை சங்க இலக்கியம் புலப்படுத்துகிறது.

சங்க காலத்தில் வளர்ச்சியடைந்த சமுதாய அமைப்பு இருந்தது. ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ்ச்சமுதாயம் சீரோடும், சிறப்போடும் விளங்கியது.

''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே
வாளொடு முன் தோன்றி மூத்த குடி தமிழ்மொழி''

சங்க காலம் பற்றிய சமுதாயச் செய்திகளைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது. சங்ககாலத் தமிழர்களிடம் காணப்பட்ட சில வழக்கங்கள் இன்றும் நடைமுறையிலுள்ளன. சமுதாயம் என்பது பலரும் கூடி வாழும் அமைப்பாகும். இது மக்களால் மக்களுக்காக உருவாக்கப்பட்டது. பல்வேறு வண்ண மலர்கள் ஒன்றிணைந்து மாலையாவது போல மதத்தால், இனத்தால், மொழியால் வேறுபட்டவர்கள் ஒன்றிணைந்து வேற்றுமைக்குள் ஒற்றுமை கண்டு வாழ்வது சமுதாயமாகும்.

ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கும் சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளைச் சமூகம் என்கிறோம்.

சமூகம் என்பது செயல்பாடுள்ள ஒரு குழுவாகும். பல மனிதர்களைக் கொண்டு சமூகம் உருவாக்கப்பட்டிருப்பினும் சமூக அமைப்பில் தனி மனித நலன்கள் சமூக நலன்களுக்கு உட்பட்டு அமைகின்றன. சமூகத்தின் ஒவ்வொரு செயல்பாடும் சமூக உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் பிரித்து அளிக்கப்படுகின்றன. சமூகத்தின் வளர்ச்சிக்கும், தேய்வுக்கும் அதன் உறுப்பினர்களே காரணமாவர்.

சங்ககால மக்கள் தாங்கள் செய்யும் தொழிலை நம்பி இருந்தனர். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொழில் துணையாக இருந்தது. குறிஞ்சி நிலத்தில் குறவன், குறத்தி; முல்லை நிலத்தில் ஆயர், ஆய்ச்சியர்; மருத நிலத்தில் உழவர், உழத்தியர்; நெய்தல் நிலத்தில் பரதவர், பரத்தியர்; பாலை நிலத்தில் எயினர், எயிற்றியர் என நில அமைப்பில் மக்கள் நிபந்தனையின்றி கிடைத்ததைக் கொண்டு வாழ்ந்தனர்.

சங்க காலத்தில் தினணகளுக்கிடையே நடைபெற்ற பண்டமாற்று வணிகம், மன்றம் போன்றவை வாழ்க்கைக்குத் தேவையானதாக இருந்தது. இவற்றால் சமுதாய உறவு முறைகள் மேன்மேலும் வலுவடைவதாக இருந்தது என்பது புலனாகிறது.

**சமூகம் - விளக்கம்**

சமூகம் என்பது ‘‘பொதுவான பண்புகளையும், நியதிகளையும் கொண்டு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்கள் தொகுதி எனவும், ஒரு குறிப்பிட்ட தொழில், துறை முதலியவற்றைச் சேர்ந்தவர்களின் தொகுதி அல்லது இனம்’’[1] என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

---

[1] க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 544

சமூக அமைப்பு என்பது தனிமனித நிலையிலிருந்து படிப்படியாக மன அளவில் வளர்ச்சி பெற்று ஆண், பெண் இணைந்து சந்ததிகளை உருவாக்கி பின்னாளில் மிகப்பெரிய சமூக அமைப்பிற்கு வித்திட்டது எனலாம். ஒரு வரையறுக்கப்பட்ட பரப்பின் கீழ் வாழும் பல்வேறு சாதி, சமய மக்களுடைய சமூக வாழ்க்கையின் முழுமையான அமைப்பு சமுதாயம் ஆகும்.

“தனிமனிதர் குடும்பங்களாக, குழுமங்களாக, குழுக்களாக, குடிகளாகச் சேர்ந்து ஒருவருக்கொருவர் வாழ்வுக்காகவும், பாதுகாப்பிற்காகவும், வளர்ச்சிக்காகவும், பெருக்கத்திற்காகவும் சார்ந்தும், சேர்ந்தும் வாழும் போது சமுதாயம் உருவாகிறது”[2] என்று அன்னிதாமசு குறிப்பிடுகிறார். இவ்வாறு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்டகாலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் ஏற்படுத்திக் கொண்ட கூட்டமைப்பினை சமூகம் எனலாம்.

## சமுதாய அமைப்பு

ஐவகை நிலங்களின் அடிப்படையில் சமுதாய அமைப்பு இருந்தது. மலையும், மலை சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும்.

வெற்பு, பொருப்பு, சிலம்பு போன்ற சொற்கள் மலையைக் குறிப்பன. அதனால் குறிஞ்சி நிலத் தலைவன் வெற்பன், பொருப்பன், சிலம்பன் என்று அழைக்கப்பட்டான். தலைவி கொடிச்சி, குறத்தி என அழைக்கப்பட்டாள். குன்றில் வாழ்வதால் குன்றவர் என்றும், வேட்டைத் தொழில் செய்வதால் வேட்டுவர் என்றும், காட்டில் வாழ்வதால் கானவர் என்றும்

[2] அன்னிதாமசும், “கிறிஸ்தவமும், சமுதாயமும்”, ப. 1

அழைக்கப்பெற்றனர். ஒவ்வொரு நிலத்திற்கும் இசைக்கருவிகள், இசைப்பண்கள் தனித்தனியாக அமைந்தன. அந்தந்தப் பகுதிகளில் வாழ்கின்றவர்கள் ஒரு சமுதாயமாகவே வாழ்ந்தனர் என்பது தெரிகிறது.

காடும் காடு சார்ந்த இடத்திலும் வாழ்கின்றவர்கள் முல்லை நில மக்கள். அவர்களில் ஆடவரை ஆயர், கோவலர், இடையர், பொதுவர் என அழைத்தனர். பெண்களை ஆய்ச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர், மனைவி என்றும் அழைத்தனர். இவர்களும் ஒரு தனிச்சமூகமாக வாழ்ந்தனர்.

வயலும், வயல் சார்ந்த இடத்திலும் வாழ்ந்தவர்கள் மருத நில மக்கள். இவர்களில் மருத நிலத்தலைவனை ஊரன், மகிழ்நன் என்றும் உழவர், களமர் என்றும் அழைத்தனர். பெண்களை உழத்தியர், கடைசியர் என்று அழைத்தனர்.

கடலும், கடல் சார்ந்த இடத்திலும் வாழ்ந்த மக்கள் நெய்தல் நில மக்கள். இக்கடற்கரையைச் சார்ந்த நெய்தல் நில மக்களும் ஒரு தனிச்சமுதாயமாக வாழ்ந்தனர். சேர்ப்பன், பரதர், புலம்பன், அளவர் என்று அப்பகுதித் தலைவன் அழைக்கப்பட்டான். பரத்தியர், நுழைச்சியர், அளத்தியர் என பெண்கள் அழைக்கப்பெற்றனர். கடலில் கிடைக்கும் உப்பு விற்போர் உமணர் என அழைக்கப்பெற்றனர்.

மணலும், மணல் சார்ந்த இடமும் பாலை நிலமாகும். இப்பகுதி மக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர், வேடர் என அழைக்கப்பட்டனர்.

## உயர்ந்த நாகரீகச் சமூகம்

நாகரிகம் என்பது தமிழ்ப்பண்பாட்டில் சிறந்த ஒன்றாகும். நம் நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட அகழ்வாய்வுகள் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர் நாகரிக வாழ்வைப் பெற்றிருந்தனர் என்பதற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. பிற நாட்டு மக்கள் மொழியறிவு பெறாமலிருந்த மிகப் பழமையான காலத்திலே, தமிழர் தனிநாகரிகராய் விளங்கியமையைச் சங்கப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. இதனை,

> "முந்தை இருந்து நட்டோர் கொடுப்பினும்
> நஞ்சும் உண்பர் தனிநாகரிகர்"[3]

என்ற நற்றிணைப் பாடல், உயர்ந்த நாகரிகம் உடைய சமூகம் தமிழ்ச் சமூகம் என்பதை தோழி வாயிலாக உணர்த்துகின்றது. நட்புப் பாராட்டுதல், இரக்கம், பொறுமை, அன்பு, குற்றங்களை மன்னித்தல் என்ற சிறந்த பொருளைக் கொண்டதே இந்த நாகரிகம் என்ற சொல். இச்சொல்லிற்கு குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட காலத்தில் வாழும் மக்களின் சமூக வாழ்க்கை முறை என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (ப. 810) விளக்கமளிக்கிறது. தற்காலத்தில் இச்சொல்லானது முன்னேற்றம், வளர்ச்சி என்ற பொருளில் வழங்கப்பட்டு வருவதைக் காண முடிகிறது.

## விருந்தோம்புதல்

சங்கால சமுதாயத்தில் விருந்தோம்பல் மிக முக்கிய இடம் வகித்தது. சாவைத் தவிர்க்கின்ற அமிழ்தமாக இருந்தாலும் விருந்தினரை வெளியில்

---

[3] நற். 355

இருக்க வைத்து உண்பது தவறான செயலாகக் கருதப்பட்டது. காகம் கரைவது விருந்தினரின் வருகையைக் குறிப்பதாக மக்கள் கருதினர். காகத்திற்கு நெய்யோடு சோறு படைத்தல் இனிய பழக்கமாக மேற்கொள்ளப்பட்டது.

வாழ்வில் விருந்தோம்புதல் ஒரு முதன்மைக் கடமையாக மகளிர்க்கு அமைகிறது. சங்கத்தமிழரின் குடும்ப வாழ்க்கையில் காலையிலும், மாலையிலும் விருந்தினரை உபசரித்தல் ஒரு முக்கிய நிகழ்ச்சியாக இருந்ததை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

''மனைவியைப் பிரிந்துச் சென்ற கணவன் நலமோடும், விரைவாகவும் திரும்பி வர மனைவி பல விருந்தினருக்கு விருந்தோம்பல் சங்கத் தமிழர்களிடையே இருந்ததாக உ.வே. சாமிநாத அய்யர் குறிப்பிட்டுள்ளார்''[4].

தலைவன் வினைவயின் பிரிந்து சென்று மீண்டு மனைக்கு வரும் போது அவர்க்கு விருந்து செய்து மகிழ்ந்தனர். இதனை, குறுந்தொகை,

> ''மாலை நனி விருந்து அயர்மார்
> தேர் வரும் என்று உரை வாராதோ''[5]

எனவும்,

> ''சுடர் துணர் எடுப்பும் புண்கண் மாலை
> அரும் பெறற்காதலர் வந்தென விருந்து அயர்பு
> மெய்ம்மலி உவகையின் எழுதரு
> கண்கலிழ் உகுபலி அரக்குவோரே''[6]

---

[4] கோமதி நாயகம், பி. தமிழக சமுதாய பண்பாட்டு வரலாறு, ப. 31
[5] குறுந். 155: 6-7
[6] மேலது, 398: 5-8

என வரும் செய்யுள் பகுதிகள் தலைவர் வருகைக்காக மாலையில் விருந்து நிகழ்த்துவதாகக் கூறுகின்றன. எனவே விருந்திற்கு ஏற்ற பொழுதாக மாலைக் காலத்தைக் கொண்டதை அறியலாம்.

நெய்தல் நில மகளிர் தம் இல்லத்தில் விருந்திற்கு மற்றவர் வர வேண்டும், விருந்து படைக்க வேண்டும் என்று ஆவலுடன் இருந்தனர். விருந்தினர்க்கு விரைவில் உணவு படைக்க வேண்டுமென்ற கருத்தினால் மீன்பிடிக்கச் சென்ற ஆடவர் திரும்புவதை ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தனர். அவர்கள் படகையும், அதில் ஏற்றப்பட்டிருக்கும் விளக்கையும் பார்த்த வண்ணம் இருந்தனர். இச்செய்தியை,

> "விருந்து அயர் விருப்பொடு வருந்தினள்
> முறுவல் இன்நகை காண்கம்
> நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
> விருந்து அயர் விரும்பினர் வருத்து"[7]

என்ற நற்றிணைப்பாடல் விளக்குகிறது.

பொன் வளையல்களை அணிந்த இம்மகளிர் சமைத்த சோறானது கொக்கினது உகிர் போன்றிருந்தது. விருந்தினர்க்கு அச்சோற்றைக் கொடுத்ததையும், முற்றத்தில் பலியாக இட்டு அதனைக் காக்கைகள் தின்றதையும் நற்றிணை 258-வது பாடல் விளக்குகின்றது.

பெண்டிரது விருந்தோம்பல் உலகளாவிய நிலையில் உறவை வலுப்படுத்துவதாகவே காணப்படுகிறது. தலைவனது பிரிவிலும் கூட பெண்

---

[7] நற். 81: 6-9

விருந்தோம்பும் தலைமை பெற்றாள் என்பதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. “இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தல் பொருட்டு” என வள்ளளுவரால் வற்புறுத்தப்பட்டுள்ளது. தொல்காப்பியர் விருந்தோம்பலைக் குறித்து,

“விருந்து புறந்தருதலுஞ் சுற்றம் ஓம்பலும்
பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்”[8]

என பெண்கள் விருந்தோம்புதலைக் குறிப்பிட்டுள்ளார். எனவே விருந்தோம்பலானது குடும்ப உறவோடு சமுதாய உறவையும் தோற்றுவிக்கிறது. சமுதாயத்தில் நல்ல மதிப்பையும் ஏற்படுத்துகிறது.

**ஈதல் பண்பு**

ஈதல் பண்பு சங்ககாலத் தமிழரிடம் அதிகமாக காணப்பட்டது. பரதவர் பிடித்து வந்த மீன்களையும், சங்குகளையும், முத்தையும் தன்னை நெருங்கி வந்து வேண்டியவர்களுக்குப் போதும் எனக் கூறுமளவிற்கு வாரி வழங்கினர் என அகப்பாடல்கள் கூறுவதால் அறியலாம். இதனை,

“மோட்டுமணல்அடைகரைக் கோட்டு மீன்கெண்டி
மணம் கெழு பாக்கத்துப் பகுக்கும்”[9]

எனவும்

“இரந்தோர் வறுங்கலம் மல்கவீசி”[10]

---

[8] இளம்பூரணனார் உரை, நூற். 150
[9] அகம், 10: 11-12
[10] மேலது, 50

எனவும்,

> ‘‘விரிதிரைக் கண் திரள் முத்தம் கொண்டு ஞாங்காத்
> தேன் இமிர் அகன் கரைப் பகுக்கும்
> கானல் அம் பெருந்துறைப் பரதவர் நமக்கே’’[11]

என்ற பாடல்கள் புலப்படுத்துகின்றன. குறவன் அம்பெய்து கொன்ற பன்றியின் கொழுத்த தசைக்கறியை தலைவி, அவள் வாழும் பகுதியிலுள்ள அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்தாள். இதனை,

> ‘‘கானவன் எய்த முளவு மான் கொழுங்குறை
> தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு
> காந்தள் அம் சிறுகுடிப் பகுக்கும்’’[12]

என்ற பாடலடிகளால் அறியலாம். சங்ககால மகளிர் கிடைத்த உணவைத் தாம் மட்டும் உண்ணாது பிறர்க்கும் பகிர்ந்து கொடுத்து வாழும் இயல்பினர் என்பதை ‘‘சிறுகுடிப் பகுக்கும்’’ என்ற தொடரால் அறியலாம். இதன் மூலம் சங்ககால மகளிரின் உயர்ந்த மனப்பான்மை புலனாகிறது. மேலும் தமக்கெனச் சேர்க்கும் இன்றைய காலச் சமுதாயத்தில் ஈதல் பண்பிற்கு சங்ககாலத் தமிழர்களின் வாழ்வு சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

## மகளிர் விளக்கேற்றுதல்

இல்லறத்தின் மேன்மை ஒளியேற்றுதலாகும். இன்றும் திருமணம் முடிந்து மணமகள் புகுந்த வீட்டிற்குச் செல்லும் போது விளக்கேற்றி புதுமனைப் புகுவதைக் காண முடிகிறது. இதற்கு பெண்களின் கடமையும், இல்லறத்தின் பொறுப்பும் காரணமாகும். சங்க காலத்தில் தலைவன் பொருளீட்டச் சென்று

---

[11] அகம், 280

[12] நற். 85: 8-10

திரும்பும் போது இரவு நேரம் வந்து விடும். அவ்வாறு தலைமகன் வரவை எதிர்பார்த்திருக்கும் பெண்கள் வீட்டில் ஒளியேற்றி காத்திருந்தனர்.

வினை மேற்சென்ற தலைவன் இரவில் குறித்த பொழுதில் வரத் தாமதம் ஆகியது. இம்மாலைப் பொழுதில் வளையணிந்த மகளிர் தங்கள் இல்லங்களில் மீன் கொழுப்பைச் சேர்த்து உருக்கிய நெய்யில் விளக்கேற்றினர். விளக்கின் ஒளி பொருந்தி நிற்றலை,

> “இலங்கு வளை மகளிர் வியல்நகர் அயர
> மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண் சுடர்”[13]

என்ற பாடல் விளக்குகின்றது. இந்நிகழ்வு குடும்ப வாழ்வில் பெண்ணானவள் இல்லற விளக்காக செயல்பட்டதை உணர்த்துகிறது.

## விழாக்கள் உணர்த்தும் சமூக உறவுகள்

சங்க காலத்தில் விழாக்கள் வீடுகளிலும், ஊர்மன்றங்களிலும் முறையே நடைபெற்று வந்துள்ளது. இவ்வித விழாக்களும், சடங்குகளும் உறவுகள் சேர்ந்து மகிழ்வதாக காணப்பட்டன. உலகில் வாழும் பல்வேறு இனத்தவரும், மதத்தவர்களும் பல்வேறு விழாக்களைக் கொண்டாடுகின்றனர். மக்களது வாழ்வில் ஏற்படும் மனச் சோர்வினைப் போக்கி மகிழ்ச்சியும், எழுச்சியும் ஏற்படுத்துவதற்கு விழாக்கள் உறுதுணையாக அமைகின்றன.

சிறியவரிலிருந்து பெரியவர் வரையுள்ள அனைத்துத் தரப்பினரிடையேயும் சமூக உறவும், நட்பும் உண்டாக விழாக்கள் காரணமாகின்றன. மனிதனின் பிறப்பு

---

[13] நற். 215: 4-5

முதல் இறப்பு வரையுள்ள அனைத்து சடங்கு முறைகளாலும் சொந்த பந்தங்களிடையே நட்புறவு உண்டாகிறது. இதனால் நல்ல கலாச்சாரமும், பண்பாடும் வளர்ந்து வருகிறது. உடல், உள்ளம், ஆன்மாவிற்கு அன்பு, அருள், ஆனந்தம், ஆரோக்கியம், அமைதி ஆகியவை கிடைத்திட குடும்பமே கோயிலாக அமைந்து விடுகின்றது. இக்குடும்பத்தின் வாயிலாக சமூக பழக்கவழக்கங்கள் ஒவ்வொன்றும் உருவாகி வளர்ந்து வருகின்றன.

விழாக்கள், மங்கல மற்றும் அமங்கல நிகழ்வுகள் உறவு முறைகளை ஒன்று சேர்க்கும் களமாக அமைகின்றன. குடும்ப உறுப்பினர்களின் தொகுப்பே உறவு முறைகளாகும். உறவு முறைகளால் ஊர் சிறப்புறும். அப்படி சிறப்புப் பெற்ற ஊரில் நல்லவர்கள் வாழ்வர். அவ்வூரை மக்களும் விரும்புவர். இதனால் நாடு சிறப்படையும். மக்கள் கூடி தெய்வங்களின் பொருட்டு பேரூர்களிலும், சிற்றூர்களிலும் பெருவிழா கொண்டாடி மகிழ்ந்தனர்.

விழா நடக்கும் ஊர்களில் அதனை கண்டு, களிக்க உள்ளூர் மக்களும், வெளியூர் மக்களும் வந்து செல்வர். இதனால் சமூக உறவுகள் வலுவடைந்தது. இதனை,

> ‘‘ஊரே ஒலிவரும் சும்மையொடு மலிபு தொகு ஈண்டி
> கலிகெழு மறுகின் விழவு அயரும்மே’’[14]

எனவும்,

> ‘‘ஆடு இயல் விழவின் அழுங்கல் மூதூர்
> உடையோர் பன்மையின்’’[15]

---

[14] நற். 348: 3-4
[15] மேலது 90: 1-2

என்ற நற்றிணைப் பாடல்கள் விளக்குகின்றன. இக்குறிப்புகளால் மக்கள் பலர் திரண்டு ஓசை மிக்க மூதூரின் கண் வந்து விழாக் கொண்டாடியதை அறியலாம்.

விழாவிற்குச் செல்லும் ஆடவர், பெண்டிர் ஆடை, அணிகளால் தங்களை நன்கு ஒப்பனைச் செய்து சென்றனர். மேலும் விழா நிகழ்ச்சிகள் மகிழ்ச்சியளிப்பதாக அமைந்தது. என்பதை,

''பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
விழவு அணிமகளிர் தழை அணிக்கூட்டும்''[16]

என அகப்பாடல் எடுத்துரைக்கிறது. விழாவிற்குத் தம்மை அலங்காரம் செய்து கொள்ளும் பெண்கள், தங்கள் தழையாடைக்கு அழகு சேர்க்கும் பொருட்டு நெய்தல் பூக்களைப் பறித்து சேர்த்ததை அறிய முடிகிறது.

விழாக்காணும் ஊர்கள் நன்கு அலங்கரிக்கப்பட்டு விளக்குகளும், பூக்கள் முதலியவற்றாலும் அழகிய காட்சியளித்தது. இதனை,

''விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர்
நெய் உமிழ் சுடரின்''[17]

என அகப்பாடல் சுட்டுகிறது. நெய் ஊற்றப் பெற்ற விளக்குகளிலிருந்து சுடர் எழுந்ததையும், பூக்கள் விண்மீன்கள் போன்று தோன்றியதையும் அறிய முடிகிறது. இவ்வாறு விழாக்காலங்களில் மக்கள் மகிழ்ச்சியுடன் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்ததை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. தற்காலத்திலும் மக்கள் விழாக்களைக் காண்பதற்காக பல்வேறு ஊர்களிலிருந்து

---

[16] அகம் 70: 11-12
[17] அகம் 17: 19-20

வருவதைக் காணலாம். இந்நிகழ்வுகள் சமூகத்தில் ஒரு பிணைப்பை, உறவை உருவாக்குகிறது எனலாம்.

## மன்றம்

சங்ககாலத் தமிழர்கள் மன்றம் என்ற ஒன்றை அமைத்து அங்கு கூடினர். அக்காலக் கிராமப் பஞ்சாயத்துக்கள் என்று மன்றத்தினைக் குறிப்பிடுவர். மன்றங்கள் விவாதங்கள் நிகழ்த்தவும், அறிவார்த்தமான செய்திகளைப் பகிர்ந்து கொள்ளவும் பயன்பட்டன.

பலர் கூடுவதற்கு ஏற்ப நிழலும், இடமும் உடையமையால் ஆலமரத்தினடியில் பொதுமக்கள் கூடும் மன்றங்கள் இருந்தன. இங்கு கோசர் என்ற குடியினர் வந்து கூடினர். கோசர் என்பவர், மோகூர்ப் பழையனுடைய அவையில் விளங்கிய ஒருவகை வீரராவர். அவர்கள் வாய்மொழி பிழையாதவர்களாக இருந்தனர். என்பதை,

> ''தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய
> நால் ஊர்க் கோசர் நல்மொழி போல''[18]

என்ற பாடலால் அறிய முடிகிறது.

## கலை மன்றங்கள்

சங்ககாலத்தில் கலை மன்றங்கள் இருந்தன என்பதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. நகரில் விழாக்கள் நடைபெறும் போது கலை மன்றங்களில் நாடகங்களும், நடனங்களும் நடைபெற்றன. திருவிழாக் காலங்களில் சிறந்த

---

[18] குறுந். 15: 2-3

மலர்களைத் தெருவெல்லாம் தூவி, கலையறிவில் சிறந்த கூத்தர்கள் தெருவில் நின்று முழவென்னும் வாத்தியத்தை முழக்குவர். அந்த முழவோசைக்கு ஏற்றாற்போல் யாழை இசை கூட்டி வாசிப்பர்.

“பட்டிமன்றம் பற்றிய செய்தியை மணிமேகலை கூறுகிறது. இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் வெவ்வேறு மன்றங்கள் இருந்ததாக உ.வே. சாமிநாத அய்யர் குறிப்பிடுகிறார்”[19].

மறவர்கள் பழமை வாய்ந்த தமது சிற்றூரிலுள்ள மன்றத்து நிழலிலே படுத்துறங்கினர். இச்செய்தியை,

“அடு புலி முன்பின், தொடு கழல் மறவர்
தொன்று இயல் சிறுகுடி மன்று நிழற் படுக்கும்”[20]

என்ற அகப்பாடல் குறிப்பிடுகிறது.

### அறவோர் கூடும் மன்றம்

சங்க காலத்தில் கடுமையான தவறு செய்தவர்களை மன்றத்தில் அழைத்து விசாரித்து தண்டனை வழங்கியதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

அறமற்ற ஒருவன் இளம்பெண்ணின் பெண்மை நலத்தைக் கவர்ந்தான். பின்னர் அறவோர் கூடியிருந்த அவையின் முன்பாக அவளை அறியேன் என்று பொய்ச் சூளுரைத்தான். உடனே அவையத்தார் அவனது செயலை

---

[19] கோமதி நாயகம். பி, தமிழகச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு, பக். 33
[20] அகம். 75: 6-7

அறிந்தவர்களிடம் விசாரித்து உண்மையென தெரிந்து கொண்டனர். ஆகவே அவனை தளிர்கள் கொண்ட பெரிய மரக்கிளையில் இறுகக் கட்டி வைத்து அவனது தலையில் சாம்பலைப் பெய்தனர். அப்பொழுது அந்த அவையின்கண் மிகுந்த ஆரவாரம் எழுந்தது என்று தோழி கூறுவதை,

''திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய
அறனிலாளன் 'அறியேன்' என்ற
திறன் இல் வெஞ்சூள் அறிகரி கடா அய்
..........................................................
வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே''[21]

என அகப்பாடல் விளக்குகின்றது.

மூன்று கவர்த்த கிளைகளின் நடுவே கட்டி வைத்தலும், நீற்றினைத் தலையில் பெய்தலுமாகிய தண்டனை அக்காலத்தில் கடுமையான குற்றம் செய்த தீவினையாளர்களுக்கு வழங்கப்பட்டமையை இப்பாடல் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. இன்றும் தவறு செய்கிறவர்களைச் சட்டத்தின் முன் நிறுத்தி தண்டனை வழங்குவதைக் காண முடிகிறது.

### கலை மன்றங்கள் பாழ்படுதல்

பசுக்கூட்டங்களை வீரர்கள் கவர்ந்து சென்றதால் வளமான ஊர் மக்கள் வாழ்விழந்து குடிபெயர்ந்து சென்றனர். இதனால் ஊர் மன்றம் பாழ்பட்டு கிடந்தது. இதனை,

''கோடை நீடலின், வாடுபுலத்து உக்க
..........................................................
கொழுங்குடி போகிய பெரும் பாழ் மன்றத்து
நரைமூதாளர் அதிர்தலை இறக்கி''[22]

---

[21] அகம் 256: 17-21
[22] அகம் 377: 1-9

என்ற அகப்பாடல் புலப்படுத்துகிறது.

ஊர்மக்கள் குடிபெயர்ந்து சென்றமையால் திருவிழாக்கள் நிகழ்த்தப்படாமல் கலை மன்றங்கள் பாழ்பட்டு காணப்பட்டன. இதனால் கலைமன்றங்களுக்குள் மக்கள் நுழைவதற்கு அஞ்சுவர். அங்கே சிறிய பூக்களையுடைய நெருஞ்சியும், அருகம்புற்களும் முளைத்துக் காடாக மண்டிக் கிடந்தன. அம்மன்றங்களுக்குள் நரிகள் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. அழுகுரலெடுக்கும் கோட்டான்களும், ஆந்தைகளும் அலற, கூட்டமான ஆண் பேய்களும், பெண்பேய்களும் கூடியிருந்தன. இதனால் மன்றங்களுக்குள் மக்கள் துணிந்து செல்ல அஞ்சினர். என்பதை,

''அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் தீம்தொடை ஓர்க்கும்
..............................................................
பிணந்தின் யாக்கைப் பேய் மகள் துவன்றவும்''[23]

என்ற பாடலால் விளக்கப்படுகின்றது.

## சங்க காலப் பொருளாதார நிலை

ஒரு சமுதாயத்தில் பொருளாதார மேம்பாடு இருந்தால்தான் அங்கு பல்வேறு கலைகளும் சிறப்புப் பெற்றிருக்க முடியும். சங்ககாலப் பொருளாதார நிலையில் செல்வந்தர்களுக்கும், ஏழைகளுக்கும் இடையிலான இடைவெளி மிக விரிவானதாக இருந்திருக்க வேண்டும். உலகத்திற்கு மிக அடிப்படையானது உழவுத் தொழில். பழங்காலத்தில் உழவுத் தொழிலும், ஏனைய தொழில்களும் நடைபெற்றன. உழவும், வணிகமும், ஏனைய தொழில்களும் இல்லையெனில்

---

[23] பட். பா. 253

உலகம் இல்லை எனலாம். மகளிர் பல்வேறு வகையான தொழில்களைச் செய்தனர். ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த மகளிர் அந்தந்த இடத்திற்கேற்ற தொழில்களைச் செய்தனர்.

“பொருளாதாரம் என்பதற்கு பொருள் உற்பத்தி, சேவைகள் ஆகியவை ஒட்டுமொத்தமாக உருவாக்கும் வளம்”[24] என க்ரியாவின் தற்காலத் தமிழகராதி விளக்கம் கூறுகிறது.

## வேளாண்மையில் பெண்கள்

சங்ககாலத் தமிழர்கள் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். திருக்குறள் உழவுத் தொழிலுக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. நான்கு திணைகளும், நான்கு விதமான பொருளாதாரச் சூழலை உடையனவாகத் திகழ்ந்தன.

குறிஞ்சி மலை வளத்தை அடிப்படையாகக் கொண்டது. இந்நிலத்தில் தினை, வரகு எனும் வேளாண் செயற்பாடுகள் அதிக அளவில் நடைபெற்றது. இந்தப் புன்செய் வேளாண்மை ஆண், பெண் எனும் இருபாலருக்கும் உரிய சமுதாயச் செயற்பாடாக இருந்ததை சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

இயற்கை விளைபொருட்களான மூங்கில், நெல், கரும்பு, வள்ளிக்கிழங்கு, பலா, தேன் என்பவை குறிஞ்சி நில மக்களின் முக்கிய உணவுப் பொருட்களாக கபிலரால் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை புறநானூறு,

---

[24] க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப. 1035

''உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே
ஒன்றே, சிறியிலைவெதிரின் நெல் விளையுமே
இரண்டே, தீம் சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே
மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்குமே
நான்கே, அணிநிற ஓரிபாய்தலின் மீது அழிந்து''[25]

என குறிப்பிடுகிறது.

இந்த இயற்கை விளைபொருட்களுடன் வேளாண்விளை பொருட்களும் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன.

## காட்டெரிப்பு வேளாண்மை

சங்க இலக்கியத்தில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் வாழ்க்கை முறைக்கு அடுத்தபடியாக காட்டெரிப்பு வேளாண்மை நடைபெற்றது.

காட்டை எரித்து அவ்விடத்தில் புனம் உருவாக்கியதைப் பற்றி பல பாடல்களில் பதிவாகியுள்ளது. இதனை,

''யாஅம் கொன்ற மரம் சுட்ட இயவில்
கரும்பு மருள்முதல் பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை அன்ன பால் வார்பு''[26]

என குறுந்தொகை விளக்குகின்றது. காட்டிலுள்ள மரங்களை வெட்டி வீழ்த்திப் பின்னர் எரியூட்டித் தினைப் புனத்தை உருவாக்குவர். தினையின் தாள், கரும்பு போன்றும், கதிர்கள் பெண் யானையின் கை போன்றும் இருந்தன என்று குறிப்பிடுவதால் தினையின் செழிப்பினை உணரலாம்.

[25] புறம் 109: 3-9.
[26] குறுந். 198: 1-3

இத்தகு விவசாயத்தில் முதலில் மரங்களை வெட்டி, களைகளை நீக்கி, பின்னர் மேடு பள்ளங்கள் சரி செய்யப்படும் என்பதைக் குறுந்தொகை 214-வது பாடல் குறிப்பிடுகிறது.

உலகில் நடுத்தர வெப்ப மண்டலப் பகுதிகளிலும், அதிக வெப்ப மண்டலப் பகுதியிலும் உள்ள காட்டுப் பகுதிகளில் இந்த விவசாய முறை தோன்றியது. தமிழகப் பழங்குடிகளும் தமது மலைப்பகுதிகளில் இத்தகு விவசாயத்தைக் கொண்டிருந்தனர்.

பொதுவாகக் களிமண் கலந்த கெட்டியான மண்ணுள்ள மலைகளில் இந்த விவசாய முறை பரவாமல் இலகுவான மணற்பாங்குடைய பகுதிகளில் இவ்விவசாய முறை ஏற்பட்டது. இம்முறையில் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் ஒரே பகுதியில் பயிரிட்டனர். பின்பு அங்கு விளைச்சல் குன்றிவிட வேறு ஒரு பகுதியிலுள்ள காட்டை வெட்டி எரித்து அங்கு பயிரிட்டனர்.

காட்டெரிப்பு வேளாண்மையில் மேற்கொள்ளப்படும் காட்டழிப்பும், எரியூட்டலும் மண்ணின் மேற்பரப்பில் தேவையான சூட்டை ஏற்படுத்துகின்றன. இதனால் மண்ணின் அடிப்பகுதியிலுள்ள கனிமங்கள் சூடாகி மண்ணின் மேற்பரப்புக்குக் கொண்டு வர உதவுகிறது. கூடவே எரியூட்டப்பட்ட மரங்களின் சாம்பல் தரும் நைட்ரஜன் மண் வளத்தைக் கூட்டுகிறது.

இத்தகவல் குறுந்தொகை 198; 214; 291, நற்றிணை 285 அகம். 368 போன்ற பாடல்களில் பதிவாகியுள்ளதைக் காணலாம்.

கானவர் தினை, ஐவனநெல், அவரை முதலானவற்றைப் பயிரிட்டனர். தினைப்பயிரை அறுவடைச் செய்த பின் மறுகாலில் அவரைப் பயிரிட்டச் செய்தியை, குறுந்தொகை 82-வது பாடல் சுட்டுகிறது.

தமிழகத்தில் பல பழங்குடியின மக்கள் காட்டெரிப்பு வேளாண்மை செய்து வந்தனர். சங்க காலத்திற்கு முன்பிருந்தே இத்தகு வேளாண்மை நடைபெற்றுள்ளது.

“கானக்குறவர்களின் பொருளாதாரத்தில் பெண்களின் பங்கு மிக அதிகமாக காணப்பட்டது. காட்டெரிப்பு வேளாண்மையில் பெண்கள் விதைத்தல் தொடங்கி களையெடுத்தல், தினைகாத்தல், உணக்கல், கிழங்கு அகழ்தல், அறுவடைச் செய்தல் போன்றவற்றில் முக்கியப் பங்காற்றினர். ஆண்களின் வேலைப் பகிர்வை விடவும், பெண்களின் பங்கு அதிகமாக இருந்தது. ஆண்கள் காட்டழிப்பிலும், வேட்டையிலும் அதிகமாக ஈடுபட்டனர். பெண்கள் மற்ற வேலைகள் அனைத்தையும் செய்தனர். காட்டெரிப்பு வேளாண்மையில் பெண்கள் பெற்றிருந்த முக்கியத்துவம் உழுது பயிரிடும் நீர்ப்பாசன வேளாண்மை ஏற்பட்ட பின்னர் குறைந்து போனது”[27].

காட்டெரிப்பு வேளாண்மையின் உருவாக்கத்தால் புதிய தொழிற்கருவிகள் ஏற்பட்டன. விதைகள் நடுவதற்குப் பெண்கள் பயன்படுத்திய தோண்டுகழி மிக முக்கிய கருவியாகும். இக்கருவியின் கூரான நடுப்பகுதி பூமியில் விதை ஊன்றுவதற்கு, குழிபோட உதவியது. கூரான நடுப்பகுதிக்கு இரு பக்கத்திலும்

---

[27] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 83.

இருந்த சற்று வளைந்த கூர்முனைகள் களை எடுக்கவும், மண்ணைக் கிளறவும், கிழங்குகளை அகழ்ந்தெடுக்கவும் உதவின. இதனைத் தேனுக்குறும்பர்கள் ‘குழிக்கோல்’ எனவும் பளியர் ‘காம்பு’ எனவும் குறிப்பிடுகின்றனர்.

ஆகவே, ஆதி விவசாயி பெண்களே ஆவர். இவர்கள் பயன்படுத்திய இத்தோண்டுக் கழியே முதல் விவசாயக் கருவியாகும். இக்கருவியைக் கொண்டு பெண்கள் தினைப்புனம் காவல் செய்தனர். இதுவே பின்னாளில் தாய்த் தெய்வங்களின் சூலாயுதமாகவும் படிமலர்ச்சி பெற்றது என பக்த வத்சல பாரதி என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

“சங்க காலத்தில் வழக்கிலிருந்த காட்டெரிப்பு வேளாண்மை அண்மைக்காலம் வரைத் தமிழகப் பழங்குடிகளிடம் இருந்து வந்துள்ளது. இருளர்களின் காட்டெரிப்பு வேளாண்மை ‘கொத்துக்காடு’ எனப்படும். 1860-இல் ஆங்கிலேய அரசு காட்டுவளத்தைத் தனதாக்கிக் கொள்வதற்காக ‘மெட்ராஸ் காட்டுச் சட்டம்’ கொண்டு வந்தது. இதன் வழி இந்த விவசாயமுறை அதிகாரப்பூர்வமாகத் தடை செய்யப்பட்டது. இதனால் குறும்பர், மலையாளிகள் போன்ற சில பழங்குடியினரும் இந்த விவசாயத்தைப் பெருமளவு கைவிட்டனர்”[28] என பக்தவத்சல பாரதி என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

---

[28] பக்தவத்சலபாரதி, இலக்கிய மானிடவியல், ப. 91

## இரண்டு ஊடுபயிர்கள் பயிரிடுதல்

சங்ககாலக் குறவர்கள் மலை நிலத்தினைப் பண்படுத்தி, ஒரே நிலத்தில் தினை, அவரை போன்ற பயிர்களை விளைவித்து அறுவடைச் செய்தனர். இதனை,

> ''சாரல் பெரும் புனக் குறவன் சிறுதினை மறுகால்
> கொழுங்கொடி அவரை பூக்கும்''[29]

என குறிப்பிடுகிறது. இதனால் சங்க காலத் தமிழர்கள் இரண்டு ஊடு பயிர்கள் விளைவித்ததை அறிய முடிகிறது.

## தினைக்காத்தலில் பெண்கள்

தினைப் புனங்களுக்கு அருகில் வேங்கை மரங்கள் நிறைய இருந்தன. ஆகவே வேங்கை மரத்தின் மீது பரண் அமைத்தனர். தினைப்புனம் காக்க வேண்டி தாயும், தந்தையும் மகளை அனுப்புவர்.

தினைப்புனக் காவலுக்கு தாய் மகளை அனுப்பியதை நற்றிணைப் பாடல் விளக்குகின்றது. சிறிய கிளிகள் கொய்து அழிக்கும் தினைப்புனத்திற்கு காவலாகச் செல் என்று தாய் மகளை அனுப்பியதை,

> ''சிறு கிளி முரணிய பெருங்குரல் ஏனல்
> காவல் நீ என்றோளே''[30]

என்ற பாடலால் அறியலாம். இத்தகவலை குறுந்தொகை 141-வது பாடலும் புலப்படுத்துகின்றது.

---

[29] நற். 121: 1-2
[30] மேலது 389: 6-7

தினைப்புனக் காவலுக்குத் தம் இளம் மகளைத் தந்தை அனுப்பியச் செய்தியை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

தினைக்கொல்லையில் கதிர்களை உண்ணவரும் கிளிகளைத் தட்டை எனும் கிளிகடி கருவியால் ஒலியெழுப்பியும், கவண்கல் கொண்டும் விரட்டி வர தந்தை தன் மகளை அனுப்பியதை,

> "செவ்வாய்ப்பாசினம் கவரும் என்று அவ்வாய்த்
> தட்டையும் புடைத்தனை கவணையும் தொடுக்க என
> எந்தை வந்து உரைத்தனனாக"[31]

என நற்றிணை விளக்குகின்றது.

தினைப்புனக் காவல் இரவில் குறவர்களும், பகற்பொழுதில் குறமகளிர் பரணிலிருந்தும் காத்தனர். இதனை,

> "அன்னையும் அமர்ந்து நோக்கினளே
> ……………………………………………...
> சிறுகிளி முரணிய பெருங்குரல் ஏனல்
> காவல் நீ என்றோளே சேவலொடு"[32]

என்ற வகையில் குறமகளிர் காவல் காத்ததைப் பல பாடல்கள் விவரிக்கின்றன. நெல் விவசாயத்திற்கு முற்பட்ட தினை விவசாயத்தில் தினைக்காவல் ஆண்களாலும், பெண்களாலும் மேற்கொள்ளப்பட்டது. ஆண்களுக்கான காவல் நேரம் இரவாகவும், பெண்களுக்குரிய காவல் நேரம் பகலாகவும் இருந்தது. தினைப்புனம் ஆண்களை விட பெண்களால் தான் அதிகமாக காவல் காக்கப்பட்டது என்பதை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

---

[31] நற். 206: 4-6
[32] மேலது 389: 3-7

## பெண்கள் பயன்படுத்திய ஒலிக்கருவி

கிளியோட்டுதலில் பெண்கள் குளிர், தட்டை, தழல் என்னும் ஒலிக்கருவிகளைப் பயன்படுத்தினர். தட்டை என்பதற்கு மூங்கிலைக் கணுக்குக் கண் உள்ளதாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசை உண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி எனத் தட்டையைப் பற்றி நச்சினார்க்கினியர் கூறுவதாக அகம். 388-ஆம் பாடலின் உரை விளக்கம் கூறுகிறது. ஐங்குறுநூற்றின் 285-ஆம் பாடலின் உரை விளக்கம் தட்டை என்பது மூங்கில் கழியின் துண்டத்தைப் பிளந்து அமைக்கப்பட்ட கிளிகடி கருவியாகும் என விளக்கம் கூறுகின்றது. இச்செய்திகள் மூங்கிலால் செய்யப்பட்ட கிளியோட்டும் கருவியே தட்டையெனக் குறிப்பிடுகின்றன.

தழல் என்பது கையால் சுற்றும் போது தன்னிடம் பிறக்கும் ஓசையால் கிளி முதலியவற்றை ஓட்டும் கருவி என அகம் 188- ஆம் பாடலின் உரை விளக்கம் கூறுகின்றது. தட்டை, தழல் போன்றே குளிர் என்னும் கருவியும் ஓர் ஒலிக்கருவியே எனலாம்.

பெண்கள் தட்டையைப் பயன்படுத்தி கிளியோட்டியச் செய்தியை,

> "செவ்வாய்ப் பாசினம் கடீஇயர், கொடிச்சி
> அவ் வாய்த் தட்டையொடு அவணை ஆக"[33]

என்ற பாடலடி குறிப்பிடுகிறது.

[33] நற். 134: 4-5

குளிர் என்னும் ஒலிக்கருவியைப் பயன்படுத்தியச் செய்தியை,

"சிறுகிளி கடிதல் பிறக்கு யாவணதோ
குளிர் படு கையள் கொடிச்சி செல்க என"[34]

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

தழலைப் பயன்படுத்தி கிளியோட்டியச் செய்தியை,

"தழலை வாங்கியும், தட்டை ஓப்பியும்
அழர் ஏர் செயலை அம்தழை அசையும்"
குறமகள் காக்கும் ஏனல்"[35]

என்ற பாடல்களால் பெண்கள் ஒலிக்கருவிகளை முழக்கி கிளியோட்டியச் செய்தியை அறியலாம்.

## தினை உலர வைத்து குற்றுதல்

பெரிய மலையிலுள்ள அகன்ற பாறையில் குறிஞ்சி நில பெண்கள் தினையை உலர்த்தினர். இதனை

"நிரைவளை முன்கை நேர் இழை மகளிர்
இருங்கல் வியல் அறைச் செந்தினை பரப்பி"[36]

என்ற குறுந்தொகைப் பாடல் சுட்டுகின்றது.

மழை வரும் என்று அறிந்ததால் காய வைத்த தினையைக் கூட்டி குவித்து பாதுகாப்பாக வைப்பர் என்பதை,

"களிறு தொலைத்து உரறும் கடிஇடி மழை செத்து
செந்தினை உணக்கல் தொகுக்கும்"[37]

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

---

[34] நற். 306: 2-3
[35] அகம் 188: 11-13
[36] குறுந். 335: 1-2
[37] நற். 344: 10-11

தினைக் கதிர்கள் காய்ந்த பின்னர் சந்தன மரத்தாலாகிய உரலில் தினையை இட்டு யானைத் தந்தத்தால் இடித்தனர் என்றச் செய்தியை,

> ‘‘முகைவளர் சாந்து உரல், முத்து ஆர் மருப்பின்
> வகைசால் உலக்கை, வயின் வயின் ஓச்சி,
> அகவினம் பாடுவாம் நாம்’’[38]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

## ஐவன நெல் குற்றுதல்

ஐவன நெல் குற்றுவதற்கு யானையின் கொம்பாகிய உலக்கையும், சந்தன மரத்தால் ஆகிய உலக்கையும் பயன்பட்டன. பாறையிலுள்ள குழி உரலாகப் பயன்பட்டது. இதனை கலித்தொகை 43-வது பாடல் குறிப்பிடுகிறது.

## மூங்கில் நெல் குற்றுதல்

மலைப் பாங்கான இடங்களில் எவரும் பயிரிடாமல் மூங்கில் நெல் தானாகவே செழித்து வளரும். மூங்கிலின் உச்சியில் நெல் இருக்கும். இதனை ‘மூங்கில் நெல்’ என்பர். இது உணவாகப் பயன்படும். மூங்கிலிலிருந்து சேகரித்த நெல்லை காய வைத்து பின்னர் இடித்து தேவையற்றதை நீக்கி உணவாகப் பயன்படுத்தினர் என்ற தகவலை,

> ‘‘கோடு உலக்கையாக, நல்சேம்பின் இலைசுளகா
> ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து’’[39]

என்ற பாடல் குறிஞ்சி நிலப் பெண்களின் பொருளாதாரப் பங்களிப்பினை பறைசாற்றுகின்றது.

---

[38] கலி 40: 4-7
[39] கலி 41: 2-3

தேவையின் போது மகளிர் அறுவடை செய்து தூய்மைச் செய்த வெண்நெல்லை பூணிடப்பட்ட உலக்கையில் குற்றி அரிசியாக்கினர் என்பதை,

> "அடுமகள் முகந்த அளவாவெண்ணெல்
> தொடிமாண் உலக்கைப் பரூஉக்குற்றி அரிசி"[40]

என்ற புறப்பாடல் எடுத்தியம்புகிறது.

## முல்லை நில பொருளாதாரத்தில் பெண்கள்

மலைப்பகுதியை அடுத்தமைந்த காடும், காடு சார்ந்த இடமுமாகிய முல்லை இரு வேறுபட்ட பொருளாதார அடிப்படைகளைக் கொண்டது. ஒன்று கால்நடை வளர்ப்பு, மற்றொன்று புன்செய் வேளாண்மை.

முல்லை நிலத்தில் ஆடு மாடுகள் வளர்ப்பதை மக்கள் முக்கிய தொழிலாகக் கொண்டிருந்தாலும், தானியங்கள் விளைந்த வயல் வெளிகள் மட்டுமல்லாது பாக்கு, தென்னை, புளி, வாழை ஆகியவையடங்கிய தோப்புகளும் இருந்தன. முல்லை நிலப் பகுதியில் வேளாண் பொருளாதாரம் இருந்ததை இது காட்டுகின்றது. இந்த வேளாண்மை வானம் பார்த்த பூமி என்பதால் மழைக்கால வேளாண்மை மட்டுமே மேற்கொள்ளப்பட்டது.

கால்நடை வளர்த்தல் முல்லைக்குரிய தொழிலாக ஆரம்ப காலத்தில் இருந்தாலும் பின்னாளில் கலப்பைக் கொண்டு உழுது பயிரிடும் வேளாண்மையும் ஏற்பட்டது. இதனை, அகப்பாடல்,

---

[40] புறம் 399: 1-2

"பேர் உறை தலைஇய பெரும்புலர் வைகறை
ஏர் இடம் படுத்த இருமறுப் பூழிப்
புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து"[41]

என விளக்குகின்றது. ஆயர்கள் மேய்த்தலையும் பல்வேறு தானியங்கள் பயிரிட்டதையும் ஒரு சேர செய்தனர் என்பதை அகநானூறு 394-வது பாடல் விவரித்துக் கூறுகின்றது.

ஆ என்பது பசு, ஆயம் என்பது பசுத்திரள். அதை ஓம்பி வாழ்ந்தவர் ஆயர் எனப் பெயர் பெற்றனர் எனவும், "ஆய் என்னும் குடிப்பெயர் 'அர்' என்றும் பலர்பால் விகுதி பெற்று ஆயர் என ஆயிற்று எனவும் கொண்டு ஆயர், என்போர் தாம் கொண்டிருந்த பசுத்திரள்களாலும், குடியாலும் பெயர் பெற்றவராவர்"[42] என்று அ. முத்துசாமி கூறியுள்ளார்.

பொருளாதார உற்பத்திக்கான உழைப்பில் தாய், தந்தை, மகன், மகள் எனும் நால்வரும் உழைப்பில் ஈடுபட்டிருந்தமையைக் கலித்தொகை சுட்டுகின்றது. இதனை,

"புனத்துளான் என்னைக்குப் புகா உய்த்துக் கொடுப்பதோ?
இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ?
தினைக்காலுள் யாய்விட்ட கன்று மேய்க்கிற்பதோ?"[43]

என்ற வரிகள் எடுத்தியம்புகின்றன. இச்செயல் முல்லை நிலச் சமுதாயம் வேளாண் உற்பத்தியில் ஈடுபட்டிருந்தமையை வெளிப்படுத்துவதாக உள்ளது. மழையின்றி, விளைச்சல் இல்லாத காலங்களில் சமூகப் பொருளாதார

---

[41] அகம் 194
[42] அ. முத்துச்சாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப. 2
[43] கலித். 108: 31-33

தேவையை நிறைவு செய்வதற்காக வினைவயின் பிரிவு மேற்கொண்டதை அறிய முடிகிறது. உணவு பற்றாக்குறை காரணமாக சீறூர் மன்னர் வேந்து விடு தொழில் மேற்சென்றதைப் புறநானூறு குறிப்பிடுகிறது. ஒரு வீரன் போருக்குச் செல்வதற்கு முன்பு அவ்வூர் உணவின்றி பசியால் நலிவுற்றது. அவ்வீரன் தன்னுடைய இனிய மனையாளையும் பிரிந்து போருக்குச் சென்று பேரரசனுடன் போரிட்டு வென்ற பின் அவனது ஊர் வளம் பெற்று சிறப்படைந்ததை அறிய முடிகிறது. இதனை,

> "கொய் அடகு வாட, தருவிறகு உணங்க
> மயில் அம் சாயல் மாஅயோளொடு
> ……………………………………………..
> யாணர்த்து ஆகும் வேந்து விழுமுறினே"[44]

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது.

## மோர் விற்றல்

முல்லை நில மக்களின் முக்கிய பொருளாதாரமாக கால்நடை வளர்ப்பு இருந்துள்ளது. கால்நடை வளர்ப்பில் ஆண், பெண் இருவருமே ஈடுபட்டாலும் பொருளாதார நடவடிக்கை பெண்களை மையப்படுத்தியதாக உள்ளது. கலித்தொகைப் பாடல்களில் மோர் விற்று வரும் பெண்களைக் குறிப்பிடுவது இதற்கு சான்றாக உள்ளது.

ஆயர் மகளிர் காலையில் தலையின் மேல் மெல்லிய சுமட்டின் கண் மோர்ப்பானையைக் கொண்டு சென்று புதிய மோரினை விற்பர். இதனை,

---

[44] புறம்: 318

“பேர் ஊரும் சிற்றூரும் கௌவை எடுப்பவள்போல்,
மோரோடு வந்தாள்”[45]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

மண்பானையில் தயிர், மோர், வெண்ணெய் போன்றவற்றைப் பக்குவப்படுத்தி வைத்தனர். தயிர்ப்பானையில் துடுப்பைக் கொண்டு வெண்ணெய் கடைந்த நிகழ்வினையும், அதனை வெப்பம் மிகுந்த வழியாகச் சென்று விற்றதையும் அறிய முடிகிறது. இதனை,

“சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன
உவர் எழு களரி ஓமை அம்காட்டு
வெயில் வீற்றிருந்த வெம்பு அலை அருஞ்சுரம்”[46]

என நற்றிணை எடுத்தியம்புகிறது.

## ஆயர்குல மகளிர் செயல்கள்

ஆடு, மாடுகள் போன்ற கால்நடைகளை வளர்த்து பாதுகாத்து அதனால் பெற்ற பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றைக் கொண்டு தம் வாழ்வை நடத்தினர். ஆயர்குல மகளிர் பால் கறத்தல், தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், நெய் உருக்குதல் மற்றும் இவற்றை விற்றல் போன்ற பொருளாதார செயல்களில் ஈடுபட்டனர். விடியற்காலைப் பொழுதில் வெண்ணெய் கடைந்தனர்.

தலைவி இனிய பாலினைக் கறந்த கலத்தினைத் தூய்மைப்படுத்தி, கன்றுகளையெல்லாம் கயிற்றில் பிணித்துக் கட்டிய பின்னரே, ஆய மகளிருடன் விளையாடச் சென்றாள், என்பதை கலித்தொகை,

[45] கலி 109: 6.
[46] நற் 84: 6-9

"தீம்பால் கறந்த கலம்மாற்றி, கன்று எல்லாம்
தாம்பின் பிணித்து மனைநிறீஇ, பாய்தந்த
.............................................................
புல்லினத்து ஆயர் மகளிரோடு எல்லாம்
ஒருங்கு விளையாட"[47]

என விளக்குகின்றது. இதனால் மகளிர் தனது இல்லத்திற்கு வேண்டிய கடமைகளைச் செய்தலையும், பொருளாதாரத்தைப் பெருக்கும் செயல்களில் ஈடுபட்டமையையும் அறியலாம்.

## மருத நில வேளாண்மையில் பெண்கள்

மருதநிலத்தின் வேளாண்மைப் பொருளாதாரம் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்துள்ளது. நெல் முக்கிய விளைபொருளாகக் கருதப்பட்டது. வயல்வெளிகளில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து பாடுபட்டனர். ஆண்களும், பெண்களும், ஆடியும், பாடியும் அறுடையின் செழிப்பினைக் கொண்டாடினர்.

நகரங்கள் முதன் முதலில் தோன்றியது உழவுத் தொழிலுக்குச் சிறந்த மருத நிலத்திலாகும். உழவுத் தொழிலால் வேளாண்மையும், பதினெண்பக்கத் தொழில்களும், பிற தொழில் செய்வதற்குப் போதிய உணவும், வணிகமும் ஏற்பட்டன.

பருவமறிந்து பயிர் செய்யும் தொழில் நுட்பத்தைப் பழந்தமிழர் அறிந்திருந்தனர். வயல்களை உழுது நெல் விதைத்தனர். நாற்று நடுதல், நீர் பாய்ச்சுதல், அறுவடைச் செய்தல் போன்ற பயிர்த்தொழில்களைச் செய்தனர்.

---

[47] கலித்: 111: 1-6

## விதைத்தலும் நாற்று நடுதலும்

சங்க காலத்தில் ஓர் அறுவடை முடிந்த பின்பு இன்று போல் வயலைக் காயவிடும் பழக்கம் இல்லை. வயல்களில் இடைவிடாது தொடர்ந்து பயிர் செய்யப்பட்டது. நெல்லறுத்து நீக்கப்பெற்ற வயலை மீண்டும் உழுது ஈரமான சேற்றில் விதைகள் விதைக்கப்பட்டதை,

> "மறுகால் உழுத ஈரச்செறுவின்
> வித்தொடு சென்ற வட்டி பற்பல
> மீனொடு பெயரும் யாணர் ஊர"[48]

என குறிப்பிடுகிறது. மழைப் பெய்தலால் ஈரம்பட்ட நிலத்தை உழுது விதை விதைக்க ஆர்வம் காட்டியதை குறுந்தொகை 131-வது பாடலில் ஓரேருழவனார் குறிப்பிட்டுள்ளார்.

பலமுறை உழப்பட்டு நீர் மிகுந்த வயல்களில் நாற்றுகளை நன்றாக அழுந்த நடுவர். இச்செய்தியை,

> "நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்த, நின்
> நடுநரொடு சேறி ஆயின்"[49]

என்ற பாடல் மூலம் அறியலாம். 'நடுநரொடு சேறி' என்னும் தொடருக்கு நின் உழத்தியரோடு சென்றாய் என உரை அமைகின்றது. 'நடுநர்' என்பது நாற்று நடுகின்ற பெண்டிரைக் குறிப்பதால் நாற்றுநடும் தொழிலில் ஆண்களோடு பெண்களும் ஈடுபட்டிருந்தமையை உணர்த்துகிறது.

---

48 நற். 210 1-3
49 மேலது 60: 7-8

## களையெடுத்தல்

உழத்தியர் வயல்களில் நெல்நாற்றை நட்டு, களை பறித்தச் செய்தியை,

> "கொண்டைக் கூழைத் தண் தழைக் கடைசியர்
> சிறு மாண் நெய்தல் ஆம்பலொடுகட்கும்"[50]

என்ற புறப்பாடல் எடுத்தியம்புகிறது.

பெண்கள் 'கோடு' என்னும் கருவி கொண்டு களையெடுத்தனர் என்பதை,

> "கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர்"[51]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. 'கோடு' என்பதற்கு களைக்கொட்டி எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. களைக் கொட்டினைக் கையில் கொண்டு களை பறித்து எறிந்தனர் என்பதை அறிய முடிகிறது.

## அறுவடைச் செய்தல்

பெண்கள் 'குயம்வாள்' எனும் கருவியினால் அறுவடைச் செய்தலில் ஈடுபட்டனர் என்றச் செய்தியை,

> "கூனி குயத்தின் வாய்நெல் அரிந்து
> சூடு கோடாகப் பிறக்கி, நாள்தொறும்"[52]

என்ற பாடல் சுட்டுகிறது. உழத்தியர் அரிவாளால் நெற்றாழை அரிந்து, திரட்டிய கதிர்க்குவியலை சுமையாகக் கட்டி கொண்டு மலை போன்று குவித்தனர் என்ற செய்தி புலனாகின்றது.

---

[50] புறம் 61: 1-2
[51] அகம் 184: 13
[52] பொருநர் 242-243

**கதிரடித்தல்**

உழவர் குல மகளிர் நாற்று நடுதல், களையெடுத்தல், அறுவடைச் செய்தல் போன்ற தொழில்களில் உதவி செய்தனர். பெண்கள் இல்லறத்தை மேம்படுத்தவும், உழவுத் தொழிலைக் காக்கவும் வயலில் இறங்கி, களையெடுத்து அறுவடைச் செய்தனர் என்பதை,

"யாணர் அகன் கண் செறுவின்
அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கை
பரூஉப் பகடு உதிர்த்த மென் செந்நெல்லின்
அம்பண அளவை உறை குவிந்தாங்"[53]

என பதிற்றுப்பத்து விளக்குகின்றது. பெண்கள் நெற்பயிரை அறுவடைச் செய்த பின்னர், அவற்றை போரடிக்கும் களத்திலே கொண்டு வந்து, வீட்டில் வளர்க்கும் எருமைக் கடாக்களால் சூடடித்து, நெல்லைப் பிரித்தெடுத்தனர். நெல்லைப் பிரித்தெடுக்க விலங்குகள் பயன்படுத்தப்பட்டதை 'கடாவிடுதல்' என சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. நெல்பிரித்ததற்கு கூலியாக நெல்லை மரக்காலால் அளந்து பெற்றச் செய்தி இப்பாடல் வழியாக தெளிவுபடுத்தப்பபட்டுள்ளது.

வயலில் களைபறித்த கடைசியர் வயலில் பிறழ்ந்து துள்ளிய மலங்கு, வாளை முதலிய மீன்களைத் 'தளம்பு' என்னும் சேறு குத்தியால் பிடித்து வந்ததை,

"கொண்டைக் கூழைத் தண்தழைக் கடைசியர்
சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்
மலங்குமிளிர், செறுவின் தளம்பு தடிந்து இட்ட
பழன வாளைப் பரூஉக் கண் துணியல்"[54]

என்ற பாடல் பெண்கள் மீன் பிடிப்பதைக் குறிப்பிடுகிறது.

---

[53] பதிற். 71: 1-5
[54] புறம். 61.

நெடிய மூங்கிலாகிய தூண்டிலால் மகளிர் மீன் பிடித்ததை,

"நெடுங்கழைத் தூண்டில் விடுமீன் நொடுத்து
கிணைமகள் அட்ட"

என்ற புறப்பாடல் 399 புலப்படுத்துகிறது. இவ்வாறு மீன் பிடிப்பதில் நுட்பத்துடன் செயல்பட்டதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

## வள்ளைப்பாட்டு

மகளிர் உரலில் நெல், சுண்ணம் ஆகியவற்றை இடிக்கும் போது சோர்வு தோன்றாமைப் பொருட்டு தம்முள் பகுத்துப் பாடும் பாட்டு வள்ளைப்பாட்டு எனப்படும். இது பல்வரிக் கூத்து என்ற பகுதியுள் அடங்கும் என அடியார்க்கு நல்லார் கூறுவர். இது உலக்கைப் பாட்டு என்றும் கூறப்படும். உலக்கையை ஓச்சி இடிப்பவரின் அன்புக்குரியவர் இப்பாட்டின் தலைவராக அமைவர். அரசனையும், தெய்வத்தையும் இப்பாட்டில் வாழ்த்திப் பாடும் மரபுண்டு. இதிலிருந்து பெண்கள் நெல் குற்றுதலை அறியலாம். இதனை,

"பாஅடி உரல பகுவாய் வள்ளை"[55]

என்று குறுந்தொகைச் சுட்டுகிறது. உணவுக்காக நெல்லைக் குற்றுவது எல்லா நிலத்திலும் காணப்பட்டது. குற்றுவதற்குப் பயன்படும் பொருட்கள் நிலத்திற்கு நிலம் மாறுபட்டிருந்தது. குறிஞ்சி நில மகளிர் யானைக் கொம்பினால் மூங்கில் நெல்லைக் குற்றினர் என்பதை, "கொல்யானைக் கோட்டால் வெதிர் நெல் குறுவாம் நாம்" - என குறிஞ்சிக்கலி 42-வது பாடல் குறிப்பிடுகிறது. வள்ளைப்பாட்டு பாடும் இச்செயலானது வேலை செய்யும் களைப்பினை மறக்கவும், சமூக உறவு நிலை வலுவடையவும் காரணமாகிறது.

---

[55] குறுந். 89: 1.

## நெய்தல் நில பொருளாதாரத்தில் பெண்கள்

நெய்தல் நிலப் பகுதியில் வேளாண் பொருளாதாரத்திற்கு வாய்ப்பில்லை. இருப்பினும் அங்கு வணிகப் பொருளாதாரம் முன்னிலை வகித்தது.

நெய்தல் நில மக்கள் கடலில் சென்று மீன் பிடிப்பதற்கு ஓடம், மிதவை, படகு முதலியவற்றைப் பயன்படுத்தினர். உப்பு விளைவித்தல், மீன் விற்றல், மீன்களை உப்பிட்டு பதப்படுத்துதல் போன்ற தொழில்களைச் செய்தனர்.

## மீன்பிடிப்பதில் நுட்பம்

பரதவர் கடலில் மீன் வேட்டம் செய்வதையே முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். புதுப்புனல் குளத்தை அடையும் போது குளத்திலுள்ள மீன்கள், கடும்புனலின் எதிரே செல்ல முற்படும். இதனையறிந்த பரதவர், குளத்திற்குப் புதுப்புனல் வரும் வழியில் வலைகளை இட்டு வைப்பர் என்பதை,

''காண் இனி வாழி தோழி - யாணர்க்
கடும்புனல் அடைகரை நெடுங்கலத்து இட்ட
மீன் வலை மாப் பட்டா அங்கு''[56]

என குறுந்தொகை தெளிவுபடுத்துகின்றது.

எறியுறி கொண்டு மீன்பிடித்தல் ஓர் எளிய முறையாக இருந்துள்ளது. அதனைப் பயன்படுத்தி பெரிய மீன்கள் மீது எறிவர். எறிபட்ட மீன்கள் வலுவிழந்தவுடன் படகுகளின் பக்கத்தில் தாமாகவே வந்து சேரும். அவற்றை பரதவர் சுற்றத்தாருடன் கூடி இழுத்து வந்து கரைசேர்ப்பர் என்ற செய்தியை,

[56] குறுந். 171: 1-3.

"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்
………………………………………………..
நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன்"[57]

என்ற பாடல் வழியாக அறியலாம். இச்செய்தியை [அகம் 30; குறுந்தொகை 304: 1-4] போன்ற பாடல்கள் புலப்படுத்துகிறது.

படகில் எறியுளியுடன் சென்று இரவு நேரத்தில் ஒளிபொருந்திய விளக்குகளைக் கொளுத்தி வேட்டைமேற் சென்ற காட்சியினை நற்றிணை 388-வது பாடல் எடுத்துரைக்கின்றது.

ஆடவர்கள் மீன்களைக் கரைக்குக் கொண்டு வந்து சேர்ப்பதோடு அவர்களுடைய பணி முடிவு பெறுகிறது. இளைப்பாறி விட்டு வலையைச் செப்பனிடும் பணி மட்டுமே அவர்களுடையது. பெண்கள் கரைக்கு வந்து சேர்ந்த மீன்களை அங்கேயே தம் சமூகத்தின் பெண்களுக்கு ஏலம் விட்டு அல்லது அவற்றை வீதிகளில் சென்று, விற்று பணமாக்கி குடும்பத்திற்குத் தேவையான பொருட்களை வாங்கினர். இதனால் குடும்ப நிர்வாகம் பெரிதும் பெண்களைச் சார்ந்ததாக இருந்தது.

## உப்பு விளைவித்தல்

கடல் நீரிலிருந்து உப்பு எடுக்கும் பழக்கம் தொன்று தொட்டு தமிழகத்தில் நடைபெற்று வருகிறது. உப்பில்லாப் பண்டம் குப்பையில் என்ற பழமொழி உப்பின் அருமையை உணர்த்துகிறது. மழையை எதிர்பார்க்காமல், உழாமல் விளையும் பொருள் உப்பு ஒன்றேயாகும். மழைக்காலத்தில் பரதவர் நெல் விளைவித்துப்

---

[57] அகம் 210: 1-6

பயன்பெறுவர். மற்றைய நாட்களில் கடல் நீரை உப்புப் பாத்திகளில் பாய்ச்சி உப்பை விளைவிப்பர். எனவே என்றும் குறைவில்லாத நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தனர் என்பது தெளிவாகிறது. இச்செய்தியை,

"பெயினே, விடுமான் உழையினம் வெறுப்பத் தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணரஃதே
வறப்பின் மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்உப்புவிளையும்
அழியா மரபின் நம் மூதூர் நன்றே"[58]

என நற்றிணை உப்பு விளைவிக்கும் முறையை குறிப்பிடுகிறது. இத்தகவலை நற்றிணை [254: 10-12; 331: 1-3] எனும் பாடல்கள் விளக்குகின்றன. உப்பினை அகநானூறு 169 - 'கடல்விளை அமிழ்தம்' என்று குறிப்பிடுகிறது.

### மீனை உப்பிட்டு உலர்த்துதல்

பெண்கள் பரதவர் கொண்டு வருகின்ற மீனை உப்புப்படுத்தி உலர்த்துவர். அவற்றைக் கவர்வதற்கு வரும் காகம் முதலிய பறவைகளை விரட்டினர் என்றச் செய்தியை,

"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்
..........................................................................
கானல் இட்ட காவற்குப்பை
புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி"[59]

என்ற நற்றிணைப் பாடலில் உலோச்சனார் குறிப்பிட்டுள்ளார். இச்செய்தியை சிலப்பதிகாரம்,

---

[58] நற். 311 1-5.
[59] மேலது 331 1-4.

"நிணங்கொள் புலால் உணங்கல் நின்றுபுள்
ளோப்புதல் தலைக் கீடாகக்
கணங்கொள் வண்டார்த்து உலாங்கனினி"[60]

என தெளிவுபடுத்துகிறது. இதனை நற். 45; 49, அகம். 20 போன்ற பாடல்களும் எடுத்தியம்புகின்றன.

சங்ககாலம் முதல் மீனவரின் பொருளியல் வாழ்வு கலப்புப் பொருளாதாரம் சார்ந்ததாகவே இருந்தது. மீன்பிடித்தல், முத்து, சங்கு மற்றும் பவளம் எடுத்தல், உப்பு விளைவித்தல், மீன் விற்றல், உப்பு விற்றல், மரக்கலம் கட்டுதல் முதலான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். ஒரு சமூகம் ஒன்றுக்கு மேற்பட்ட தொழில்களில் ஈடுபடுவது என்பது கலப்பு பொருளாதாரத்திற்கு வழிவகுக்கிறது.

## பாலைநில மக்களின் நிலை

பாலை என்பது தனி நிலம் அன்று. குறிஞ்சியும், முல்லையும் தத்தம் இயல்பு குன்றும் போது பாலை என்றழைக்கப்படும். இங்கு வாழும் மக்களின் வாழ்க்கை, முல்லை நில மக்களின் வாழ்க்கையாகவோ, குறிஞ்சி நில மக்களின் வாழ்வாகவோ அமையாது மாறுபட்ட வாழ்வாக காணப்படும். பாலைநிலம் வறண்டு காணப்படும். இந்நிலத்தின் மக்கள் எவ்வளவு வறட்சி ஏற்பட்டாலும் அங்கிருந்து செல்லாமல் வாழ்ந்துள்ளனர்.

பாலைநில மக்களின் வாழ்வானது வறுமை வாழ்வு எனக் கூறலாம். வறுமையின் காரணமாக களவு செய்ய தூண்டப்படுகின்றனர். இவர்கள் வேட்டையாடுதலையும், வழிப்பறிச் செய்தலையும் தொழிலாகக் கொண்டவர்கள்.

[60] சிலம்பு. புகார் கானல் வரி -9.

எயினர், மறவர், வேடர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். “கொடுவில் எயினர்” என குறுந்தொகை – 12 வது பாடலும் “கருங்கண் மறவர்” என அகப்பாடல் - 297வது பாடலும், “வல்வில் கானவர்” என்று குறுந்தொகை 331- வது பாடலும் சுட்டுகின்றன.

எயிற்றியர் உளிபோன்ற வாயையுடைய பாறைகளால் நிலத்தைக் குத்தி புல்லரிசியைச் சேர்ப்பர் என பெரும்பாணாற்றுப்படை 89-90 வது அடிகள் புலப்படுத்துகின்றன. இவர்கள் வறுமை வயப்பட்டு வாழ்ந்ததால் வாழும் இடங்கள் புல்லால் வேயப்பட்டிருந்தது. மரநிழலில் கன்றுகளைக் கட்டியிருந்தனர். இத்தகைய ஊரில் பொருள் தேடச் செல்வோர் தங்கிச் செல்வர் என அகநானூறு 87-வது பாடல் குறிப்பிடுகிறது.

புல்லரிசி என்பது புல்லிலிருந்து கிடைக்கும் அரிசியாகும். இதனை எறும்பு, கரையான் போன்றவை நிலத்தினடியில் மழைக்காலத்தில் சேகரித்து வைக்கும். எயினர் தமக்கு உணவில்லாத காரணத்தால் பகற்பொழுது பாலைநிலம் முழுவதிலும் தேடிச் சென்று நிலத்தினைத் தோண்டி புல்லரிசியைத் திரட்டுவர்.

தோற்படுக்கையில் பிள்ளையோடு முடங்கிக் கிடக்கும் ஈன்ற எயிற்றியைத் தவிர ஏனையோர் அனைவரும் புல்லரிசியைத் தேடிச் செல்வர். அவற்றை மனையின் முற்றத்தில் தோண்டப்பட்டுள்ள நிலவுரலில் உரமேற்றிய உலக்கையினைக் கொண்டு குற்றுவர்.

விலங்குகளைக் கொன்று தன் தமையன்மார் கொணர்ந்த நிணமுடைய ஊனை எயிற்றியர் பகற்பொழுதில் வெயிலில் காயவைப்பர். இதனை,

“கணமா தொலைச்சித் தன்னையர் தந்த

நிணஊன் வல்சிப் படுபுள் ஓப்பும்

நிலம் மாண எயிற்றி”[61]

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

## வழிப்பறி செய்பவரின் இரக்க உணர்வு

பாலை வழியில் தூது செல்லும் பார்ப்பான் ஒருவன் கையில் வெண்ணிற ஓலைச் சுருளுடன் சென்றான். அவனைக் கண்ட வழிப்பறி கள்வர்கள் இவன் கையிலுள்ளது பொன்னாக இருக்கலாம் என்றெண்ணி அவனைக் கொன்று போட்டனர். கொன்ற பின்பு வறுமை காரணமாக உண்ணாததால் வாடிய விலா எலும்பையும், கிழிந்த ஆடையினையும் கண்ட கள்வர்கள் தம்செயல் பயனற்றுப் போயிற்று எனக் கருதி கையை நொடித்து அவ்விடம் விட்டுச் சென்றனர். என்பதை,

“தூது ஒய்பார்ப்பான் மடிவெள் ஓலைப்

படையுடைக் கையர் வருதொடர் நோக்கி

.................................................................................

செங்கோல் அம்பினர் கைந்நொடியால் பெயர”[62]

என்ற அகப்பாடல் விளக்குகின்றது.

பாலை நிலத்தில் வறுமையால் கொள்ளையடிக்கும் தொழிலைச் செய்யும் கள்வர் என்றும் கொடுமையுடையோராக இருப்பதில்லை. அவர்களிடமும் இரக்கவுணர்வு காணப்பட்டது. பொருளில்லாதவரைக் கொன்று விட்டோமே என்று கைநொடித்துச் சென்றதால் அவர்களின் மனமாற்ற வளர்ச்சி புலப்படுகிறது. இவ்வுணர்வு படிப்படியே வளர பாணர்களின் பாலைப் பண்ணைக்கேட்டு தம் கையிலுள்ள கருவிகளைக் கைவிடுமளவிற்கு சுவைஞராக மாறிய நிலையினையும் அறிய முடிகிறது.

---

[61] ஐங். 365: 1-3.

[62] அகம். 337: 7-13.

## வணிகர்

பொருள்களை வாங்குதல், விற்றல் என்பது பொது நிலையில் வணிகர் தொழில்களாக அமைகின்றன. வணிகர் மிகச்சிறந்த பண்பாடு உடையவர்களாகத் திகழ்ந்ததை பட்டினப்பாலை,

> ''நெடு நுகத்துப் பகல்போல
> நடுவு நின்ற நல்நெஞ்சினோர்
> வடு அஞ்சிவாய் மொழிந்து
> தமவும் பிறவும் ஒப்ப நாடி''[63]

எனக் குறிப்பிடுகிறது. மாட்டு வண்டியிலிருக்கும் நுகத்தடியின் பகலாணி போல நடுவுநிலையினை உடையவர் வணிகர். நன்னெஞ்சினைக் கொண்டவர். பழிக்கு அஞ்சி உண்மையையே பேசுபவர். தம்மையும், பிறரையும் ஒன்றாக மதித்து வாணிபம் செய்யுமிடத்தில் பொருளை மிகுதியாகப் பெறுவதும் இல்லை. கொடுப்பதைக் குறைத்துக் கொடுப்பதும் இல்லை. நேர்மையாக வணிகம் செய்து தாமும் வாழ்ந்து பிறரையும் வாழ வைத்தனர் பண்டையத் தமிழர். ஆண்கள் மட்டுமல்லாது பெண்களும் உள்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டு வந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

## பண்டமாற்றில் பெண்கள்

பண்டமாற்று என்பது ஒருபொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைப் பெறுவதாகும். நாணயங்கள் புழக்கத்திற்கு வராத தொடக்கக் காலத்தில் தமிழகத்தில் வணிக நிலையில் பண்டமாற்று வழக்கமே இருந்து வந்தது. மக்கள் தங்கள் அன்றாடத் தேவைக்கான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருட்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று செய்து

---

[63] பட்.பா. 206-209.

கொண்டனர். அதிக விலையுள்ள பொருட்களை மட்டும் காசுகொடுத்து வாங்கினர். பண்டமாற்று வணிகம் மக்களை தன்னிறைவு பெற்றவர்களாக மாற்றியுள்ளது.

குறிஞ்சி நில மக்கள் தங்களுக்குக் கிடைத்த தேன், கிழங்கு போன்றவற்றை நெய்தல் நில மக்களிடம் கொடுத்து மீனையும், கள்ளையும் பண்டமாற்றாகப் பெற்றச் செய்தியை பொருநராற்றுப்படை 214-215 குறிப்பிடுகிறது.

உணவை உற்பத்தி செய்யும் முறை அவ்வந்நிலங்களின் தன்மைகளுக்கேற்ப தோற்றம் பெற்று, பின்னர் பரிமாற்ற உறவுகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. குறிஞ்சியில் உழவில்லா வேளாண்மை செய்யப்பட்டது.

முல்லை நில மகளிர் தங்களிடம் உள்ள பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றைக் கொடுத்து தங்களுக்கு வேண்டிய கால்நடைகளை வாங்கிக் கொண்டனர் என்பதை [நற்றிணை 12; குறுந்தொகை 221] போன்ற பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

## நெய்-எருமை பண்டமாற்று

ஆயர்குலப் பெண் நெய்யைக் கொடுத்து எருமையை பண்டமாற்றாகப் பெற்றதை,

> “நெய்விலைக் கட்டிப் பசும் பொன் கொள்ளாள்,
> எருமை, நல் ஆன், கருநாகு பெறூஉம்”[64]

[64] பெரும். பா. 164-165.

என்ற பாடல் புலப்படுத்துகிறது. பண்டைய காலத்தில் ஆநிரைகளை சிறந்த பண்டமாற்றுப் பொருளாக பயன்படுத்தி வந்தனர்.

மருதநில மகளிர் தங்களிடமுள்ள கரும்பு, அவல் போன்றவற்றை முல்லை நில மக்களிடம் கொடுத்து மான் இறைச்சி, மது போன்றவற்றைப் பெற்றனர். என்பதை,

> ''தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்
> மீன் நெய்யோடு - நறவு மறுகவும்
> தீங்கரும் பொடு அவல்ர வகுத்தோர்
> மான் குறையொடு மது மறுகவும்''[65]

என பொருநராற்றுப்படை விளக்குகின்றது.

### மான்தசை-வெண்ணெல் பண்டமாற்று

வேட்டுவர்கள் கூடைநிறையக் கொண்டு வந்து கொடுத்த மான் இறைச்சியும், இடையர்குல மகளிர் குடம் நிறைய கொண்டு வந்து கொடுத்த தயிரும் வீட்டில் நிறைந்திருக்க உழவர் வீட்டுப் பெண்கள் அதற்கு விலையாக அவர்களது கூடையும், குடமும் நிறையுமளவிற்கு வெண்ணெல்லை அள்ளிக் கொடுப்பர். என்ற செய்தியை,

> ''............................................ வேட்டுவன்
> மான்தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்
> ......................................................................
> குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
> முகந்தனர் கொடுப்ப''[66]

என்ற புறநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.

மருதநில குடும்பத் தலைவி இல்லத் தலைமை பெற்றவளாய் வேண்டியவற்றை வாங்கும் வளம் பெற்றவளாய் இருத்தலை இந்நிகழ்ச்சிகள்

---

[65] பொரு. ஆற். 214-217.
[66] புறம். 33 1-6.

குறிப்பிடுகின்றன. நெல்லும், பயறும் பெறுவதற்கு நெய்தல் நிலக் குடும்பத்தினர் மருத நிலத்தை நாடி வருகின்றனரேயன்றி இவர்கள் அவர்களை நாடிச் செல்வதில்லை. மருதநிலக் குடும்பத்தின் பொருள் வளமும், தலைவியின் சிறப்பும் இந்நிகழ்வுகளால் தெளிவு பெறுகின்றன. மனித குழுக்களின் வாழ்வுத் தேவைகள் மருத நிலத்தை நோக்கி அமையத் தொடங்கியது பொதுவாக சமூகத் தோற்றத்திற்கு காரணமாக அமைந்திருந்ததைச் சுட்டுவதாக அமைகிறது.

### உப்பு-மீன் பண்டமாற்று

நெய்தல் நில மகளிர் உப்புப் பாத்திகளில் விளைவித்த உப்பினை வண்டிகளில் ஏற்றி விற்பதற்காக பரதவருடன் தாங்களும் சென்றனர். மகளிர் சேரிகளுக்குள் சென்று உப்பைக் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லைப் பெற்றனர். பிறபொருள்கள் யாவும் நெல்லை அளவாக வைத்தே மதிப்பிடப்பட்டன. மகளிர் உப்பும், நெல்லும் ஒப்பாகும் என்று விலைகூறி விற்றதை,

> “நெல்லின் நேரே வெண்கல் உப்பென
> சேரி விலைமாறு கூறலின் மனைய”[67]

என்ற பாடல் புலப்படுத்துகிறது. மேலும் இச்செய்தியைக் குறுந்தொகை 269-ஆவது பாடல் எடுத்துரைக்கின்றது.

### வரால் மீன் - வெண்ணெல் பண்டமாற்று

பாணர் வலைவீசி பிடித்த வரால் மீனை பாணனது மகள் வட்டியில் வைத்து உழவர் மனைக்குச்சென்று அதற்கு மாற்றாக முந்தைய ஆண்டு விளைந்த பழைய வெண்ணெல்லைப் பெற்றாள் என்ற தகவலை,

---

[67] அகம். 140: 7 - 8.

"வலைவல் பாண்மகள் வால் எயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர"[68]

என ஐங்குறுநூறு விளக்குகின்றது.

### மீன்-பாசிப்பயறு பண்டமாற்று

கெடிற்று மீனைக் கொடுத்து பெரும்பயறு பெற்றுச் சென்றதையும், சிறிதளவு மீனுக்கு மிகுதியான நெல்லைப் பெற்றுச் சென்றதையும் ஐங்குறுநூற்றுப் பாடல் 47: 49 குறிப்பிடுகின்றது.

### வாளை மீன்-முத்து பண்டமாற்று

பாணனது மகள் மீனுக்கு விலையாக நெல்லைப் பெறாமல் அணிகலன் செய்வதற்காக முத்தினைப் பண்டமாற்றாகப் பெற்றதை,

"பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்"[69]

என அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது.

பரதவர் மீனை பிறநாட்டில் விற்று அதற்கு ஈடாக பனையின் இனிய பிழிவாகிய கள்ளினை உண்டு மகிழ்ந்திருப்பர் என தலைவி கூறுவதை,

"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப
பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும் பனந் தீம்பிழி உண்போர்"[70]

என உலோச்சனார் நற்றிணைப் பாடலில் புலப்படுத்தியுள்ளார்.

---

[68] ஐங். 48: 1-3.
[69] அகம். 126: 11-12.
[70] நற். 38: 1-3.

பரதவர் மீன் வேட்டையாடி அதற்கு மாற்றாக பனை நுங்கை பெற்று, தானும் உண்டு, தனது சிறுவர்களுக்கும் கொடுத்து மகிழ்ந்ததை நற்றிணை 392-வது பாடல் குறிப்பிடுகிறது.

பரதவ பெண்கள் மீன்களையும், கருவாடுகளையும் மற்ற திணையினருக்குக் கொடுத்து பண்டமாற்றம் செய்யும் நிகழ்வை [அகநானூறு 60: 4; 320: 1-4] விளக்குகின்றன.

## கள்-யானைத் தந்தம் பண்டமாற்று

பாலை நில மகளிர் தங்கள் வீடுகளிலிருந்து கள்ளினை விற்றதையும், கானவர்கள் அக்கள்ளிற்கு விலையாக களிற்று யானையின் கொம்பினைக் கொடுத்த நிகழ்வினையும் அகநானூற்றுப் பாடல் புலப்படுத்துகின்றது. இதனை,

> ''அரியலாட்டியர் அல்குமனை வரைப்பில்
> மகிழ்நொடை பெறஅ ராகி நனை கவுள்
> கான யானை வெண்கோடு சுட்டி''[71]

என்ற பாடல் வழியாக அறியப்படுகிறது.

## கைவினைக் கலைகள்

சங்ககாலத்தில் ஐந்து திணைகளுக்குரிய பொதுவான தொழில்களன்றி வேறு பல கைவினைக் கலைஞர்களின் தொழில்களும் வளர்ச்சியடைந்து பொருளாதார வளம் சிறப்புற்றிருந்ததை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

---

[71] அகம். 245: 9-11.

## மண்பாண்டத் தொழில்

சங்க இலக்கியம் குயவர்களைப் பற்றியும், அவர்கள் செய்த மண்பாண்டம், தாழி போன்றவற்றைப் பற்றியும் குறிப்பிடுகின்றன. உணவு சமைப்பதற்கு பானை மற்றும் அடுப்பு தேவைப்பட்டதால் அதனை மண்ணால் செய்து பயன்படுத்தினர்.

சங்ககாலத்தில் குழிசி எனும் பாத்திரத்தை சோறு, இறைச்சி முதலிய உணவுப்பொருட்களைச் சமைப்பதற்குப் பயன்படுத்தினர். மண்ணால் செய்யப்பட்ட இப்பாத்திரத்தை இடையர்கள் பயன்படுத்தியச் செய்தியை,

''களிபடு குழிசிக் கல்அடுப்பு ஏற்றி
இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதின்
குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப் புண்கம்''[72]

என்ற பாடல் வெளிப்படுத்துகிறது. மண்ணால் செய்த பானையில் வரகரிசியை இட்டு சுனைநீரை ஊற்றி, கற்களை அடுக்கிச் செய்த அடுப்பில் உலையேற்றினர் என்ற தகவலை மாமூலனார் என்ற ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். மேலும் மண்பானையில் தயிர், மோர் இவற்றை சேர்த்து வைத்திருந்தச் செய்தியை நற்றிணை 84-வது பாடல் எடுத்தியம்புகிறது.

பழங்காலத்தில் இறந்தவர்களைத் தாழிகளில் வைத்துப் புதைத்தனர். இதற்கு மிகப்பெரிய மண் பானைகள் தேவைப்பட்டன. சங்ககாலத்தில் முரவுவாய்க்குழிசி என்ற விளிம்பு உடைந்துபோன கரடு முரடான வாயுடைய பழம்பானை இருந்ததை,

''முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி''[73]

என்ற பாடலடி குறிப்பிடுகிறது.

---

[72] அகம். 393 14-16.
[73] பெரும். பா. 99.

பெண் ஒருத்தி கணவன் போரில் இறந்துவிட்டான் என்பதால், மனமுடைத்து தாழி செய்யும் குயவனிடம் சென்று தன்னுடைய கணவனுக்கு நிகராக, அகன்ற வாயினையுடையதும் இறந்தபின் அதற்கான பரிகாரம் செய்வதற்கேதுவான தாழியைச் செய்யும்படி கூறினாள். இதனை ஈமத்தாழி என்பர். இச்செய்தியை,

''வியல் மலர் அகன்பொழில் ஈமத்தாழி
அகலிதாக வனைமோ
நனந்தலை மூதூர்க்கலம் செய்கோவே''[74]

என குறிப்பிடுகிறது.

மட்கலம் சுடும் போது நெருப்பினால் ஏற்படும் புகை வெள்ளிய மேகம் போல் தோன்றி மலையை மறைக்குமளவிற்கு காணப்பட்டதை, தோழி குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். இதனை,

''இலங்குமலை புதைய வெண்மழை கவைஇ,
கலம்சுடு புகையின் தோன்றும் நாட''[75]

என்ற பாடல் விளக்குகின்றது.

தற்போது ஆதிச்சநல்லூர், அரிக்கமேடு, மதுரை, கரூர், பூம்புகார் போன்ற இடங்களில் அகழ்வாராய்ச்சிகள் மூலம் கண்டெடுக்கப்பட்ட தாழிகள் சங்ககாலத்தில் குயவர்களின் தொழில் இருந்ததற்குச் சான்றாகும்.

மண்பாண்டத்தொழில் செய்வதோடு மட்டுமில்லாமல் ஊரில் திருவிழா நடைபெறப் போகின்றச் செய்தியை யாவருக்கும் தெரிவிப்பது ஊர்ப்பொதுவில் வாழும் குயவனின் பணியாகும். இவன் ஊரில் விழாநிகழ்ச்சியை அறிவிப்பதுடன்

[74] புறம். 256: 5-7.
[75] அகம். 308: 5-6.

ஊர்ப்பொது மன்றங்களில் உறையும் தெய்வங்களுக்கு கள் முதலியவற்றைப் பலியாக இடுவதும் இவனது கடமையாகும். இதனை,

> ‘‘கண்ணி கட்டிய கதிர அன்ன
> ..................................................................
> சாறு என நுவலும் முதுவாய்க் குயவ’’[76]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது.

### சலவைத் தொழில்

சங்ககாலத்தில் அழுக்கான ஆடைகளைத் துவைத்து, கஞ்சியில் தோய்த்தெடுக்கும் பணிகளைச் செய்பவர் இருந்ததை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். இவர்களைப் புலத்தி, வண்ணாத்தி என்றழைப்பர். புலத்தி ஆடைகளின் அழுக்கினை அகற்றியபின் கஞ்சிப் பசையில் தோய்த்து எடுத்து முறுக்கி, குளிர்ந்த நீரில் இட்டச்செய்தியை,

> ‘‘நலந்தகைப் புலத்தி பசை தோய்த்து எடுத்துத்
> தலைப்புடைப் போக்கித் தண்கயத்து இட்ட
> நீரின் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும்’’[77]

என்ற பாடல் விளக்குகின்றது.

ஆடைகளைத் துவைக்கும் செயலிலிருந்து ஒய்வுகொள்ளாத புலத்தி என்பவள் இரவிலும் வேலைச் செய்து வறுமை நீங்கி காணப்பட்டதை,

> ‘‘வறன்இல் புலைத்தி எல்லித்தோய்த்த
> புகாப் புகர் கொண்ட புன் பூங் கலிங்கமொடு’’[78]

என நற்றிணை குறிப்பிடுவதால் புலத்தியின் வாழ்வியலை அறியமுடிகிறது.

---

[76] நற். 200: 1-4.
[77] குறுந். 330: 1-3.
[78] நற். 90: 3-4.

வண்ணாத்தி ஆடைகளைத் துவைத்த பின்பு கஞ்சிப் பசையூட்டி தன் விரல்களால் கரைத்து ஆடைகளை அழகு செய்ததை அகநானூறு 387வது பாடல் குறிப்பிடுகின்றது. இதனால் சங்ககாலத்தில் புலைத்தி என்பவளால் சலவைத் தொழில் நிகழ்ந்தது புலப்படுகின்றது.

## நூல் நூற்றல்

ஆடை நெய்வதற்கு நூல் நூற்கும் வழக்கம் இருந்ததை இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. கைம்பெண்கள் தம் தனிமைத் துயரினின்று நீங்கவும், பிழைப்பின் பொருட்டாகவும் நூல் நூற்கும் தொழிலை மேற்கொண்டனர். இச்செய்தியை,

> ‘‘ஆள்இல் பெண்டிர் தாளின் செய்த
> நுணங்கு நுன் பனுவல்’’[79]

எனவும்,

> ‘‘பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன’’[80]

என்ற பாடல்கள் கைம்பெண் நூல் நூற்பதை புலப்படுத்துகின்றது.

நெசவு வீட்டுத் தொழில்களுள் முக்கியமானது. பண்டைய கைத்தொழில்களுள் ஒன்று. ‘‘விவசாயத்துக்கு அடுத்து மக்கள் நாகரிகம் அடையத் தொடங்கி கையாண்ட முதற் கைத்தொழில்’’[81] என்று கலைக் களஞ்சியம் விளக்கம் தருகிறது. நெசவுத் தொழில் புரிவோரை நெசவாளர் என்றழைப்பர். இவர்கள் பருத்திப் பஞ்சை அதன் விதையிலிருந்து பிரித்தெடுக்க ‘வில்’ எனும் கருவியைப் பயன்படுத்துவர். இதனை,

---

79 நற் 353: 1-2.
80 புறம். 125: 1.
81 கலைக்களஞ்சியம், ப. 215.

''வைல் வெறி பஞ்சியின் வெண்மழை தவழும்''[82]

என்ற பாடல் தெரிவிக்கிறது. பருத்தியின் விதையினை நீக்கித் தூய்மை செய்யும் போது பஞ்சின் புறத்தோலையும், விதைகளையும், தூசியையும் நீக்குவதற்காக நன்றாக புடைப்பர். இத்தகவலை,

''சிறையும் செற்றையும் புடையுநள் எழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து''[83]

என்ற பாடல் புலப்படுத்துகின்றது.

பருத்தியினைத் தூய்மைப்படுத்துவது பெண்களுக்குரிய செயல் என்று அறிகிறோம். இம்மகளிர் இரவிலும் இவ்வேலையைச் செய்வதனை 'சிறுதீ விளக்கம்' என்ற சொற்கள் உணர்த்தும். ''பெண்கள் நூற்று இழைத்துத் தந்த நூலினை பாவாக விரித்துத் தறியால் நெய்து ஆடையாகக் கொடுக்கும் கடமை ஆடவருடையதாகும்''[84] என்று சசிவல்லி குறிப்பிட்டுள்ளார்.

ஆடையினை ஆராய்ந்து இழைத்து நெய்யும் பொழுது பாவானது விரிந்து காணப்படும் என்பதை,

''துகில்ஆய் செய்கைப் பாவிரிந் தன்ன''[85]

என்ற பாடலடி சுட்டுகிறது.

## ஓவியம் வரைதல்

பண்டையத் தமிழர்கள் ஓவியம் வரைவதில் சிறப்புப் பெற்றிருந்தனர். ஓவியர்கள் ஒளிபொருந்திய அரக்கினில் தோய்த்த தூரிகையால் ஓவியம் வரைந்தச் செய்தியை,

---

82 அகம். 133: 6.
83 புறம். 326: 4 - 5.
84 சசிவல்லி, வி.சி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப. 78.
85 அகம். 293: 4.

"ஓவ மாக்கள் ஒள் அரக்கு ஊட்டிய

துகிலிகை அன்ன, துய்த்தலைப்பாதிரி"[86]

என்ற நற்றிணைப் பாடல் வழியாக தலைவி குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது.

வல்லோனால் தீட்டப்பட்ட எழில்மிகு ஓவியம் முல்லைக் கொடியிலிருந்து வீழ்ந்த முல்லை பூக்களைப் போன்று காட்சியளித்தது என்பதை "முல்லை வீகழல் தாஅய் வல்லோன்" என அகநானூற்றுப் பாடல் 134: 5-வது அடி குறிப்பிடுகிறது. ஓவியம் வரைந்து வண்ணம் தீட்டியச் செய்தியை அகநானூறு [54: 4] சுட்டுகிறது. கட்டிலின் மேற்கூரையில் ஞாயிறு, திங்கள், உரோகிணி போன்ற ஓவியங்கள் வரையப்பட்டிருந்ததை நெடுநல் வாடை எடுத்தியம்புகிறது. இவ்வாறு சிறப்பாக ஓவியம் வரைந்து, வண்ணம் தீட்டிய நிகழ்விலிருந்து பண்டைத் தமிழரின் ஓவிய மாண்பினை அறியலாம்.

## பொற்கொல்லர்

பொன் தொழில் செய்கின்ற தட்டானைக் கம்மியர் என்று இலக்கியம் குறிப்பிடுகின்றது. இத்தொழில் செய்கின்ற கைவினைக் கலைஞர்கள் அழகிய வேலைப்பாடுடன் கூடிய அணிகலன்களை மக்களுக்குச் செய்து கொடுத்தனர். இதனை,

"கருங்கால் வேங்கை நாள் உறு புதுப்பூ

பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப"[87]

என்ற நற்றிணைப் பாடல் பொற்கொல்லனுடைய கைவினைத் திறன் வேங்கை மலர் போன்றிருந்ததைக் புலப்படுத்துகின்றது. பொற்கொல்லர்கள் உடைந்து

---

[86] நற். 118: 7 - 8.

[87] மேலது. 313: 1-2.

போன அணிகலனை இணைத்துக் கொடுத்தனர். எனவே தலைவியின் காற்சிலம்பினைப் பொற்கொல்லனிடம் கொடுத்து இணைப்பதற்கு தோழி தலைவனிடம் கூறியதை,

''உறு வினைக்கு அசாவா உலைவு இல் கம்மியன்
பொறி அறு பிணைக் கூட்டும் துறை மணல் கொண்டு''[88]

என்ற நற்றிணைப் பாடல் விளக்குகிறது.

தலைவி தந்தையிடம் தோள்வளை வேண்டுமெனக் கூற தந்தை பொன்னாலாகிய வளை செய்துக் கொடுத்ததை நற்றிணை,

''திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும்
.................................................................................
போக்கு இல் பொலந்தொடி செறீஇயோனே''[89]

என்பதாக குறிப்பிடுகிறது. இதன் மூலம் பொன்னாலாகிய அணிகலன் செய்த நிகழ்வையும், அணியும் பழக்கம் இருந்ததையும் அறியலாம். அவ்வழக்கம் இன்றும் நிலைபெற்று வருகிறது.

### வெள்ளித்தொழில்

சங்ககாலத்தில் வெள்ளி நகைகளைச் செய்யும் தட்டான்கள் காணப்பட்டனர், வெள்ளியால் செய்யப்பட்ட வளைகள் வேலைப்பாடுடன் இருந்ததையும், அதனை தலைவி அணிந்திருந்ததையும்,

''மாசுஇல் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறிந்த முன்கை''[90]

என்ற அகப்பாடல் சுட்டுகின்றது.

---

[88] நற். 363: 4-5.
[89] மேலது. 136.
[90] அகம். 142: 16-17.

வெள்ளியினை உருக்கும் ஆலைகள் இருந்ததை,

> ''வெள்ளி
> உருக்குறு கொள்கலம் கடுப்ப''[91]

என நற்றிணை கூறுகிறது. வெள்ளி, தங்கம் போன்ற விலையுயர்ந்த பொருட்களின் நிறையை அளவிட தங்கம், வெள்ளியால் செய்யப்பட்ட தராசு இருந்தது. இச்செய்தியை,

> ''பொன்செய் கன்னம் பொலிய, வெள்ளிய
> நுண்கோல் அறை குறைந்து''[92]

என்ற அகப்பாடல் தெரிவிக்கின்றது. இதன் வாயிலாக வெள்ளியால் பலவித பொருட்கள் செய்ததை அறியமுடிகிறது.

## செம்புத்தொழில்

பண்டைய தமிழர்கள் செம்பின் பயன்பாட்டினை அறிந்து செம்பினால் செய்யப்பட்ட பாத்திரங்களைப் பயன்படுத்தினர். செம்பினாலாகிய பாத்திரத்தில் நீரைக் குடிப்பது உடல் ஆரோக்கியத்திற்குச் சிறந்தது. கம்மியர் செம்பினால் செய்த பானையைக் கடைந்த போது செம்பு மினு மினுப்புடன் விளங்கியதை தலைவி,

> ''மண்திணிஞாலம் விளங்க கம்மியர்
> செம்பு சொரி பானையின் மின்னி எவ்வாயும்
> தன் தொழில் வாய்த்த''[93]

என குறிப்பிடுவதால் அறியலாம். இதனால் செம்பினைச் சங்ககால மக்கள் பயன்படுத்தியதையும், செம்பு உலை இருந்ததையும் உணரமுடிகிறது.

---

[91] நற். 124 6-7.
[92] அகம். 317: 8-9.
[93] நற். 153: 3-4.

## பாசறைப் பணிப்பெண்கள்

அரசனுக்கென அமைந்த பாசறையில் பணிபுரியும் மகளிர் சங்ககாலத்தில் இருந்தனர். இவர்கள் வாட்படையை உடையவராக விளங்கினர். இதனை,

> ''இரவு பகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்
> விரவு வரிக் கச்சின் பூண்ட, மங்கையர்
> நெய்உமிழ் கரையர் நெடுந்திரிக் கொளீஇ''[94]

என்ற பாடல் விளக்குகிறது. இம்மகளிர் தம் கச்சில் வாளைச் சேர்த்துக் கட்டியிருந்த அக்கால வழக்கத்தினையும், போர்க்களப் பாசறையில் விளக்கேற்றும் பணியினைச் செய்ததையும் இப்பாடல் புலப்படுத்துகின்றது. இதன் தொடர்ச்சியாக மகளிர் இன்று இராணுவத்தில் பணிபுரிவதைக் கூறலாம்.

## சிறுதொழு மகளிர்

செல்வர் வாழும் இல்லத்தில் அவர்களுக்கு வேண்டிய பணிகளைச் செய்து வாழ்கின்ற எளிய மகளிர் சிறுதொழு மகளிர் ஆவார். இவர்களைப் பணிப்பெண்கள் என்றும், அடிமை என்றும் கூறுவர், இத்தகவலை,

> ''சிறுதொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்''[95]

என்ற பாடல் விளக்குகின்றது. தொழுவறைகளில் தொழில் செய்கின்றவர்களை கடையர் மகளிர் எனவும், தொழு மகளிர் எனவும் குறிப்பிடுவர். இவர்கள் இழிவு கருதாமல் இல்லத்தில் அமையப் பெற்ற தொழில் முறைகளைச் செய்து ஊதியம் பெற்று வாழ்க்கையில் தன்னிறைவு அடைந்தனர். இவ்வாறு தொழில் புரிவோர் இன்றும் சமுதாயத்தில் காணப்படுகின்றனர். அரண்மனைகளில் பணிசெய்யப் பணிப்பெண்கள் இருந்ததையும், அவர்கள் கருமையான கொள்ளின் நிறத்தில் இருந்ததையும் மலைபடுகடாம் 49-50 புலப்படுத்துகிறது.

---

[94] முல்லை. பா. 46-48.

[95] ஐங். 16: 2.

## பெருமுது பெண்டிர்

போருக்காகவோ, பொருளுக்காகவோ அரசன் பிரிந்து சென்றபோது அதனால் அரசர்களின் பெண்களுக்கு ஏற்பட்ட வருத்தத்தை நீக்கும் பணியில் வயது முதிர்ந்த பெண்கள் ஈடுபட்டனர். இவர்கள் பெருமுது பெண்டிர் எனப்பட்டனர். இதற்காகப் பெருமுது பெண்டிர் நெல்லும், மலரும் தூவி நற்சொல் கேட்டனர் என்ற தகவலை முல்லைப்பாட்டு 7-11-வது பாடலடிகள் சுட்டுகின்றன.

அரசர்களின் பெண்களை ஆறுதல் படுத்தியவர்கள் செவிலியர் என்று நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இதனை,

“நரை விராவுற்ற நறுமென் கூந்தல்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇ”[96]

என்ற பாடலால் அறியலாம்.

## ஆசிரியர்

சங்க காலத்தில் கல்வியறிவு வாழ்க்கையின் அடிப்படை அம்சமாக கருதப்பட்டது. ஆட்சியாளர்கள் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தனர். கற்றறிந்த புலவர்களுக்கு அரசர்கள் மதிப்பும், மரியாதையும் செலுத்தினர். கல்வி குறிப்பிட்ட சமுதாயத்திற்கு மட்டும் உரியதாக கருதப்படவில்லை. அனைத்துப் பிரிவினர்களும் கல்வியில் நாட்டம் செலுத்தினர்.

சங்ககாலப் பெண்களும் கல்வியறிவு பெற்று நூல்கள் இயற்றுமளவிற்கு புலமைப் பெற்றிருந்தனர் என்பதற்கு ஔவையார், வெள்ளிவீதியார் நப்பின்னையார், நச்சள்ளையார் போன்ற பெண்பாற்புலவர்கள் சான்றாகத் திகழ்கின்றனர். பெண்கள்

---

[96] நெடு. வா. 152-153.

அரசவைப் புலவர்களாகவும் திகழ்ந்தனர். மறம் மிக்க மன்னர்களும் பெண்பால் புலவர்களின் சொல் கேட்டு நடந்தனர். இதனை சங்ககாலப் புலவர்களின் எண்ணிக்கையினின்று அறிந்துகொள்ளலாம். உதாரணமாக எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய சங்க இலக்கியங்களில் காணப்படும் இரண்டாயிரத்து இருநூற்று எழுபத்தொன்பது செய்யுட்களை 473-புலவர்கள் படைத்துள்ளனர். இவர்களில் ஏறத்தாழ ஐம்பது பேர் பெண்பாற்புலவர்கள் ஆவர்.

கல்வி இன்றியமையாதத் தேவையாக மதிக்கப்பட்டதுடன், ஆசிரியரும் மதிப்பிற்குரியவராகக் கருதப்பட்டார். கற்பிக்கும் ஆசிரியர்கள் கல்வியில் புலமைப் பெற்றுத் திகழ்ந்தனர். பல நூற்களை முழுமையாகக் கற்றறிந்தும் கேட்டறிந்தும், புலமையுடைய நல்லாசிரியர்கள் பிறரிடம் வாது புரிவதற்கு ஆயத்தமாக புகார் நகரிலே கொடிகளை நாட்டிக் காத்திருந்த தகவலை,

> ''பல் வேள்வித் துறை போகிய,
> தொல் ஆணை நல் ஆசிரியர்
> உறழ்குறித்து எடுத்தஉழுகெழு கொடியும்''[97]

என்ற பட்டினப்பாலை பாடலடிகள் ஆசிரியரின் புலமையைப் பட்டியலிடுகின்றது.

ஆசிரியர்கள் முன்னோர்கள் சென்ற நெறியில் அந்தணர்க்குரிய முறைப்படி முதலில் கருமங்களைச் செய்து முடித்தப்பின் தத்துவங்களை ஆராய்ந்து முறைப்படுத்தி சிறப்பு பெற்றதை மதுரைக் காஞ்சி 759-762வது பாடலடிகள் விளக்குகின்றன.

[97] பட்.பா. 169-171.

கற்பித்த ஆசிரியரை நன்கு மதித்து, அவர்களுக்கு வேண்டிய பொருளைக் கைமாறாகக் கொடுத்து உண்ணாதவன் செல்வம் அழிந்து விடும் என்று தோழி கூறியதை,

> "கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான், - விச்சைக்கண்
> தப்பித்தான், பொருளே போல் தமியவே தேயுமால்"[98]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

பல மாணாக்கர்களில் கல்வியைத் கற்கத் தொடங்கியுள்ள வயதில் இளைய மாணவனொருவன் வேற்றூரில் சென்று நன்கு கற்று உயர்ந்து புலமையுடனும், தலைமையுடையவனுமாக விளங்கினான். இக்கருத்தினை,

> "இவன் ஓர் இள மாணாக்கன்
> தன் ஊர் மன்றத்து என்னன் கொல்லோ?
> இரந்தூன் நிரம்பாமேனியொடு
> விருந்தின் ஊரும் பெருஞ்செம்மலனே"[99]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவ்வாறு கல்விக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டமையை சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. கல்வியறிவு இல்லாதவரைக் "கண்களற்ற குருடனுக்குச் சமமானவன்" என வள்ளுவர் குறிப்பிடுகிறார். பிச்சை எடுத்தாவது கல்வி கற்க வேண்டுமென்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. இவ்வாறு சங்ககாலத்தில் கல்வி சிறப்புற்று விளங்கியது.

## மருத்துவத் தொழில்

சங்ககாலத்தில் மருத்துவத் தொழில் இருந்தது. எளிதில் தீர்க்கவியலாத நோய்வாய்ப்பட்டவர்களுக்கு விரும்பியதை எல்லாம் கொடுக்காமல் மருத்துவர்

---

[98] கலித். 149 4-5.
[99] குறுந். 33: 1-4.

ஆராய்ந்து நோய்க்குத் தக்கவாறு மருந்து கொடுத்தனர். இவ்வாறு அறமுடைய மருத்துவர் இருந்ததை,

> "அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது
> மருந்து ஆய்ந்து கொடுத்து அறவோன் போல"[100]

என்ற நற்றிணைப் பாடல் வழியாக தலைவி எடுத்துரைக்கின்றாள். இதன் மூலம் பண்டையத் தமிழர்களின் மருத்துவப் புலமையை அறியமுடிகிறது.

## பெண்கள் மலர் விற்றல்

சங்க காலத்தில் மலர் விற்கும் மகளிரைக் குறித்து இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. பெண்கள் மலரினை அழகிய கூடைகளிலும், நீண்ட கணுக்களையுடைய மூங்கில் குழலிலும் அடைத்துச் சென்று விற்பனைச் செய்தனர். இதனை அகநானூறு 331; 391-வது பாடல்கள் குறிப்பிடுகின்றன. உழவருடைய மகள் கடகப்பெட்டியில் குருக்கத்தி மலருடன், சிறிய சண்பக மலரினையும் வாங்கிக் கொள்வீராக என்று விலை கூறி விற்றாள். இதனை,

> "துய்த்தலை இதழ குருக்கத்தியொடு
> பித்திகை விரவு மலர் கொள்ளீரோ என
> வண்டு சூழ் வட்டியள் திரிதரும்
> தண்டலை உழவர் தனிமட மகளே"[101]

என்ற பாடல் விளக்குகின்றது.

பூ விற்கும் பெண் பாதிரியின் வெண்மையான புதிய மலர்களை வண்டுகள் மொய்க்கும்படி தெருக்கள் தோறும் சுமந்து சென்று விலைகூறி விற்றாள்.

[100] நற். 136: 2-3.
[101] மேலது. 174: 6-9.

இம்மலரின் மணமானது தலைவன் வினைமேற்சென்ற காரணத்தால் தலைவிக்கு மகிழ்ச்சியூட்டவில்லை. ஆகவே பூ விற்பவள் தனக்கு துன்பம் செய்வதாக தலைவி கருதினாள். இத்தகவலை,

''……………….... துய்த்தலைப் பாதிரி
வால் இதழ் அலரி வண்டு பட ஏந்தி
புதுமலர் தெருவு தொறு நுவலும்
நொதுமலாட்டிக்கு நோம் என் நெஞ்சே''[102]

என்ற பாடலடிகளால் அறியலாம். நொதுமலர் என்பது அயலவர். நொதுமலாட்டி என்பது இன்ப துன்பங்களைக் குறித்து வினவாமல் பூ விற்பவனைக் குறித்தது. இன்றைய சமுதாயத்திலும் பூ விற்கும் மகளிரைக் காண முடிகிறது.

## பனையோலைப் புட்டி செய்தல்

சிறுகுறுத் தொழில் முறைகளில் சங்ககாலப் பெண்கள் சிறந்து விளங்கினர். தங்களின் குல முறைகளுக்கேற்ப சில தொழில்களில் பெண்கள் ஈடுபட்டு வணிகம் செய்தனர். புலைத்தி என்னும் பெண் பனை ஓலையினால் கலைநயத்துடன் புட்டி செய்து விற்றதை,

''மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்தது ஓர்
போழின் புனைந்த வரிப்புட்டில்''[103]

என்ற பாடல் குறிப்பிடுகிறது. மகளிர் வினைமேற் செல்லும் போது, பனை ஓலையால் முடையப் பெற்ற புட்டியை எடுத்துச் செல்வது வழக்கம். இன்றும் பனை ஓலையால் புட்டி முடையும் வழக்கம் காணப்படுகிறது.

---

102 நற். 118: 8-11.
103 கலித். 117: 7-8.

## பரத்தையர்

சங்க காலம் முதல் தமிழகத்தில் பரத்தமை ஒரு தொழிலாக இருந்து வந்துள்ளதை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. தொல்காப்பியம், திருக்குறள், இரட்டைக்காப்பியங்கள் போன்ற நூல்கள் பரத்தையர் தொழில் பற்றியச் செய்திகளை குறிப்பிடுகின்றன.

பரத்தையரை பொது மகளிர் எனவும் அழைப்பர். இந்தப் பொது மகளிர் பரந்து மேயும் வாழ்வைக் கொண்டவர். ஆதலால் பரத்தையர் எனப்பட்டனர். பரத்தையர் இளைஞர்களைக் கவர விசேடம் என்னும் ஒருவகை ஆடையை உடுப்பர். இது ஆம்பல் தழைகளால் புனையப்பட்டதாகும். மேலும் பலரறிய தலைவனுடன் தேரில் சென்று நீராடுதலும், அவனைத் தம்மிடத்தே ஈடுபடச் செய்தலும், தம்மிடமிருந்த தலைவனைப் பிரித்தெடுக்க இயலுமா எனத் தலைவிக்கு அறைகூவல் விடுதலையும் குறுந்தொகை 80-வது பாடல் எடுத்துரைக்கின்றது.

பரத்தையர் மகளிரை இற்குலப்பெண்டிராகக் கருதி மணம் புரியினும் அவர்களின் இயல்பாகிய பொருள் கவரும் எண்ணமே மிகுந்திருக்கும். தலைவனிடம் உண்மையாக அன்பு செலுத்துவதில்லை. பரத்தையர் பெறும் மக்கள் குல ஒழுக்கத்திற்கு ஒத்து காணப்படுவதில்லை. இவர்கள் கற்பு பேணுவதில்லை என,

‘‘யாணர் ஊர நின் மாண் இழை மகளிரை
எம் மனைத் தந்து நீதம்இயினும், அவர்தம்
.....................................................................
நன்றி சான்ற கற்பொடு
எம்பாடு ஆதல் அதனினும் அரிதே’’[104]

[104] நற். 330: 6-11.

என்ற பாடல் குறிப்பிடுகிறது. "மாயப்பொய்கள் பல கூட்டும் மாயத்தாள்" என சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது.

தம்மிடம் இன்பம் பெற விரும்பிய ஆடவரிடம் உள்ள செல்வத்தைப் பெற்றுக் கொண்டு பரத்தமை வாழ்வில் ஈடுபட்டனர். சிலப்பதிகாரம் இவர்களை 'மங்கலத் தாசியர்' என்கிறது.

> "மங்கலத் தாசியர் தம்கலம் ஒலிப்ப"[105]

என சுட்டுகிறது.

தம்மிடம் வந்த ஆடவர்களை பண்பாலும், பேச்சாலும் மயக்கி செல்வம் பறிக்கும் கொண்டி மகளிர் என,

> "பண்டேர் மொழியிற் பயன்பல வாங்கி
> வண்டின் துறக்கும் கொண்டி"[106]

என குறிப்பிடுகிறது.

திருக்குறள் "உயர்ந்தோர், இழிந்தோர் என்ற எவரையும் விலை தந்தால் தழுவுகிற மகளிரது மெல்லிய தோள்கள் அறிவில்லாத கீழ் மக்கள் புகுந்து அழுந்தும் நரகம்" என குறள். 919 குறிப்பிட்டுள்ளது.

பரத்தையர் பற்றிய வெறுப்பு சங்ககால மக்களிடம் இடம் பெற்றிருந்ததை தோழி கூற்றுப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. "இதுவோ மற்றுநின் செம்மல்" எனக் கூறும் தோழிக்கூற்று பரத்தைமை ஏற்றுக்கொள்ளத்தக்க பண்பல்ல என்பதை வெளிப்படுத்துகின்றது.

---

105 சிலம்பு - கடலாடுகதை - 5.

106 உதயகுமாரன், அம்பலக் காதை 108-109.

"பண்டைக் காலத்தில் பரத்தமை என்பது தவிர்க்கவியலாத முக்கியக்கூறாக இருந்தது. அதிலும் பழந்தமிழ் சமுதாயத்தில் பெண்களுக்கென கடுமையான கட்டுப்பாடுகள் ஏதும் இல்லாததாலும் அதிக சுதந்திரம் அவர்களுக்கு வழங்கப்பட்டதாலும் திருமணம் என்கிற நிலைகளைத் தாண்டிய, பிற மகளிர் உறவு தவிர்க்க முடியாததாகிறது என வாஊசி என்பவர் குறிப்பிட்டுள்ளார்"[107]. இதன் மூலம் பரத்தையர் குறித்த உறவு முறைகளை அறிய முடிகிறது.

## தொகுப்புரை

சங்ககாலத்தில் ஐவகை நிலங்களின் அடிப்படையில் சமுதாய அமைப்பு இருந்தது. சங்கத் தமிழர்கள் உயர்ந்த நாகரிகம் உடையவர்களாகவும், விருந்தோம்பல் பண்பில் தலைச் சிறந்தவர்களாகவும், பிறருக்கு பகிர்ந்து கொடுக்கும் செயலில் இன்புற்றும் வாழ்ந்து வந்தனர். மனை விளக்காகிய மகளிர் இல்லத்தில் விளக்கேற்றுபவர்களாக திகழ்ந்தனர்.

விழாக்கள் மக்கள் வாழ்வில் ஏற்படும் மனச்சோர்வினை நீக்கி மகிழ்ச்சியும், எழுச்சியும் ஏற்படுத்துவதோடு குடும்ப உறவையும், சமூக உறவையும் வலுப்படுத்துவதாக அமைகிறது. இதன் மூலம் சமூகத்தில் ஒரு பிணைப்பு உருவாக வகை செய்கிறது.

சங்ககாலத்தில் மன்றங்கள் விவாதங்கள் நிகழ்த்தவும், அறிவுப்பூர்வமான செய்திகளைப் பகிர்ந்து கொள்ளவும் துணை செய்தது. இம்மன்றங்களில் விழாக்கள் நடைபெற்றதையும், தவறு செய்தவர்களைத் தண்டிக்கும் நிலை இருந்ததையும் விளக்கப்பட்டுள்ளன.

---

[107] வாஊசி, மா, ப஁றுளியிலும், அதற்கப்பாலும் பழந்தமிழ்ச் சங்ககால நாகரிகமும், பண்பாட்டு ஏகாதிபத்தியமும், ப. 114.

சங்ககாலத் தமிழர்கள் வேளாண்மையை முக்கியத் தொழிலாகத் கொண்டிருந்தனர். இதில் பெண்களின் பங்களிப்பு அதிகமாக காணப்பட்டது. ஒவ்வொரு நிலத்திலுள்ள பெண்களும் அந்தந்த நிலத்திற்கேற்ற தொழில் முறைகளைக் கைக் கொண்டு பொருளாதாரத்தைப் பெருக்கினர்.

பெண்கள் வேளாண்மை, பண்டமாற்று, வணிகம் இவற்றில் ஈடுபட்டு இல்லறத்தை சிறப்பு செய்தனர். ஐவகை திணைகளுக்குரிய பொதுவான தொழில்கள் மட்டுமின்றி பல்வேறு கைவினைக் கலைகளும் சங்ககால சமுதாயத்தில் நடைபெற்று வந்துள்ளது.

சிறுகுறு தொழில் முறைகளில் பெண்களின் ஈடுபாடு அதிகமாக காணப்பட்டது. இதன் மூலம் குடும்பத்தின் வருமானத்தைப் பெருக்கி மதிப்புடனும் மரியாதையுடனும் வாழ்ந்தனர்.

கல்வியில் பெண்களும், ஆண்களும் புலமை பெற்று விளங்கினர். இது மனித சமூகத்தில் அறியாமை நீங்க வழி செய்தது.

பெண்கள் மலர் விற்றலில் மூங்கில் குழாயில் அடைத்துச் சென்று விற்றதையும், கடகப்பெட்டியில் வைத்து விற்ற நிகழ்வையும், பனையோலையால் புட்டி செய்து விற்றதையும் அறிய முடிகிறது. இவ்வாறு வணிகத்தில் பெண்கள் ஈடுபட்டு நடுநிலைப் பண்புடன் சிறந்து விளங்கினர் என்பதை இவ்வியல் தெளிவாக விளக்குகின்றது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


| | | |
|---|---|---|
| சாமி சிதம்பரனார் | - | **பட்டினப்பாலை**,<br>ஆராய்ச்சி உரை,<br>அறிவுப் பதிப்பகம்,<br>142, ஜானி ஜான்கான் ரோடு,<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014,<br>பதிப்பு 2018. |
| சுப்பிரமணியன், ச.வே., | - | **சங்க இலக்கியம் பத்துப்பாட்டு**,<br>முல்லைப்பாட்டு,<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சென்னை,<br>பதிப்பு 2009. |
| செயபால், இரா., (உ.ஆ) | - | **அகநானூறு (மூலமும், உரையும்)**,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை - 600 098,<br>முதல் பதிப்பு 2004. |
| தட்சிணா மூர்த்தி, அ., | - | **ஐங்குறுநூறு (மூலமும், உரையும்)**,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை - 600 098,<br>முதல் பதிப்பு 2004. |
| நாகராசன், வி., (உ.ஆ) | - | **குறுந்தொகை (மூலமும் உரையும்)**<br>நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,<br>41-பி - சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர்,<br>சென்னை - 600 098,<br>முதல் பதிப்பு 2004. |
| நாகராசன், வி., (உ.ஆ) | - | **பத்துப்பாட்டு (இரண்டாம் பகுதி)**,<br>நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட், அம்பத்தூர், சென்னை,<br>முதல் பதிப்பு 2004. |

பாலசுப்பிரமணியன், கு.வெ., - **நற்றிணை (மூலமும், உரையும்)**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098, முதல் பதிப்பு 2004.

மோகன், இரா. (உ.ஆ)., - **பத்துப்பாட்டு (மூலமும் உரையும்)**, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை - 600 098, முதல் பதிப்பு 2004.

விசுவநாதன், அ., - **கலித்தொகை (மூலமும், உரையும்)**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், முதல் பதிப்பு 2004.


## துணைமை ஆதாரங்கள்


- **பரிசுத்த வேதாகமம்**, இந்தியவேதாகமச் சங்கம், 206, மகாத்மா காந்தி சாலை, பெங்களூர் - 560 001.

இளம்பூரணர் (உ.ஆ)., - **தொல்காப்பியம் பொருளதிகாரம்**, சாரதா பதிப்பகம், சென்னை - 600 014, முதல் பதிப்பு 2005.

காந்தி, க. - **தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும்**, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை - 20.

கார்த்திகேசு சிவத்தம்பி - **பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098.

கோமதி நாயகம், பி., - **தமிழகச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு**,
சங்ககாலம் முதல் கி.பி. 1336 வரை,
ஜெயபிரசாத் பதிப்பகம்,
217 ஏ, தெற்கு மாசி வீதி,
மதுரை - 625 001,
முதல் பதிப்பு 1991.

கைலாசபதி, க., - **பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்**,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
பிரைவேட் லிமிடெட்,
சென்னை - 600 098,
மூன்றாம் பதிப்பு 1999.

சக்திவேல், சு., - **நாட்டுப்புற இயல் ஆய்வு**,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை - 600 108,
முதல் பதிப்பு 1983.

சசிவல்லி, வி.சி., - **பண்டைத் தமிழர் தொழில்கள்**,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 600 113.

சண்முகம் பிள்ளை, மு., - **சங்கத் தமிழர் வழிபாடும், சடங்குகளும்**,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ, அஞ்சல், தரமணி,
சென்னை - 600 113,
பதிப்பு 1996.

சரளா இராச கோபாலன், - **சங்க இலக்கியம் (அகம்)**,
ஒளிர் பதிப்பகம்,
63, டாக்டர் ரங்காச்சாரி சாலை,
சென்னை - 600 018.
முதல் பதிப்பு 1988.

சிவகுமார், நட - **திணை காலாண்டிதழ்**,
ஆய்வுச் சிறப்பிதழ்,
இதழ் 19, 20,
மார்ச் 2018.

சுப்பிரமணியன், கா., - **சங்ககாலச் சமுதாயம்,**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
பிரைவேட் லிமிடெட்,
சென்னை - 600 098,
மூன்றாம் பதிப்பு 1993.

சுப்பிரமணியன், நா., - **தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு - தமிழ்நாட்டு வரலாறு, சங்ககால வாழ்வியல்**,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்,
சென்னை - 600 098.
முதல் பதிப்பு 1986.

சோமசுந்தரனார், பொ.வெ - **புறப்பொருள் வெண்பாமாலை**,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 18.

சோனல் தாஸ், அ.ம., - **அகநானூற்றில் கானலம் பெருந்துறை மக்கள் வாழ்வியல்**,
செம்மூதாய் பதிப்பகம்,
நெ, 17, தாகூர் தெரு,
எம்.எம். டி.ஏ. நகர் சிட்ல பாக்கம்,
சென்னை - 600 064.
முதல் பதிப்பு 2012.

தமிழண்ணல் - **சங்க மரபு**,
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்ப முதலி தெரு,
மதுரை - 625 001,
முதல் பதிப்பு 2009.

நமசிவாயம், சே., - **தமிழர் உணவு**,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
அடையாறு, சென்னை - 600 020,
முதல் பதிப்பு 1981.

நீலகண்டபிள்ளை, தா., - **சங்கத்தமிழர் வாழ்வியல்**,
செம்மூதாய் பதிப்பகம்,
நெ, 17 - தாகூர் தெரு,
எம்.எம்.டி.ஏ. நகர், சிட்லபாக்கம்,
சென்னை - 600 064,
முதல் பதிப்பு 2012.

பக்த வத்சல பாரதி - **இலக்கிய மானிடவியல் அடையாளம்,**
1205/1, கருப்பூர் சாலை,
புத்தாநத்தம் - 621 310.
திருச்சி மாவட்டம்,
இந்தியா,
முதல் பதிப்பு 2014.

பாலசுப்பிரமணியன், கு.வெ., - **புறநானூறு (மூலமும், உரையும்)**,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை - 600 098.
முதல் பதிப்பு 2004.

பாஸ்கர தாஸ், ஈ.கோ., - **அகப்பொருள் பாடல்களில் தலைவி**,
மூவேந்தர் அச்சகம்,
சென்னை - 14,
முதல் பதிப்பு 1982.

புலியூர்க்கேசிகன் - **திருக்குறள் புதிய உரை,**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை - 600 018.
27-ம் பதிப்பு 2010.

புலியூர்க்கேசிகன் - **சிலப்பதிகாரம் (மூலமும் உரையும்)**
சாரதா பதிப்கம்,
ஜி4 - சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீகிருஷ்ணபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை 600 014,
முதல் பதிப்பு 2010.

புலியூர்க்கேசிகன் - **மணிமேகலை**,
பாரிநிலையம்,
சென்னை.
பதிப்பு 2007.

மாதையன், பெ., - **அகத்திணைக் கோட்பாடும், சங்க அகக்கவிதை மரபும்**,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் சாலை,
சென்னை - 600 014,
முதல் பதிப்பு 2009.

மாதையன், பெ., - **சங்க இலக்கியத்தில் குடும்பம்**,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை - 600 098.
முதல் பதிப்பு 2010.

மாதையன், பெ., - **சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்**,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை - 600 098,
முதல் பதிப்பு 2004.

மோகன், இரா., - **பொருநராற்றுப்படை**,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை - 600 098,
ஐந்தாம்பதிப்பு 2014.

மோகன், இரா., - **பெரும்பாணாற்றுப்படை**,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை - 600 098,
முதல் பதிப்பு 2004.

ருக்மணி, இரா., - **பட்டினப்பாலை (சங்க இலக்கியம்),**
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.
முதல் பதிப்பு 2009.

வாஞ்சி, மா., - **பஃறுளியிலும், அதற்கப்பாலும் பழந்தமிழ்ச் சங்ககால நாகரிகமும், பண்பாட்டு ஏகாதிபத்தியமும்,**
ஜென்ஸ் வெளியீட்டாளர்,
ஊரப்பாக்கம்,
முதல் பதிப்பு 2011.

ஸ்டீபன், ஞா - **இலக்கிய இனவரைவியல்,**
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்,
41, பி. சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098,
பதிப்பு - 2017.

## ஆய்வேடுகள்


சுஜா பாக்கிய பிருந்தா, நா., - **எட்டுத்தொகையில் அகப் பாத்திரங்கள்**
மனோன்மணியம் சுந்தரனார்
பல்கலைக்கழகம்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
டிசம்பர் 2014.

சுஜித்திரா கிருஷ்ணகுமாரி - **சங்க அகப்பாடல்களில் நிலவியல் பின்புலம்**,
மனோன்மணியம் சுந்தரனார்
பல்கலைக்கழகம்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
நவம்பர் - 2018.


## அகராதிகள்


- **மதுரைத் தமிழ்ப் பேரகராதி 2-ம் பாகம்**
சந்தியா பதிப்பகம்,
ஃப்ளாட், ஏ நியூடெக் வைபவ்,
57, 53-வது தெரு, அசோக் நகர்,
சென்னை - 600 083.
2004

- **கலைக்களஞ்சியம் - தொகுதி 2**
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை.
பதிப்பு 1955.

கந்தையா, ந.சி., - **செந்தமிழ் அகராதி**,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 600 013.
மறுபதிப்பு 2009.

பெரிய சாமித்தூரன், ம.பெ., - **கலைக்களஞ்சியம், தொகுதி - 7,**
மருகூர்-பௌதிகம்,
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை,
முதற்பதிப்பு 1960.

முத்துசாமி, ந, மணி, சி - **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி**,
நாகராஜ் பதிப்பகம் (பி) லிட்,
சென்னை - 600 096.
2008.

## குறிஞ்சி நிலம்





தெய்வம் - முருகன்



நீர் - அருவி



மரம் - வேங்கை



உணவு - தினை

## முல்லை நிலம்





கடவுள் - திருமால்



நீர் - காட்டாறு



மரம் - கொன்றை



உணவு - பால், தயிர்

## மருத நிலம்





தெய்வம் - இந்திரன்



நீர் - குளம்



மரம் - மருதம்



உணவு - நெல், அவல்

## நெய்தல் நிலம்





தெய்வம் - வருணன்



நீர் - கேணி நீர்



மரம் - புன்னை



உணவு - மீன்

## பாலை நிலம்





தெய்வம் - கொற்றவை



நீர் - நீரில்லா கிணறு



மரம் - மரா மரம்



உணவு - புல்லரிசி

## சங்ககாலத் தொழில்கள்



நாற்று நடுதல்



கதிரடித்தல்



நெல் குற்றுதல்



மோர் விற்றல்



உப்பு விற்றல்



மண்பாண்டத் தொழில்

சங்க இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றைப் பதிவு செய்து வைத்திருக்கும் வரலாற்றுப் பெட்டகமாக அமைந்துள்ளன. சமூகத்தின் வளர்ச்சிக்கும், பண்பாட்டுச் சிறப்பிற்கும் மகளிர் முதன்மைக் காரணியாக அமைகின்றனர். பண்பாட்டு வளர்ச்சி, நாகரிக வாழ்வு, சுற்றம் ஓம்புதல், நம்பிக்கை, சடங்குகள், வழிபாடுகள் விழாக்கள் ஆகியன மகளிரால் மேம்பாடு அடைந்தன என்பதை சங்க இலக்கியம் வலியுறுத்துகின்றன. பெண்கள் இல்லறத்தை மேம்படுத்தவும், உழவுத்தொழிலைக் காக்கவும் பாடுபட்டனர்.

மக்கள் அவர்கள் வாழும் திணை மற்றும் நிலங்களுக்கேற்ப பகுக்கப்பட்டனர். சூழ்நிலைக்கேற்ப மக்கள் வாழ்வு அமைவது இயல்பாதலின் மக்கள் வாழ்வு முறைகளிலும் மாற்றங்கள் இருந்தன. பிறப்பாலும், தொழிலாலும் உயர்வு, தாழ்வு தோன்றப்பெறாது தத்தம் ஆற்றலுக்கேற்ப உழைத்து, உண்டு மகிழ்ந்து வாழ்ந்து வந்தனர். உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றலைத் தரும் பொருளை உணவு என்பர். பழங்காலத்தில் மலைவளமும், காட்டு வளமும், வயல் வளமும், கடல் வளமும் சிறந்து விளங்கி மக்களுக்குப் பல்வேறு பயன்களை அளித்து வந்தன. முற்பட்ட சங்ககால வாழ்க்கை உணவு சேகரிக்கும் வாழ்க்கையாக இருந்தது. ஒவ்வொரு நிலத்திற்கும், ஒவ்வொரு வகையான உணவு முறைகள் பழக்கத்தில் இருந்தாலும் வணிகம், விருந்தோம்பல், இடம்பெயர்தல் அடிப்படையில் ஐந்நில மக்களும், ஐந்து நிலத்தின் உணவையும் உண்டு வாழ்ந்ததை அறிய முடிகிறது.

குறிஞ்சி நிலத்தில் விளையும் முக்கிய தானியமாக தினை இருந்தது. உழவில்லாமல் பெறப்படும் உணவுப்பொருட்களாக மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகியவை காணப்பட்டது. தினையரிசியைக் குற்றி மாவு எடுத்து உணவாக உட்கொண்டதைக் குறித்தும், குறமகள் பலாவிதையின் மாவினைக் கலந்து உணவு தயாரித்ததைக் குறித்தும் விளக்கப்பட்டுள்ளன. தேனுடன் பால் கலந்துண்டதையும், நெய்கலந்த உணவினை உண்டதையும் எடுத்தியம்பப்பட்டுள்ளன. ஊனுணவாக ஆட்டிறைச்சி, வெள்ளெலி மாமிசம் இவற்றை உட்கொண்டனர். வெற்றிலை உண்ணும் பழக்கம் இருபாலரிடமும் காணப்பட்டது. கள்ளுணவு தயாரித்து பெண்கள் ஊற்றிக் கொடுத்ததையும், அக்கள்ளானது சீற்றத் தன்மையுடையதாகவும், வெறியைத் தருவதாக இருந்ததையும், விருந்தோம்பலில் கள்ளுணவு இடம் பெற்றதைக் குறித்தும் விளக்கப்பட்டுள்ளது.

முல்லை நில மக்களிடம் காய்ச்சப்படாத பாலிலிருந்து வெண்ணெய் தயாரிக்கும் பழக்கம் காணப்பட்டது. உணவினைப் பச்சையாக உண்டதுடன், தாளிப்பதால் கிடைக்கும் சுவையையும் அறிந்திருந்தனர். முல்லைநில மகளிர் விருந்தினருக்கு கருணைக்கிழங்கு பொரியலுடன் உணவளித்தனர். கள்ளுணவு தவறன்று எனக் கருதிய சங்ககாலத்தில், கள்ளினை வெறுத்த பெற்றோர் இருந்ததைக் குறித்தும் விளக்கப்பட்டுள்ளது. பாலை வழியில் பயணம் செல்வோர் தாகந்தீர்க்கும் அமுதமாக நெல்லிக்கனியைக் பயன்படுத்தினர். முல்லை நில மகளிர் விருந்தினருக்கு விளாம்பழம், களாம்பழம் இவற்றைக் கொடுத்து உபசரித்ததையும், கருவுற்ற மகளிருக்கு புளியம் பழம் கொடுத்ததைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. இருமலாகிய பகையைத் தீர்க்க புற்று மண்ணை வாயில் அடக்கிய செய்தி எடுத்தியம்பப்பட்டுள்ளது.

மருதநில மக்கள் கொள்ளும், பயறும், பாலும் கலந்த கஞ்சியுணவை விரும்பியுண்ட செய்தியை அறிய முடிகிறது. சங்க காலத்தில் நெல்லைப் புழுக்கி அரிசியாக உபயோகிக்காமல் பெரும்பாலும் கைக்குத்தல் அரிசியாக உபயோகித்தனர். பிரம்பின் புளிப்பும், இனிப்பும் கலந்து ஆக்கிய புளியங்கறியை தலைவி கணவனுக்குக் கொடுத்து உண்டது விளக்கப்பட்டுள்ளது. திருமண விருந்தில் உழுந்தம் பருப்பினால் செய்த சோற்றினைக் கொடுத்ததையும், உழுந்தம் மாவினால் உழுந்தம் பணியாரம் செய்து உண்டதும் விளக்கப்பட்டுள்ளது. அவலும், நெற்பொரியும் அன்றைய வழக்கிலுள்ளதைப் போலவே இன்றும் வழக்கிலுள்ளது. தலைவனது பரத்தமையை வெறுத்த மகளிர் நொய்யரிசி உணவினை உண்டது குறித்தும் ஆராயப்பட்டுள்ளது.

மாங்காய் ஊறுகாயுடன் கறிவேப்பிலை கலந்து ஆக்கியதையும், பழஞ்சோற்றுணவினை உண்ட செய்தியும் அறியப்படுகிறது. நெய்தல் நில மக்கள் மீனுணவினை குழம்புக் கறியாகவும், சுட்டும், கருவாடாகவும் உண்ணும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். மீனைப் பொரித்துண்ட செய்தி காணப்படவில்லை. பாலைநில மக்கள் வறுமையில் வாடினாலும் விருந்தினரை சிறப்பாக உபசரிக்கும் ஈகைப் பண்புடையவர்களாகத் திகழ்ந்தனர். பனங்குருத்தை உணவாகப் பயன்படுத்தியதையும், மாலைநேரத்தில் பனங்குருத்தைப் பிளந்து பதப்படுத்த இட்டதான செய்தியையும் அறிய முடிகிறது. சங்ககாலத் தமிழர்கள் இக்கால மக்களைப் போன்று குளிர்ந்த நீரையும், வெந்நீரையும் பயன்படுத்தியதையும், தண்ணீரை தெளிய வைப்பதற்காக தேற்றாங்கொட்டை, கடுக்காய் இவற்றை பயன்படுத்தியதையும் விளக்கப்பட்டுள்ளது.

சங்ககால மகளிர் தங்கள் குழந்தைகள் தளர்நடை பயிலும் பருவத்திலும் பாலூட்டியச் செய்தி தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. ஒருவரால் எடுத்தாளப்பட்டது பலரால் பின்பற்றப்பட்டால் அது மரபு எனப்படும் என்பதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெளிநாடுகளில் இருந்து வருவிக்கப்பட்டு இன்று வழக்கிலிருக்கும் ஒரு சில உணவுப்பொருட்களைத் தவிர பண்டையத் தமிழர் பயன்படுத்திய அத்தனை உணவுப் பொருட்களையும் இன்றைய மக்களாலும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இருப்பினும் புதுமை என்ற பெயரில் சிலர் துரித உணவுப் பழக்கத்திற்கு மாறியுள்ளனர். இவ்வுணவுப் பழக்கம் உடலுக்குத் தீங்கு விளைவிப்பதாக உள்ளதால் பழைய உணவு முறைக்கு மீண்டும் மாறி வருவது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு ஐந்திணைக்கும் உரிய உணவு குறித்தும், உணவு தயாரிப்பது குறித்தும் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

சங்ககாலம் முதற்கொண்டு தமிழர்கள் கடைப்பிடித்து வரும் பல்வேறு நம்பிக்கைகளையும், சடங்குகளையும் இலக்கியத்தின் வாயிலாக எடுத்தியம்பப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் தமிழரின் தொன்மையான பண்பட்ட நடத்தை முறைகளையும், ஒழுக்க நெறிகளையும், வாழ்வியல் சூழல்களையும், நம்பிக்கை மற்றும் சடங்கியல் நிகழ்வுகளையும் அகம்புறம் சார்ந்த நிலையில் பதிவு செய்துள்ளன. நம்பிக்கை, சடங்கு இவற்றின் அடிப்படையிலேயே சங்க இலக்கியம் படைக்கப்பட்டுள்ளது என்று கூறுமளவிற்கு அவை சார்ந்த பல்வேறு கருத்தாடல்களையும், விரிந்த நிகழ்வுகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. நம்பிக்கை செயல்பாடுகளாக நிமித்தம், விரிச்சி, கட்டு, கழங்கு என்ற பெயர்களில் சமயம் சார்ந்த சடங்கு நிகழ்வுகள் இன்றும் பின்பற்றப்பட்டு வருகிறது.

ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னர் நாளும், நேரமும், நல் நிமித்தமும் பார்த்து தொடங்கினால் அச்செயல் நன்மையாக முடியும் என நம்பிக்கை கொண்டனர். விருச்சி கேட்டு செல்லும் பணியை பெண்கள் மேற்கொண்டனர். இவர்களை 'செம்முது பெண்டிர்' என சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. ஒரு செயலினைத் தொடங்கும் போது அச்செயலால் தீங்கு நேரிட இருப்பின் இயற்கையின் சக்தியால் முன்கூட்டியே மக்களுக்கு தெரிவிக்கப்பட்டது என நம்பினர்.

பறவைகளின் ஒலி, இயக்கம், இடப்பெயர்ச்சி ஆகியவற்றின் மூலம் நிமித்தம் உணரப்பட்டது. விலங்குகள் தீய நிமித்தக் குறிகளாக சங்ககாலத்தில் கருதப்பட்டன. மரத்தை தெய்வத் தன்மையுடையதாக எண்ணி வழிபட்டு நிமித்தம் அறியும் மரபானது பழங்கால தமிழகத்தில் இருந்துவந்துள்ளது. வானில் விண்மீன்கள், கோள்கள், நட்சத்திரங்கள் முதலியவை தோன்றுகின்றன. இவற்றின் செயல்பாட்டிற்கும், உலகில் வாழும் மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என பண்டைய மக்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர்

கண் துடித்தல், கனவு காணுதல், தும்மல், புரையேறுதல் போன்ற நிகழ்வுகள் நிகழுமாயின் அவற்றைக் கொண்டு எதிர்காலத்தைக் கணிக்கும் நம்பிக்கை தமிழர்களிடையே காணப்பட்டது. சங்ககால மக்களிடம் இறை நம்பிக்கை அதிகமாக இருந்ததையும் தெய்வத்திடம் பல்வேறு வேண்டுதல்களை ஏறெடுத்ததைக் குறித்தும், நேர்த்திக்கடன் மற்றும் குழந்தைகளை வழிபடச் செய்ததைக் குறித்தும் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

உயிரினை எடுத்துச் செல்லும் கூற்றுவன் குறித்த நம்பிக்கையும் இம்மை மறுமை வாழ்வு உண்டெனவும் நம்பிக்கைக் கொண்டனர். சொர்க்கம், நரகம் செல்வதற்கும், பிறவி எடுப்பதற்கும் ஊழ்வினைப் பயனே காரணம் என நம்பினர். பலியிடுதல் பேய், பிறைதொழுதல், தைநீராடல் போன்ற பண்பாட்டு மரபுகளையும் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது. திருமண அறிவிப்புத் தொடங்கி, திருமணம் முடியும் வரை பல்வேறு சடங்குகள் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளன. திருமணத்திற்குரிய நல்ல நாளாக திங்களை ரோகிணி நட்சத்திரம் கூடும் நாளை கருதினர். திருமணத்திற்கு முன்பு பெற்றோர்கள் அணிவித்த சிலம்பினை திருமணத்தின் போது கழற்றிவிடும் சடங்கு சிலம்புகழி நோன்பு என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. திருமண நிகழ்ச்சிக்காக வீட்டு முற்றத்தில் பந்தல் அமைத்து, முற்றத்தில் புதுமணல் பரப்பினர். வீட்டு முற்றத்தில் மாலைகளைத் தொங்கவிட்டனர். திருமண நிகழ்வினை பெண்கள் நடத்தி வைத்தனர். திருமண நிகழ்ச்சியில் சுமங்கலிப் பெண்கள் நீராட்டினர். இம் மகளிர் மணமகளை வாழ்த்தும் போது கற்பிலிருந்து விலகாமலிருக்கும்படி வாழ்த்தினர். உறவினர்கள் மணமகளை 'பெருமனைக்கிழத்தி ஆவாய்' என்று வாழ்த்தினர். திருமண நிகழ்ச்சியின் போது 'முழவு' என்னும் இசைக்கருவி இசைக்கப்பட்டது. மணமகளுக்குப் புத்தாடை அணிவிக்கப்பட்டது. திருமணத்தின் போது மணமகளுக்கு வாகையிலையும், அருகம்புல்லின் மொட்டும் கலந்து தயாரிக்கப்பட்ட காப்புக்கயிறு கட்டினர்.

சங்ககால வாழ்க்கையில் திருமணத்தின் போது மணமகனுக்கு சடங்குகள் செய்யப்பட்டதாக குறிப்புகள் எதுவும் கிடைக்கவில்லை. குழந்தை பிறந்த ஐந்தாம் நாளில் குழந்தைக்கு ஐம்படைத்தாலி அணிவித்தல் ஒரு சடங்காகப் போற்றப்பட்டு

வந்தது. விழாக்காலத்தில் மக்கள் தூக்கத்தையும் விடுத்து விழா நிகழ்ச்சிகளில் பங்கேற்றனர். இந்நிகழ்வுகள் இக்காலத்திலும் தொடர்ந்து வருகின்றன என்பன போன்ற பல்வேறு செய்திகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

குடும்பம் காலந்தோறும் மாற்றம் கொண்டதாக, சமுதாயச் சூழலுக்கேற்ற வடிவைப் பெற்று, ஒரு சமுதாயப் பிரிவாக தொடர்ந்து இயங்கி வருகிறது. அடிப்படையில் குடும்பம் என்பது கணவன், மனைவி என்ற இரு உறவுகளில் அமைவதாகும். இது காலப்போக்கில் இரத்த உறவுடைய உறுப்பினர்களாகிய மகன், மகள், உடன்பிறந்தோர், பேரன், பேத்தி எனும் நிலைகளில் விரிவடைந்துச் செல்வதாகும்.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவன், தலைவியே முதன்மை உறுப்பினர்களாக குறிப்பிடப்பட்டுள்ளனர். தலைவன், தலைவி எனும் இருவர் சார்ந்த குடும்பங்களின் இரு அலகுகளாக தந்தை, தாய், மகள், மகன் எனும் உறவுகளைக் காணலாம். மகன் பிறப்பினைக் குறித்து முதன்மையாகப் பேசப்பட்ட சங்ககால வாழ்வில் பெண் குழந்தை பற்றிய குறிப்பு மிகுதியாக இடம் பெறவில்லை. சங்ககாலத்தில் கூட்டுக்குடும்ப முறையை விட தனிக்குடும்ப முறையே அதிகமாக காணப்பட்டது.

தலைவன், தலைவியின் காதல் குறித்து பெண்கள் அலர் தூற்றுதல் சமூகத்தின் எதிர்ப்பைக் காட்டுகிறது. தலைவியின் காதல் பெற்றோருக்குத் தெரிந்த போது தலைவியை வீட்டுக்குள் சிறைவைத்தனர். இதனை ‘இற்செறித்தல்’ என சங்க மரபு குறிப்பிடுகிறது. தமிழர் அகவாழ்வின் முக்கியப் பண்பாக ‘அறத்தொடு

நிற்றல்' திகழ்கிறது. தலைவியின் களவொழுக்கத்தைக் கற்பொழுக்கமாக மாற்றி அவளுக்கு நன்மதிப்பைப் பெற்றுத் தருவதில் தோழி மிகுந்த அக்கறையுடன் செயல்பட்டு தலைவி மற்றும் தலைவனுக்கு அறிவுரைக் கூறுமளவிற்கு சிறந்த அறிவாற்றலுடன் திகழ்ந்ததைக் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

தலைவியின் காதலை அவளது உறவினர்கள் ஏற்க மறுத்து இற்செறிப்பு நிகழும் போதும், வேற்று வரைவின் போதும் தலைவி, தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்வாள். உடன்போக்கு அறநெறியென்று தாய் மகிழ்ந்தாலும், தாயின் உள்ளமானது எவ்வாறெல்லாம் துன்புறுகிறது என்றும், தன் மகள் மீது கொண்டிருந்த கற்பனைகள் அனைத்தும் ஒரே வினாடியில் இழந்து விடுகிறதையும், தாயின் உள்மனதின் வருத்தத்தையும் சங்க இலக்கியத்தின் மூலம் ஆராயப்பட்டுள்ளது. பெரியோர் கூடிப் பேசி நடத்தும் திருமணங்களும் சங்ககாலத்தில் நடந்துள்ளன. திருமணம் குறித்து பேசுவதற்கு மணமகன் வீட்டிலிருந்து பெண் வீட்டிற்குச் சென்றனர். திருமணம் செய்ய இருக்கும் தலைவனும் அவர்களுடன் சென்றதைக் குறித்து விளக்கப்பட்டுள்ளது.

தலைவியின் பெற்றோர் வரைவு மறுத்த செய்திகளையும், ஒரே குடிக்குள் மட்டுமின்றி வேறுகுடிகளுக்குள் திருமணம் நடந்ததைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளன. முல்லை நில வாழ்க்கையில் திருமணத்திற்கென்று ஏறுதழுவுதல் நிகழ்ச்சி நடைபெற்றது. காளையினை அடக்குகின்ற ஆண்மகனை மகளிர் மணக்க விரும்பியதைக் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

கற்புடைய பெண்களால் தந்தை போற்றப்படுவதையும், தலைவன் செல்வ வளம் பெற்று சிறப்படைவதைக் குறித்தும் ஆராயப்பட்டுள்ளது. விட்டுக் கொடுத்தல், மன்னித்தல் போன்ற பண்புகளால் சங்ககாலப் பெண்கள் உறவுகளை வலுப்படுத்தினர். ஆகவே மணமுறிவு பற்றிய செய்திகள் சங்க காலத்தில் இடம் பெறவில்லை. இந்நிகழ்வுகள் இன்றைய குடும்ப உறவுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளன.

சங்ககாலத்தில் திணைகளுக்கிடையே நடைபெற்ற பண்டமாற்று வணிகம், விழாக்கள், மன்றம் போன்றவை வாழ்வுக்குத் தேவையானதாகவும், சமுதாய உறவுகளை வலுப்படுத்துவதாகவும் இருந்தது. ஐவகை நிலங்களின் அடிப்படையில் சமுதாய அமைப்பு இருந்தது. சங்ககால சமுதாய மக்கள் உயர்ந்த நாகரிகம் உடையவர்களாகவும், விருந்தோம்பல் பண்பில் சிறந்தவர்களாகவும் திகழ்ந்தனர். மகளிர் மாலைநேரத்தில் இல்லத்தில் விளக்கேற்றினர். ஊர் கூடி விழாக்கள் கொண்டாடி மகிழ்ந்தனர். சிறியவரிலிருந்து பெரியவர் வரையுள்ள அனைவரிடமும். சமூக உறவும், நட்பும் உருவாக விழாக்கள் காரணமாக இருந்தன.

அறிவார்த்தமான செய்திகளைப் பகிர்ந்து கொள்ளவும், விழாக்களின் போது கலைநிகழ்ச்சிகள் நிகழ்த்தவும் மன்றங்கள் பயன்பட்டன. கடுமையான தவறு செய்தவர்களை மன்றத்தில் அழைத்து விசாரித்து தண்டனை வழங்கினர்.

ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த மகளிர் அந்தந்த இடத்திற்கேற்ற பல்வேறு வகையான தொழில்களைச் செய்தனர். சங்ககால பொருளாதாரத்தில்

பெண்களின் ஈடுபாடு காணப்பட்டது. வேளாண்மை, தினைகாத்தல், நாற்றுநடுதல், களையெடுத்தல், அறுவடைச் செய்தல், கதிரடித்தல், நெல்லினைக் குற்றி அரிசியாக்குதல், மோர், தயிர், மீன், உப்பு விற்றல் போன்ற தொழில்களில் முனைப்புடன் ஈடுபட்டனர். தினைப்புனம் ஆண்களை விடவும் பெண்களால் அதிகமாக காவல் காக்கப்பட்டது எடுத்தியம்பப்பட்டுள்ளது.

தினைக்கொல்லையில் கதிர்களை உண்ணவரும் கிளிகளை தட்டை, தழல், குளிர் என்னும் கருவியால் விரட்டினர். பண்டமாற்றுமுறை ஐவகை நிலமக்களையும் தன்னிறைவு அடையச் செய்தது. மீனுக்குப் பண்டமாற்றாக நெல்லும், பயறும், உப்புக்கு வெண்ணெல்லும், கள்ளிற்குப் பண்டமாற்றாக யானையின் தந்தத்தையும் பெற்றனர். சிறுகுறு தொழில் முறைகளில் பெண்களின் ஈடுபாடு அதிகமாக காணப்பட்டது.

ஆடைகளை சலவைச் செய்யும் போது கஞ்சியில் தோய்த்தெடுத்து குளிர்ந்த நீரில் கழுவியது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. கைம்பெண்கள் நூல் நூற்கும் தொழிலில் ஈடுபட்டனர். கல்வியில் ஆண்களும், பெண்களும் புலமை பெற்று விளங்கினர். இது மனித சமூகத்தில் அறியாமை நீங்க வழி செய்தது. பெண்கள் வணிகத்தில் முனைப்புடன் செயல்பட்டனர். மலர்விற்றல், பனையோலைப்புட்டி செய்து விற்றல் போன்றவற்றில் நடுநிலைப் பண்புடன் செயல்பட்டனர்.

பெண்களின் கற்பு மேம்பாடு, விருந்தோம்பல், இறைநம்பிக்கை, சூளுரைத்தல், திருமணம் தொடர்பான பண்புகள் அறக்கருத்துகள் என மக்களின் பண்பாடானது இன்றைய மக்களுக்கு நல்ல பண்புகளை எடுத்துக் கூறுவதாக

அமைந்துள்ளது. மக்களின் வாழ்க்கையில் வழிகாட்டியாக அமைந்து உலகிற்கு உண்மை நிலைகளை எடுத்துரைத்து எல்லாருக்கும் எடுத்துக்காட்டாக விளங்கிய சங்கத் தமிழரின் சீரிய மரபுகளை சங்க இலக்கியத்தின் வாயிலாக இவ்வாய்வில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

## மேலாய்வுக் களங்கள்

சங்கத் தமிழரின் சமுதாய மரபுகளை கண்டறியும் இம்முயற்சி மேலும் தொடர்தற்குரியதாகும். சங்க அகப்பாடல்களில் பெண்மாந்தர்கள் வெளிப்படுத்தும் சமுதாய மரபுகள் என்ற இவ்வாய்வை அடிப்படையாகக் கொண்டு சங்ககால சமுதாய மரபுகள் என்ற வகையில் ஆய்வு மேற்கொள்ளலாம். சங்ககால சமுதாய மரபுகளை உளவியலுடன் தொடர்புபடுத்தலாம். சங்க இலக்கியத்தை காப்பியங்களுடனும், வேறு நூல்களுடனும் ஒப்பாய்வு மேற்கொள்ளலாம். உரையாசிரியர்கள் ஒப்பாய்வு செய்த நூல்களுடன் ஒப்பீடு செய்து ஆய்வு மேற்கொள்ளலாம்.